# திரு. வி. க.

(கல்கி நினைவுச் சொற்பொழிவுகள்)

அ.ச. ஞானசம்பந்தன்



கங்கை புத்தகநிலையம்

13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர்,
சென்னை – 600 017.

கங்கை முதற் பதிப்பு : மார்ச், 1995
கங்கை இரண்டாம் பதிப்பு : மார்ச், 2000

**விலை : ரூ. 40.00**

| | | |
|---|---|---|
| TITLE | : | THIRU. VI. KA. |
| AUTHOR | : | A.S. GNANASAMBANDAN |
| LANGUAGE | : | TAMIL |
| EDITION | : | GANGAI SECOND EDITION, MARCH 2000 |
| PAGES | : | viii + 230 = 238 |
| PUBLISHED BY | : | GANGAI PUTHAKA NILAYAM<br>13, Deenadayalu Street,<br>Thiagaraya Nagar,<br>CHENNAI - 600 017. |
| PRICE | : | Rs.40.00 |

Printed by M.S. **Printing Works,** Chennai-14. ✆ 822 4955

# இந்நூலாசிரியர் குறித்து
# திரு. வி.க. அவர்கள் கருத்து

## ஞானசம்பந்தர்

சரவண முதலியார் ஒரு சைவத் தமிழ்க் கடல். அக்கடலினின்றும் பிறந்த கற்பகம் ஞான சம்பந்தம். ஞானசம்பந்தர் கலைஞர்; பல திறப் பொருள் பற்றியும் பேசுவர். எழுதுவர். அதனால் அவரைக் கற்பகம் என்கிறேன்.

ஞானசம்பந்தர் பேச்சு; தமிழ்ப் பேச்சு. அப் பேச்சுக்களிடைச் சீர்திருத்தம் நுழையும். அஃது எனக்கு மகிழ்ச்சியூட்டும். ஞானசம்பந்தர் இயற்கையில் விஞ்ஞானி. அவர் தம் தந்தையார் விரும்பியவாறு 'தமிழ்' எடுத்தார் என்று கேள்வியுற்றேன்; சிறிது வருந்தினேன். தமிழ் மீது எனக்கு எவ்விதக் காழ்ப்புமில்லை. ஞான சம்பந்தர் தமிழில் பட்டம் பெறவேண்டுவ தில்லை.

ஞானசம்பந்தர் உள்ளம் பளிங்கு. அவர் உள்ளத்தில் மறைப்பே கிடையாது.

ஞானசம்பந்தர் என் தலைமையில் பல திறப்பொருள் பற்றிப் பேசியுள்ளார். அவற்றுள் சிறப்பாகக் குறிக்கத்தக்கது திருவாசகத்தைப் பற்றியது. திருவாசகத்தை அவர் விஞ்ஞானக் கண்கொண்டு பார்க்கிறார். சீர்திருத்த உள்ளங் கொண்டு நோக்குகிறார்; அக்கால மாணிக்க வாசகரை இக் காலத்தவராகக் காட்டுகிறார். ஞானசம்பந்தர் வாயிலாகத் திருவாசகத்துக்கு

ஒரு விரிவுரை வெளிவரின், தமிழ் உலகம் நலம் பெறுவதாகுமென்று யான் நம்புகிறேன்.

யான் சன்மார்க்கப் புரட்சி தேவை தேவை என்று பேசியும் எழுதியும் வருகிறேன். ஞானசம்பந்தர் புரட்சி மனப்பான்மை யுடையவர். சம்பந்தர் நாட்டுக்குப் பேராசிரிய ராகுங் காலம் வரலாம்; வரல் வேண்டுமென்பது எனது வேட்கை. எரிமலை வாளா கிடக்குமோ? அஃது என்றாதல் ஒரு நாள் தழல் உமிழ்ந்தே தீரும்.

# முன்னுரை

சென்னைப் பல்கலைக் கழகத்தார் பேராசிரியர் கல்கியின் நினைவாக ஒரு நிதியை ஏற்படுத்திக் 'கல்கி நினைவுச் சொற்பொழிவுகள்' என்ற தலைப்பில் சொற்பொழிவுகளை நிகழ்த்து மாறு செய்துவருகின்றனர். அம்முறையில் 1967ஆம் ஆண்டுக்குரிய சொற்பொழிவுகளை ஆற்றுமாறு என்னைப் பணித்தனர். 1967ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 3, 4, 5 ஆகிய நாள்களில் சென்னைப் பல்கலைக் கழக அறை ஒன்றில் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் தலைமையில் இச்சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றன.

தமிழ் முனிவர் திரு. வி.க. அவர்களுடன் இளமைக் காலந்தொட்டே மிக நெருங்கிய முறையில் தொடர்பு கொள்ளும் வாய்ப்புப் பெற்றிருந்தேன். ஓரளவு தமிழ்ப் பயின்று சொற்பொழிவாற்ற முன்வரும் இளைஞர்களை ஊக்கிவிடும் பரந்த பண்பு ஏறத்தாழ 40 ஆண்டுகளின் முன்னர் தமிழ் அறிஞர் பலரிடத்தில் இருந்ததில்லை என்றே சொல்ல லாம். இளைஞர்களைப் பார்க்கும்போது அவர்கள் கல்வியைத் தம்முடைய கல்வியோடு ஒப்பிட்டு எள்ளி நகையாடிய காலம் அது. அத்தகைய ஒரு சூழ்நிலையில் ஆண்டால் முதிர்ந்திருப்பினும் உள்ளத்தால் இளைஞராய், இளைஞர் உலகத்தோடு பெருந் தொடர்பு கொண்டு, மிகச் சிறந்த முறையில் அவர்களை ஊக்குவித்துத் தமிழ்ப் பணியையும் சமயப்

பணியையும் செய்யுமாறு செய்த பெருமை தமிழ் முனிவர் திரு. வி.க. அவர்களையே சாரும்.

சமயப் பேரவைகள் மிகவும் நிறைந்திருந்த காலம் ஆதலினாலும், இலக்கியச் சொற் பொழிவுகளுக்கே அதிகச் செல்வாக்கு இருந்த காலமாதலாலும், அந்நாளில், ஒரு சமயத்தைச் சேர்ந்தோர் தம் சமயத்தின் சிறப்பை எடுத்துக் கூறுவதைக் காட்டிலும் பிற சமயங்களைப் பற்றித் தூற்றுவதையே முன்னணி வேலையாகக் கொண்டிருந்தனர். ஒப்புநோக்கக் கூடப் பிற சமயங்களைப்பற்றிப் பேசுவது தவறு என்று கருதிய அக் காலத்தில் சைவ சபை, வைணவ சபை, கிறித்துவர் விழா, நபிகள் விழா ஆகிய அனைத்திலும் பங்குகொண்டு, இவற்றில் கார்ல் மார்க்ஸின் சமதர்மக் கொள்கையையும் கேட்பவர் விரும்பிக் கேட்கின்ற முறையில் பேசிய ஒரு பெரியார் உண்டென்றால், அவர்தாம் திரு. வி.க. இச் சபைகள் அனைத்திலும் சமரச சன்மார்க்கத்தைப் போதித்தார் அப் பெரியார்.

வடமொழி கலந்த தமிழ் பாதியும், ஆங்கிலம் பாதியுமாகத் தமிழ் என்ற பெயருடன் செய்தித்தாள்கள் வெளிவந்த அந்த நாளில் அரசியலைப்பற்றி எழுதவோ பேசவோ வேண்டுமாயின் ஆங்கிலத்தில்தான் முடியும் என்று கருதிய அந்த நாளில்—தமிழில், தம் தூய இனிய தனித் தமிழில், எவ்வளவு பெரிய அரசியல் பிரச்சினையையும் ஆய முடியும் என்ற பேருண்மையை நிலைநாட்டியவர் திரு. வி.க. முன்னைப் பழம் பொருட்கட்கு முன்னைப்

பழம்பொருளாகிய தமிழ்மொழிமூலம் பின்னைப் புதுமைக்கும் புதுமையானதாகிய சமதர்மக் கொள்கையை எடுத்து அலசி ஆய்ந்து விளக்க முடியும் என்பதைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு எடுத்துக் காட்டிய பெரியவர் திரு. வி.க. புத்தம் புதிய அரசியல் கருத்துக்களை முழு ஆவேசத்துடன் பேசி மக்களைத் தட்டி எழுப்பவேண்டுமானால் அஃது ஆங்கிலத்தின் மூலமே இயலும் என்று கருதிய காலத்தில் இந்த இராயப்பேட்டை முனிவர் ஆங்கிலம் ஒரு சொல்கூடக் கலக்காமல் ஆங்கிலப் பேச்சாளர்கள் எழுப்பிய உணர்ச்சியைக் காட்டிலும் மிகுதியாக எழுப்பினார். அரசியலில்கூடச் சமயத்தையும் சமரசத்தையும் கலந்தே வழங்கினார்.

தொழிலாளர் இயக்கம் என்ற ஒன்று, இந்தியாவைப் பொறுத்த மட்டில், கேள்விக் குறியாக மட்டுமே இருந்து வந்தது. அத்தகைய ஒன்றை நடைமுறையில் கொணர்ந்து, அகில இந்தியாவிலும் தமிழ்நாட்டில்தான் முதல் முதலில் சீரிய முறையில் தொழிற் சங்கம் ஏற்பட்டது என்ற பெருமையைத் தமிழர்க்குத் தேடித் தந்த பெருமையுடையார் திரு. வி.க.

இங்ஙனம் பல்வேறு துறைகளில் புகுந்து புறப்பட்டும், தாம் புகுந்த துறை அனைத்தையும் பொன்மயமாக்கியும், இவை ஒன்றினும் முற்றிலும் படாமல் தாமரை இலைத் தண்ணீர் போல் வாழ்ந்து, வாழ்க்கையின் பயனைப் பெற்ற இப் பெரியாரோடு நெருங்கிப் பழகிய காரணத்தால் அன்னாருடைய நூல்கட்கு

இயன்ற அளவு ஒரு திறனாய்வு எழுத வேண்டுமென்று நினைத்திருந்தேன். பல்கலைக் கழகத்தார் இத்தகைய ஒரு வாய்ப்பை அளித்தபோது என்னுடைய இந்த எண்ணம் வடிவு பெறத் தொடங்கியது. கல்கி உருவாவதற்கு ஒரு பெருங் காரணமாக இருந்த பெரியாரின் வாழ்க்கையை, அவருடைய நூல்களைப் பற்றிய திறனாய்வை 'கல்கி நினைவுச் சொற்பொழிவாக'ச் செய்வது முற்றிலும் பொருத்தமுடையதே என்று கருதி இத் தலைப்பை மேற்கொண்டேன்.

மூன்று நாள்களில் செய்யப்பெற்ற இச் சொற்பொழிவுகள் முறையே 'திரு.வி.க.வின் தமிழ்த்தொண்டு', 'திரு. வி.க.வின் அரசியல்', 'தமிழ் அறிஞர் திரு. வி.க.' என்ற மூன்று தலைப்புகளில் செய்யப்பெற்றன.

அச் சொற்பொழிவின் நூல்வடிவமே இது. பதிப்பித்த கங்கை புத்தக நிலையத்தார்க்கு என் நன்றி.

**ஆசிரியன்**

# 1

# தமிழ்த் தொண்டு

## முன்னுரை

கல்கி நினைவுச் சொற்பொழிவு வரிசையில் நிகழும் பணி இதுவாகும். தமிழ் இலக்கிய உலகில் தமக்கென ஒரு தனி இடத்தைத் தேடிக்கொண்ட பெருமையுடையவர் பேராசிரியர் கல்கியாவார். தெளிவான நடைச் சிறப்புடன் எத்தகைய ஆழ்ந்த கருத்தையும் மிக எளிய நடையில் விளக்கும் திறம்பெற்றுத் திகழ்ந்தார் அவர். அவருடைய காலத்திற்கு முன்னர் இவ்வளவு தெளிந்த தமிழ் நடையைக் காண்பது அரிதுதான். அவ்வாறானால் கல்கியின் இந்த நடைக்கு மூலம் யார்? 'தமிழ் முனிவர்' என்று போற்றிப் புகழப்பெறும் திரு. வி.க.வே அந்த மூலம் என்றால் தவறில்லை. திரு. வி.க. என்ற ஊற்றுக் காலிலிருந்து தெளிந்த தமிழ்நடை என்ற யாறு பல கால்களாக ஓடியது. அக் கால்களுள் ஒருவரே கல்கியாவார். நூற்றுக்கணக்கான தமிழ் எழுத்தாளர்களைத் தோற்றுவித்த பெருமையுடையவர் தமிழ் முனிவர். கல்கியின் நினைவாக நடைபெறும் இச் சொற்பொழிவுத் தொடரில் திரு வி.க.வின் தமிழ்த் தொண்டு பற்றியும் ஓர் உரை நிகழ்கிறது என்றால், அவ் உரை

எத்துணைச் சிறப்பற்றதாயினும், அதுபற்றிக் கவலைப் படாமல் இது நடைபெறுவதற்குப் பெருமகிழ்ச்சி அடைபவர் கல்கியே ஆவர். திரு. வி.க.வைப் பற்றிக் கல்கி எழுதியதை ஈண்டு நினைவுகூர்தல் பொருத்தமே.

"தமிழுக்கும் தமிழ் எழுத்தாளர் குலத்துக்கும் தந்தையாக இருந்தார்; தொழிலாளர் குலத்துக்குத் தாயாகி விளங்கினார்; எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய திறத்தினால் அந்தணர் திலகமாகத் திகழ்ந்தார்; 'என் கடன் பணி செய்து கிடப்பதே!' என்ற திருவாக்கை வாழ்க்கையில் கடைப்பிடித்து நடந்தார்; தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராக வாழ்ந்தார்; அன்பே சிவம் என்ற உண்மையில் வாழ்க்கை எல்லாம் திளைத்திருந்தார். இன்று அன்பிலும் சிவத்திலும் இரண்டறக் கலந்துவிட்டார் திரு. வி. கலியாணசுந்தர முனிவர்.

கவிதை மூலமாகப் பாரதியார் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் செய்த அரும்பணியைத் திரு. வி.க. தமிழ் வசன நடைமூலமாகச் செய்தார்; எழுத்தினாலும் பேச்சினாலும் அத் திருப்பணியை அவர் ஆற்றினார். இனிய எளிய செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டும் அதிக நீளமில்லாத சிறிய வாக்கியங்களை அமைத்தும் திரு. வி.க. நிகழ்த்திய சொற்பொழிவுகள், மெத்தப் படித்த அறிவாளிகளையும் ஏட்டுக் கல்வியே பயிலாத தொழிலாளிகளையும் ஒரே சமயத்தில் கவர்ந்து மெய்ம் மறந்து கேட்டுக் கொண்டிருக்கும்படிச் செய்தன."

## கல்கியின் உரைநடை

புதினம், சிறுகதை, கட்டுரை முதலிய எல்லாத் துறை களிலும் கல்கி சிறந்த முறையில் எழுதினார். அவர் கால எழுத்தாளர்களுள் அவர் ஈடும் எடுப்பும் அற்று விளங்கினார். ஆனால், இப் பல்வேறு துறைகளிலும் பொதுத் தன்மை

பெற்று விளங்குவது அவருடைய தமிழ் உரைநடை தான். அந்த உரைநடை சிறப்புற மூலகாரணமாய் அமைந்தவர் திரு. வி.க. கிருஷ்ணமூர்த்தி என்ற இளைஞர், சிறந்த எழுத்தாளர் கல்கியாக மலர்வதற்குத் தொடக்கத்தில் வழி வகுத்த பெருமை திரு. வி.க.வையே சாரும்.

## பொன்னாக்குபவர்

திரு. வி.க. என்ற மூன்றெழுத்துக்குள் ஓர் உலகமே அடங்கியுள்ளது. பஞ்சாக்கரத்தினுள் ஆன்மிக உலகம் அடங்கி இருப்பதுபோல் திரு. வி.க. என்ற மூன்றெழுத்துள் தமிழ் இலக்கணம், இலக்கியம், சமயம், சமரசம், அரசியல் ஆகிய அனைத்தும் அடங்கியுள்ளன என்று கூறினால் மிகையாகாது. 'தொட்டவற்றை எல்லாம் பொன்னாக்கும் எழுத்தாளர்' என்று கோல்ட்ஸ்மித் என்ற ஆங்கிலக் கலைஞர் ஒருவர்க்குப் பெயர் உண்டு. தமிழ் மொழியில் ஒருவர்க்கு அத்தகைய பெயர் தரவேண்டுமாயின் அவர் திரு. வி.க.வே என்று அஞ்சாமற் கூறிவிடலாம்.

தமிழ்வாணர்களுள் கவிஞர் உண்டு, உரை நடையாளர் உண்டு. சமயவாதிகள் உண்டு. சீர்திருத்தவாதிகள் உண்டு. சமரசவாதிகள் உண்டு. அரசியல்வாதிகள் உண்டு. மார்க்ஸியவாதிகள் உண்டு. தொழிலாளர் இயக்க வாதிகள் உண்டு. இவரெல்லாம் தனித் தனியே உளர். ஓரோவழி மேலே கூறிய சிறப்புகளுள் ஒன்றுக்கு மேற்பட்டு இரண்டு சிறப்புகள் பெற்றவர்களும் உண்டு. ஆனால், இவை அனைத்தையும் ஒன்றாகத் தம்முள் சுருட்டி அடக்கிய தமிழர் ஒருவர் உண்டு என்றால்— ஏன், இந்தியாவிலேயே ஒருவர் உண்டு என்றால்— அவர் திரு. வி.க. ஒருவரேயாம். அவருக்கு முன்னும் இத்துணைச் சிறப்புடையார் ஒருவர் வாழ்ந்ததில்லை. இன்றும் அத்தகையார் ஒருவரைக் காணவில்லை. நாளை வருவாரோ ஏதோ அறியோம்.

## அன்றைய நிலைமை

இன்றைக்கு (1967) எண்பத்து நான்கு ஆண்டுகட்கு முன்னர் இத்தமிழ் மண்ணிடைத் தோன்றினார் திருவாரூர் விருத்தாசலம் கலியாணசுந்தரனார்.

மெட்ரிக்குலேஷன் தேர்வை அடைவதற்கு முன்னரே பொது வாழ்வில் ஈடுபட்டுவிட்டார் திரு. வி.க. எனவே, ஏறத்தாழ அரை நூற்றாண்டுக் காலம் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற மறைமொழியை வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தார். இப் பெரியாரின் எல்லாத் தொண்டுகளும் தமிழுடன் தொடர்புடையன. தமிழோடு இசை பாடல் மறவாமலேயே எல்லாத் துறைகளிலும் புகுந்தவிடத்தை யெல்லாம் பொன்னாக் கினார். அவ்வாறானால் இவர் தோன்றுவதற்கு முன்னர்த் தமிழ் நாடு எத்தகைய நிலையிலிருந்தது என்பதைக் காண்டல் வேண்டும். தமிழ்நாடும் தமிழ்மொழியும் அன்றிருந்த நிலையை அறிந்துகொண்டால்தான் திரு. வி.க.வின் தொண்டு எத்தகைய தனித்தன்மை வாய்ந்தது என்பதை அறிய முடியும்.

## இரு பெரும் பிரிவுகள்

அன்றைத் தமிழ்நாட்டில் இரண்டு பெரும் பிரிவுகள் இருந்தன. ஒன்று தமிழ் மட்டும் அறிந்தோர் கூட்டம்; ஏனையது ஆங்கிலம் மட்டும் அறிந்தோர் கூட்டம். ஆங்கிலம் மட்டும் அறிந்தோர் என்று கூறினவுடன் இவர்கள் பிற நாட்டவரோ என்று நினைத்து விட வேண்டா. இவர்களும் தமிழர்களே. ஆனால் எனக்கு **'டமில் வராது' என்று கூறுவதில் பெருமையடையும் திருக்கூட்டம்** இது. முதலாவது பிரிவினரை எடுத்துக் கொண்டால், அவருள் ஆயிரம் உட்பிரிவுகள். சாதிப்பிரிவுகள் ஒருபுறம்; சமயத்தாலும் கல்வியாலுமே பிரிவினை எய்தியவர் ஒருபுறம். விவிலிய நூலைத் தமிழாக்கஞ் செய்த ஆறுமுக நாவலர் போன்ற மாபெரும் அறிவாளிகள்கூட, அருட்பா மருட்பாப்போரில் இறங்கி

நீதிமன்றம் வரை செல்லத் துணிந்த காலம். இலக்கணப் புலவர்கள், இலக்கியப் புலவர்களை எள்ளி நகையாடவும், இவர்களிருவரும் சமயவாதிகளைக் கண்டு நகையாடும் காலம் ஆகும் அது. ஆனால், இவர்கள் அனைவரிடையேயும் உள்ள பொதுத்தன்மை யாதெனில் இவர்கள் அனைவரும் பழமை என்னும் குட்டையில் ஊறிய மட்டைகள். தம்முள் எத்துணை முரண்பாடிருப்பினும் புதுமையை மறுப்பதில் ஒன்றாகச் சேர்ந்து தொல்காப்பியனார் கூறியபடி, ‘கற்சிறை போல் ஒருவன் தாங்கிய சிறப்பை’ உடையவர்கள். தடி கொண்டு சென்று மக்களுக்குச் சைவ சித்தாந்த, விசிட்டாத்து வைத உண்மைகளைப் போதித்த காலம் அது. பெருமாள் கோயில் யானைக்குத் தென்கலை நாமம் இடுவதா? வடகலை நாமம் இடுவதா? என்பது பற்றிய வாதத்தை, இரண்டையுமே அறியாத ஆங்கில ‘நீதிவான்’களிடம் முறையிட்டு, அவர் கூறும் முடிவுக்கு ஏங்கி நின்ற காலம் அது. அடிமை மனப்பான்மையில் ஊறிப்போயிருந்த தமிழர்களின் இந்தச் சமயச் சண்டைதான் திரு. வி.க.வின் பள்ளிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

## திருவருளின் தலையீடு

இத்துணைக் காலம் கடந்து அந்த நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்கும்பொழுது இறைவனின் திருவுள்ளம் என்றே நினைக்கத் தோன்றுகிறது. கதிரைவேற் பிள்ளைக்குச் சான்று கூறச் செல்லவேண்டிய நிலை ஏற்பட்டிருக்க வில்லையானால் திரு. வி.க.வின் பள்ளிப் படிப்புத் தொடர்ந்து, கல்லூரிப் படிப்பாக மலர்ந்து ஒரு சிறந்த ஆங்கில அறிஞரைத் தமிழ்நாடு பெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால், தமிழ்நாட்டில் ஆங்கில அறிஞர்க்குப் பஞ்சமே இல்லை. திரு. வி.க.வின் காலத்து வாழ்ந்த ஆங்கில அறிஞர்கள் இன்று பொய்யாய்க் கனவாய்ப் பழங்கதையாய் மெல்லப் போய்விட்டனர். தம் கல்வி தடைப் பட்டதால்

ஓரளவு பொருளாதார நட்டம் அடைந்தார் திரு. வி.க. ஆனால், அவர் ஒருவருடைய நட்டம் தமிழ் நாட்டிற்கும், தமிழ் மொழிக்கும், தமிழர்க்கும் எத்தகைய பெருவாய்ப்பாய் அமைந்து விட்டது! விதை, தான் அழுகித் தானே பயனுடைய மரத்தைத் தோற்றுவிக்க வேண்டியுள்ளது. அதுபோலக் கலியாண சுந்தரனார் என்ற தனி மனிதர் அடைந்த பொருளாதார நட்டம் தமிழ்மொழி சிறக்கவும், தமிழர் வாழ்வில் சமரசம் மலரவும், ஆங்கிலமறியாத தமிழர் காந்திய வாதத்தையும் மார்க்ஸியத்தையும் உணரவும் வாய்ப்பளித்தது. தமிழ்நாட்டின் தவம் திரு. வி.க.வின் கல்விக்குத் தடை விதித்தது.

## தீமையில் விளைந்த நன்மை

இதில் வியப்புக்குரியது யாதெனில் இத்துணைச் சமயச் சண்டைகள் மலிந்துள்ள காலத்தில்தான் திரு. வி.க.வின் சமரசம் மலர்ந்தது. அதைவிடச் சிறந்த ஒன்றும் நிகழ்ந்தது. கதிரைவேற்பிள்ளையை வழக்குக்கு இழுத்தவர்கள் இராம லிங்க வள்ளலாரின் கட்சி என்று தம்மைக் கூறிக் கொள்பவர்கள். எனவே, கதிரைவேற்பிள்ளைக்கு மிகவும் உற்றவரான திரு. வி.க.விற்கு இராமலிங்க வள்ளலாரிடத்தும் அவரைச் சேர்ந்தவர்கள் என்று தம்மைக் கூறிக் கொள்பவர் களிடத்தும் பகைமை மூளுதல் மிகவும் நியாயமானதே. தம் படிப்பையும் வாழ்வில் முன்னேற்றத்தையும் கெடுத்தவர்கள் வள்ளலார் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று திரு. வி.க. நினைத்து வருந்திப் பகைமை கொள்ளக் காரணம் நிரம்ப உண்டு. ஒருவேளை இதனாலேயே எதிர்க் கட்சிக்காரர்களின் மூலவராகிய வள்ளலார் எத்தகையவர் என்று அறிந்து கொள்ளும் நோக்கத்தில் திரு. வி.க. அருட்பாப் பாடல்களைக் கற்கத் தொடங்கியிருக்கலாம். என்ன நினைத்து அருட்பாவை எடுத்தாரோ நாம் அறியோம். ஆனால், அதனால் விளைந்த பயன் மட்டும் நன்கு தெரிகிறது.

## கடலாழங்காணும் சர்க்கரைப் பொம்மை

இராமலிங்க வள்ளலாரின் வலையிற் சிக்குண்ட (கதிரைவேலனாரின் மாணாக்கராகிய) திரு. வி.க. கடலின் ஆழங் காண முற்பட்ட சர்க்கரைப் பொம்மையாக ஆகி விட்டார். பொம்மை கடலில் கரைவது போலத் திரு. வி.க.வும் அருட்பாக் கடலில் தம்மை இழந்துவிட்டார். அதிலும் சிறப்பாக ஆறாந் திருமுறையில் முற்றிலும் ஈடுபட்டு விட்டார். கலியாணசுந்தரனார் என்ற அறிஞரின் தற்போதம் முழுவதையும் தன்னுள் கரைத்துக் கொண்டது ஆறாந் திருமுறை. அருட்பாக் கடலைக் கடைந்து அவர் எடுத்த அமுதமே **'இராமலிங்கர் திருவுள்ளம்'** என்ற நூலாகப் பரிணமித்தது.

## முத்துக் குளிப்பவர்

சமரசம் போதிக்கும் அருட்பாவைக் கற்ற பலர், அந்த உபதேசத்திற்கு முற்றிலும் விரோதமாக, மிகக் குறுகிய நோக்கமுடையவர்களாய், நால்வர் போன்ற சமய குரவர்களை மதிக்காத் அகங்காரமுடையவர்களாய் நிற்றலைக் காண்கிறோம். ஆனால், அறிஞர் திரு. வி.க.வோ அருட்பாக்கடலில் குளித்து அதனுள் சிறந்த முத்துகளை எடுத்தார். வள்ளலார் ஞானசம்பந்தரைக் குருவாகக் கொண்டிருந்தார் என்ற பேருண்மையை அறிந்து வெளியிட்டார். இதிலிருந்து விளங்கும் ஒரு பேருண்மையை நாம் மறந்து விடலாகாது. ஏனையோர் கண்டுங் காணாத பேருண்மைகளைக் காணும் ஆற்றல் பெற்றவர் திரு. வி.க. என்பது நன்கு விளங்கும்.

## இருவகை எழுத்தாளர்

சமயப் பூசல் மிக்கிருந்த காலத்தில் அப் பூசலினிடையே தோன்றிய இவ்வறிஞர் அப் பூசல்களைக் கடந்து அப்பாற் சென்று சமரசம் காணும் பெரியாராக விளங்கினார். இதே போன்று மற்றத் துறைகளிலும் இவர் புதுமை வகுத்து

விளங்கியதைக் காண்டல் கூடும். உரைநடை இலக்கியம் படைப்பதிலும் திரு. வி.க. அற்றை நாளில் பெருவழக்காக இருந்த முறையை மாற்றியமைத்தார். பிறருக்குப் புரியாத முறையில் பேசுவதும் எழுதுவதுமே சிறந்த தமிழ்நடை என்று கருதிய காலம் அது. பிறர்க்குப் புரியக்கூடாது என்ற கருத்துடன் எழுதியவர்களல்லர் அக்காலத் தமிழறிஞர்கள். அவர்கள் எண்ணத்தின்படி, கடினமான சொற்களைப் பயன் படுத்துவதே சிறந்த தமிழ்நடை என்பதாம். உதாரணமாக மிகச் சிறந்த அறிஞராகிய வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் (பரிதிமாற் கலைஞர்) கைக்கொண்ட நடையையும், மறைமலையடிகளார் கைக்கொண்ட நடையையும் கூறலாம். இத்தகைய நடையை அப்பெரியார்கள் மேற்கொள்வதற்கு வட மொழிக் கலப்பை நீக்கித் தூய தமிழில் எழுத வேண்டும் என்பதும் ஒரு காரணமாகும். அவ்வாறு தூய தமிழில் எழுதும்பொழுதும் எளிய சொற்களை விட்டுக் கடினமான சொற்களையே பயன்படுத்தினர். அவர்கள், எளிய சொற்கள் பல்லோராலும் பயன்படுத்தப் பெற்றமையின் சிறந்த கருத்துகளை வெளியிட அவை பயன்பட மாட்டா என்று கருதினர் போலும்.

இதன் எதிராக மற்றொரு கூட்டமும் இயங்கி வந்தது. முன்சீப் வேதநாயகம் பிள்ளை, மாதவையா போன்றவர்கள் இக் கூட்டத்தின் முன்னோடிகள் எனலாம். இவர்கள் நடை மிக எளிமையானதாய் யாவரும் கற்றுப் பயனடையக் கூடியதாய் அமைந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், இவர்கள் நடையில் வடசொற்கள் அளவு மீறிக் கலந்திருந்தன என்பதையும் மறுத்தல் இயலாது. இதுபற்றிப் பின்னர்ச் சற்று விரிவாகக் காணலாம்.

## தமக்கென ஒரு தனி வழி

இந்த இருவகைத் தமிழ்நடையும் உலவிவந்த நாளில் திரு. வி.க. அவர்கள் இவை இரண்டிலும் காணப்பெற்ற

சிறப்புகளை மட்டும் கைக்கொண்டு ஒரு புதிய தமிழ்நடையைத் தோற்றுவித்தார். அந்த நடையில் வடசொற்கள் மிகுதியும் காணப்பெறா; என்றாலும் யாவரும் படித்துப் பயனடையக்கூடிய சிறப்பும் அதிலிருந்தது. தமிழ்நடையைப் பொறுத்த மட்டில் இரண்டு மாறுபட்ட பழமைகளிலிருந்து, ஒற்றுமைப்பட்ட ஒரு புதுமையை தமக்கென ஒரு தனி வழியைக் கண்ட அறிஞர் திரு. வி.க.

## தமிழறிஞர் நுழையாவிடம்

அவர் காலத்துக்கு முன்னர்த் தமிழறிஞர் அரசியலில் புகுவது என்பது கனவுகூடக் காணமுடியாத ஒன்றாகும். ஆங்கிலம் அறிந்தவர்களே அரசியல் அறியமுடியும் என்று அனைவரும் நம்பினர். அரசியல் பற்றி எழுதினாலும் பேசினாலும் அதனை ஆங்கிலத்திலேயே செய்தனர். ஓரோவழித் தமிழில் எழுத அல்லது பேச நேர்ந்தாலும் கால் பங்குத் தமிழும் முக்காற் பங்கு ஆங்கிலமும் விரவியே எழுதியும் பேசியும் வந்தனர். இந்தக் காலத்தில் தோன்றிய திரு. வி.க. ஓர் உண்மையை நன்கு அறிந்து கொண்டார். மொழி என்பது மனிதனின் எண்ணத்தை வெளியிடும் கருவி மட்டுமன்று; அது அவனுடைய உணர்ச்சிகளுடன் பின்னிப் பிணைந்து கிடப்பதாகும். ஒரு மனிதனுடைய உணர்ச்சியைத் தூண்ட வேண்டுமானால் அதை அவனுடைய தாய் மொழி மூலம் செய்யமுடியுமே தவிரப் பிற மொழி மூலம் செய்ய இயலாது. இந்த நுணுக்கமான மனவியலை அறிந்து கொண்ட எழுத்தாளர் திரு. வி.க. தமக்கெனவே தூய எளிய தமிழில் ஒரு நடையை வகுத்துக் கொண்டார். எத்துணை நுட்பமான கருத்தையும் கேட்போர் உளத்திற் சென்று தைக்கும் முறையில் எழுதவும் பேசவும் அவரால் முடிந்தது. இதுவும் அவர் செய்த புரட்சிகளுள் ஒன்று. இரண்டு முரண்பட்ட கூட்டத்தாரையும் இணைக்கும் பாலமாக விளங்கினார் திரு. வி.க.

இத்துணைச் சிறப்புகளும் வாய்ந்த அப் பெரியார் புகாத் துறை இல்லை. புகுந்தவிடத்தைப் பொன்னாக்காமல் விடவுமில்லை. இருபதாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் தோன்றிய பெரியோர்கள் பலர். அவர்கள் அனைவரும் ஒவ்வொரு துறையை மேற்கொண்டு அத்துறையில் மிகச் சிறந்த பணியாற்றினர். ஆனால், எல்லாத் துறைகளிலும் புகுந்து ஒப்பற்ற முறையில் தனி வழி வகுத்துக் கொண்டு அருந் தொண்டாற்றிய பெரியார் ஒருவர் உண்டு என்றால், அவர்தாம் திரு. வி.க.

## தொண்டர் இருவகை

தொண்டாற்றிய பெரியோர்களையுங்கூட அவர்கள் செய்த தொண்டின் அடிப்படையில் இருவகையாகப் பிரிக்கலாம். முதல் வகையார் தாம் மேற்கொண்ட தொண்டில் முற்றிலும் தம்மை அமிழ்த்துக் கொண்டவர். இரண்டாம் வகையார் தாம் என்ற நிலை மாறாமலேயே தொண்டைச் செய்பவர்கள். இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தவர்கள் உலகியல் முறையில் தம் வளர்ச்சியை விட்டுக் கொடாமலே தொண்டாற்றினர். இவ்வாறு கூறுவதால் அவர்கள் செய்த தொண்டைக் குறைத்து மதிப்பிடுவதாக எண்ணுவது தவறு. வகைப்படுத்திப் பேசுவதே என்னுடைய நோக்கமாகும். மகா மகோபாத்யாய டாக்டர் உ.வே. சுவாமி நாதையர், மறைமலையடிகள், கா. நமச்சிவாய முதலியார் போன்றவர் இந்த இரண்டாம் இனத்தைச் சேர்ந்தவர்கள். திரு. வி.க., கவியரசர் பாரதியார் போன்றவர்கள் முதலினத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் மேற்கொண்ட தொண்டில் தம்மையே அமிழ்த்துக் கொண்டமையின் உலகியல் முறையில், பொருளாதார முறையில் முன்னேற்றம் பெறாமற் போய்விட்டனர். இவர்களுடைய தொண்டு எஞ்சிற்றே தவிர இவர்கள் எஞ்சவில்லை. இவர்களைச் சேர்ந்தவர்கள், இவர்கள் குடும்பத்தார் என்பவர்கட்கு

இவர்களால் எவ்வித உலகியற் பயனும் ஏற்படவில்லை. இது சரியா தவறா என்பது இங்கு வினாவன்று. நடைமுறையில் உள்ளதை அப்படியே எடுத்துக் கூறுவதே என் நோக்கமாகும்.

## குறிக்கோள் வேண்டும்

வாழ்க்கையில் ஒவ்வொருவர்க்கும் ஒரு குறிக்கோள் வேண்டும். இக் குறிக்கோள்கள் தம்மில் மாறுபடலாம். ஆனால், குறிக்கோள் இல்லாத வாழ்க்கை பயனற்ற விலங்கு வாழ்க்கையாகும். 'குறிக்கோள் இலாது கெட்டேன்' என்று நாவுக்கரசர் பெருமான் பாடிச் செல்கிறார். வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற குறிக்கோளே பலர்க்கும் உண்டு. ஆனால், முன்னேற்றம் என்பது பற்றிக் கவலையுறாமல் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர் சிலர். இவர்களையே பெரியோர்கள் என்று அறிவுலகம் போற்றுகின்றது. தொண்டாகிய குறிக்கோளை மேற்கொண்டு வாழ்பவர் வாழ்க்கையில், ஒன்றும் எஞ்சுவதில்லை. பல சமயங்களில் அவருடன் வாழ்பவர்கள், இத் தொண்டர் களைப் 'பைத்தியக்காரர்கள்', 'பிழைக்கத் தெரியாதவர்கள்' என்றெல்லாம் ஏசுவதுமுண்டு. உலகத்தாரால் எவ்வாறு ஏசப் பெற்றாலும் ஒன்று மட்டும் உறுதி. தம்மையே அழித்துக் கொண்டு தொண்டு செய்யும் இப் பெரியார்கள் இல்லை யானால் உலகம் வாழ முடியாது. இது கருதியேதான் புற நானூற்றுக்காரர் 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்ற பாடலில் 'தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கு என முயலுநர் உண்மையானே, உண்டால் அம்ம இவ்வுலகம்'[1] என்று பேசுகிறார். வள்ளுவப் பெருந்தகையும் 'பண்புடையார்ப் பட்டு உண்டு உலகம் அஃது இன்றேல் மண்புக்கு மாய்வது மன்'[2] என்று கூறிப் போனார்.

1. புறம், 182
2. குறள். 996

## மனிதன் செய்த பணி

உலகம் தோன்றிய நாளிலிருந்து அதன் வளர்ச்சிக்கு மனித சமுதாயம் இயன்றவரை உதவி புரிந்தும், கேடு சூழ்ந்து வந்துள்ளது. மனிதன் உணர்வின் துணைகொண்டு உதவி செய்தும் உள்ளான்; அறிவின் துணைகொண்டு உதவியும் கேடும் சூழ்ந்துமுள்ளான். அறிவின் துணைகொண்டு மானிட சாதிக்குப் பயன் தரும் என்ற கருத்தில் காணப்பெற்ற விஞ்ஞானப் புதுமைகள் அம் மனிதன் வளர்ச்சிக்கு உதவி செய்யாமல் அவன் அழிவுக்குக் காரணமானதும் உண்டு. அறிவினால் காணப்பெற்ற விஞ்ஞானப் புதுமைகள் தேன் தடவிய வாள் முனைபோல இரண்டுக்கும் பயன்பட்டன. நன்கு பயன்படுத்தப்பெற்றால் அவை சமுதாயத்திற்கு நற்பயன் விளைத்தன; தவறாகப் பயன்படுத்தினால் அதே புதுமைகள் மனித சமுதாயத்திற்குத் தீமையும் புரிந்தன.

## உணர்வுப் பணி

இதன் எதிராக உணர்வின் துணையுடன் செய்யப் பெற்ற பணியில் தீமையின் கலப்பே இல்லை. இத்தொண்டு சிறிதாகவோ, பெரிதாகவோ இருக்கலாம். அதன் பயன் உடனேயும் கிட்டலாம்; இன்றேல் பன்னெடுங்காலம் கழித்தும் கிட்டலாம்; என்றாலும் இத்தொண்டால் விளையும் பயன் மட்டும் நல்லதாகவே இருக்கும். புத்தர், இயேசு, ரிஷப தேவர், ஞானசம்பந்தர், நம்மாழ்வார், இராமகிருஷ்ண பரமஹம்சர், மகாத்மா காந்தி போன்றவர்கள் செய்த பணி அல்லது தொண்டு இவ்வகையைச் சேர்ந்தது. விஞ்ஞானப் புதுமைகள் போல் இவர்கள் தொண்டின் பயன் நேரிடையாகச் சமுதாயத்திற்குக் கிட்டியதில்லை. அது உடனடியாகக் கிடைப்பதுமில்லை. என்றாலும் இப் பெரியார்கள் செய்யும் தொண்டை உலகம் மறப்பதில்லை; நன்றிக்கடன் செலுத்தாமல் இருப்பதுமில்லை. உண்மையைக் கூறவேண்டுமானால் இவர்களைத்தான் தொண்டர்கள்

என்று கூறுகிறோம். வேறு எவ்விதப் பணி புரிபவர்களையும் அதாவது சமுதாயத்திற்கு அவ்வப்போது தேவைப்படும் உதவிகளை, விஞ்ஞானப் புதுமைகளைச் செய்து தருபவர்களைத் தொண்டர்கள் என்று கூறும் பழக்கம் இல்லை.

## கற்பூரத் தொண்டர்

தம்மையே தொண்டில் அழித்துக்கொண்டு மானிடச் சமுதாயத்திற்குத் தொண்டு புரிவோரை மட்டுமே தொண்டர்கள் என்று கூறுகிறோம். இவர்கள் செய்யும் தொண்டு எந்த வகையைச் சேர்ந்ததாயினும் சரி, மக்கள் பசிப்பிணியைப் போக்குவதிலிருந்து மனவிருளை ஓட்டும் இலக்கியத் தொண்டு, மொழித் தொண்டிலிருந்து, நாட்டு மக்களைத் தட்டி எழுப்பும் தேசத் தொண்டிலிருந்து, அஞ்ஞானத்தை ஓட்டும் ஆன்மிகத் தொண்டுவரை அனைத்தும் ஒரே வகையைச் சேர்ந்தவையாகும். எந்த வகையைச் சேர்ந்ததாயினும் இவ்வகைத் தொண்டு புரிவோர் கற்பூரம் போல் இறுதியில் தாம்கூட எஞ்சுவதில்லை.

## திரு. வி.க.வே தொண்டு

திரு. வி.க. அவர்கள் இந்த வகைத் தொண்டரே ஆவார். மேலே கூறிய அனைத்துத் தொண்டுகளையும் அவர் செய்துள்ளார் என்றால், அவ்வாறு செய்ததில் தான் என்ற ஒரு முனைப்பே இல்லாத முறையில் செய்தார் என்றால் அவரைவிடச் சிறந்த ஒரு பெரியவரைக் காண்டல் கடினம். திரு. வி.க. என்ற மூன்றெழுத்துக்களை மாற்றி வேறு ஒரு பெயர் தரவேண்டுமெனில் 'தொண்டர்' என்ற பெயரே முற்றிலும் பொருந்துவதாகும். இத்தொண்டுள்ளத்தைப் பெற்றமையாலேயே அவரால் இத்துணைப் பெரிய சாதனையை நிகழ்த்த முடிந்தது. தமிழர், தமிழ் இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் அருந் தொண்டாற்றிய அப்பெரியாரின் தொண்டைச் சற்று விரிவாக ஆராயலாம்.

## எத்தகையவர்?

திரு. வி.க. என்ற மனிதர் எத்தகையவர்? கல்வியாலும், நாட்டுப் பற்றாலும், தொண்டுள்ளத்தாலும் மிகப் பெரியவ ராக விளங்கினார் அப் பெரியார். இதன் மேலும் வேறு என்ன வேண்டும் என்று பலரும் நினைக்கலாம். இவை அனைத்தும் இருந்துங்கூட அவ்விடத்தே மனிதத்தன்மை இல்லாமல் இருக்கலாம். அவ்வாறாயின் மனிதத்தன்மை என்பது யாது? பிற உயிர்களை ஒருவன் எவ்வளவு தூரம் அன்பினால் அணைக்கிறானோ, அவ்வளவு தூரம் மனிதத் தன்மையில் மேம்படுகிறான். கம்பநாடன் கண்ட இராமனிடம் வீரம் முதலியன மேம்பட்டிருந்தன. ஆனால், அவை அனைத்தையும்விட மனிதத்தன்மை மிக்கிருந்ததைக் கவிச்சக்கரவர்த்தி பாரதியார் காண்கிறார். 'Humanism' என்ற ஆங்கிலப் பதத்திற்கு நேர் சொல்லாக 'மானிடம்' அல்லது 'மனிதத் தன்மை' என்பதைக் கூறலாம். மானிடத் தன்மையை இராமன்மாட்டு ஏற்றி அவனைத் தெய்வத் தன்மை உடையவனாக ஆக்கிய பெருமை கம்பனைச் சாரும். இதனை நன்குணர்ந்த பாரதியார் கம்பனைப்பற்றிக் கூற வேண்டிய இடத்தில் 'கம்பன் ஒரு மானிடன் வாழ்ந்ததும், காளிதாசன் கவிதை புனைந்ததும்' என்று கூறினார். கம்பநாடனுக்கு 'மானிடன்' என்ற பட்டப் பெயரே முற்றிலும் பொருந்தும் எனக் கண்டார், நம் காலத்தில் வாழ்ந்த கவியரசர்.

## மானிடம் நிறைந்தவர்

இத்தகைய 'மானிடம்' அல்லது 'மனிதத் தன்மை' யாரிடம் நிறைந்துள்ளதோ அவர்களையே பெரியார் என்று உலகம் போற்றுகிறது. இந்த இயல்பைத் தம் மாட்டுப் பெற்றவரிடம், கல்வி முதலிய வேறு சிறப்புகள் இருக்கின் றனவா என்று உலகம் எதிர்பார்ப்பதில்லை. இயேசுநாதர் போன்ற பெருமக்களிடம் கல்வி போன்ற சிறப்புகள் இல்லை

என்பது உண்மைதான். ஆனால், கல்வியால் மிக்கவர்களை உலகம் போற்றுவதைக் காட்டிலும் 'மானிடத் தன்மை' நிறைந்திருந்த இயேசுநாதர் போன்றவர்களை அறிந்து அதிகம் போற்றியுள்ளது. கல்வி போன்ற வழிகள் (சாதனங்கள்) மனிதன் மானிடத் தன்மையைப் பெறுவதற்கு உதவுபவை களே தவிர அவையே பயனல்ல. ஆனால், யாராவது ஒரு மனிதன் இந்த வழியை மேற்கொள்ளாமலும் அந்தப் பயனை அடையக்கூடுமாயின் அத்தகைய மனிதனிடம் எந்த வழியின்மூலம் இந்தப் பயனை அவன் அடைந்தான் என்று யாரும் கேட்பதில்லை. இராமகிருஷ்ண பரமஹம்சர் போன்ற வர்கள் கல்வியாகிய வழியை மேற்கொள்ளாமலே 'மானிடத் தன்மை' என்ற பயனைப் பெற்று விட்டனர். விவேகானந்தர் போன்றவர்கள் கல்வியாகிய சாதனத்தையும் பூரணமாகப் பெற்று அதன் பயனாகிய மானிடத் தன்மையையும் பெற்றிருந்தனர். வழி, பயன் என்ற இவை இரண்டனுள் வழியைப் பின்பற்றாமல் பயனைப் பெறுவது தான் இன்றியமைய.ாதது.

## வழியும் பயனும்

திரு. வி.க. அவர்கள் வழி, பயன் என்ற இரண்டையும் பெற்றிருந்தார். ஆனால், வழியாகிய கல்வியைப் பெற்றவர் அனைவரும் பயனாகிய மனிதத் தன்மையைப் பெறுவர் என்று கூறல் இயலாது. பயனை அடைய முடியாத கல்வி உண்மையான கல்வியே அன்று. இத்தகைய கல்வி பெறுதல் பயனை அளிக்காது போவதுடன் மனிதனைத் திசை மாற்றியும் விட்டுவிடுகிறது. வீணான அகங்காரம் முதலிய வற்றை மனிதன் பெறுமாறும் செய்துவிடுகிறது. பயனைத் தராத கல்வி வீண் சுமையாகவே அமைந்துவிடுகிறது. இத்தகைய கல்வியை மனத்தில் நினைத்துத்தான் மணி வாசகப் பெருமான் 'கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்' என்றும் கூறிப் போனார். தாயுமானவ அடிகளும் 'கற்றார்

களினும் கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்; கற்றும் அறிவில்லாத என் கன்மத்தை என் சொல்லுவேன்' என்று கூறிப்போனார்.

## பயன்தரும் வழியாம் கல்வி

திரு. வி.க. போன்றவர்கள் கற்ற கல்வி மானிடமாகிய பயனைத் தந்த கல்வியாகும். மானிடமாவது யாது? 'எவ்வுயிரும் தம் உயிர்போல் எண்ணி உள்ளே ஒத்து உரிமை உடையவராய் உவக்கின்றார்' எவரோ அவரே மானிடத் தன்மை நிறைந்தவர் ஆவார். இப் பாடலைப் பாடியருளிய இராமலிங்க வள்ளலாரும் கல்வியுடன் மானிடத் தன்மை நிறைந்தவராகவே இருந்தார். இத்தன்மை நிறைந்தவர்கள் பிற உயிர்கள் படும் துன்பத்தைக் கண்டு மனம் சகியார்கள். பிற உயிர்கள் என்று குறிப்பிட்டுள்ளதைக் கூர்ந்து கவனித்தல் வேண்டும். பிற மக்கள் என்று கூறாமல் உயிர்கள் என்று கூறியது ஒரு காரணம் கருதியேயாகும். தம்மைப் போன்ற மக்கள் படும் துயரைப் போக்க முன் வருபவருள் பலர் உயிர் வருக்கத்துள் தாழ்ந்த படியில் இருக்கும் விலங்கு முதலியவற்றிடம் கருணை காட்டுவதில்லை. ஆனால், மானிடத் தன்மை மிக்குடையார் உயிர் வருக்கத்துள் வேற்றுமை பாராட்டுவதில்லை. ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை அனைத்தையும் ஒன்றாகவே கருதுபவர்கள் இவர்கள். மானிடத் தன்மை பெற்றிருப்பதற்கு இதுவே அடையாள மாகும். மனிதருள் தாழ்ந்த நிலையினனான குகன், அரக்கருள் ஒருவனாகிய வீடணன், விலங்குகளுள் ஒருவனாகிய சுக்ரீவன் ஆகிய மூவரையும் தன் சோதரர்களாக இராமபிரான் ஏற்றுக் கொண்டான். விலங்குகளின் இயல்பு மனித இயல்பினின்றும் வேறுபட்டது என்பதை நன்கு அறிந்திருந்தும் இராமபிரான் அவற்றை ஏற்றுக்கொள்கிறான். இலக்குவனிடம் சுக்கிரீவனைப் பற்றிப் பேசும்போது,

"பித்தாய் இவ் விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ?"[1] என்று பேசும்பொழுது, அவற்றின் தாழ்ந்த இயல்பை இராமபிரான் நன்கு அறிந்துள்ளான் என்பதையும் அறிகிறோம். என்றாலும், அவற்றைத் தன் உடன்பிறப்பாகக் கொண்டு அவ்வாறே நடத்துவதையும் தவறாகக் கருதவில்லை அப் பெரியோன்.

## மானிடத்தின் வெளிப்பாடு

இத்தகைய மனநிலையை யார் பெற்றிருப்பினும் அவர்களை மானிடத் தன்மை நிரம்பியவர்கள் என்றே கூறுகிறோம். இராமலிங்க வள்ளலார் 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்று பாடுவதை நாம் அறிவோம். ஓரறிவுயிராகிய பயிர் வாடுவது கண்டு உளம் வருந்தும் ஒருவர் எத்தகையவராக இருத்தல் கூடும்? உறுதியாக அவர் மானிடத் தன்மை நிரம்பியவராகவே இருத்தல் வேண்டும். இதே மனநிலை காரணமாகத்தான் அப் பெரியார் கொலையையும் ஊன் உண்பதையும் வெறுத்து, கண்டித்து ஒதுக்கியுள்ளார். பிம்பிசாரனுடைய வேள்விக்கு ஓட்டிச் செல்லப்படும் ஆட்டுக் குட்டியின்பால் எல்லையற்ற இரக்கங்கொண்டு அவ் ஆட்டிற்குப் பதிலாகத் தன்னையே பலி இடலாம் என்று புத்ததேவன் வாதாடிய பொழுது அப் பெருமானிடம் நிறைந்துள்ள இந்த மானிடத் தன்மையைத் தான் காண்கிறோம்.

## யாரோடும் பகை கொள்ளாதவர்

பிற உயிர்களைத் தன் உயிர்போல் அன்பு செய்வதே மானிடத் தன்மை என்றால் திரு. வி.க. ஒரு மானிடராகவே வாழ்ந்தார். அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் ஓர் உண்மையை அறிந்திருப்பர். யாரையும் அவர் வெறுத்த தில்லை; யாருடனும் காழ்ப்போ பகையோ கொண்டது மில்லை. முன்பின் அறிமுகம் இல்லாதவர் மாட்டும் அவர்

1. கம்பன் 3977

காட்டிய அன்பின் பெருக்கத்தை நேரே கண்டவர் மறக்க ஒண்ணாது. அவர் காலத்தே அவரை வாழ்த்தியவர் பலர் உண்டு; தூற்றியவர்களும் நிரம்ப உண்டு. வாரந்தோறும் அவரை மிகக் கேவலாகத் தாக்கியும் இழித்தும் எழுதிய வர்களும் பேசியவர்களும் உண்டு. அவர்கள் தாக்குதலையும் இழிப்புரையையும் பொருட்படுத்தாமல் அவர்கள் எழுப்பிய வினாக்கட்கு மட்டும் விடை எழுதிய பொறுமையாளர் திரு. வி.க. மறுப்பு எழுதும்போதுகூட மறந்தும் ஒரு சொல் கடுமையாக எழுத மாட்டார். கடிந்துரைத்தல் என்பது அவரால் முடியாத ஒரு செயலாகும். தம்மாட்டுப் பகைமை பாராட்டுபவர்களிடமும் அன்பு நிறைந்தவராய் அவர் மாட்டுக் காணப்பெறும் தவறுகளை எடுத்துக்காட்டித் திருத்த முயன்ற பெரியார் அவர். யாராயிருப்பினும் எத்துணைத் தீமை புரியினும் அவர் மாட்டுக்காழ்ப்பும் பகைமையுங் கொள்ளாத ஒரு தமிழர் திரு. வி.க. ஆவார்.

## பேச்சும் செயலும்

'யாதும் ஊரே! யாவரும் கேளிர்!' என்று மேடை ஏறிப் பேசுவோர் பலரைக் கண்டுள்ளோம். ஆனால் அவ்வாறு உள்ளத்தால் உணர்ந்து பேசுகிறார்களா அவர்கள் என்பது ஆராய்ச்சிக்குரியதே ஆகும். அவ்வாறு கூறுபவர்கள் அதன் படி நடக்க இயலாமைக்கும் ஒரு காரணம் உண்டு. பிறர் தீங்கு செய்த வழி மனத்தில் வெறுப்புக் கொள்பவர் 'யாவருங் கேளிர்' என்று உணர இயலாது. எனவேதான், இப் பாடலைக் கூறிய கணியன் பூங்குன்றன என்ற பெருமகன் அடுத்த அடியில் 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்றுங் கூறிப் போனான். தீங்கு செய்தவர்களைப் பொறுத்துக்கொள் என்று கூறுவதைக் காட்டிலும் ஒரு படி மேலானதாகும் இது. தீங்கைப் பொறுப்பதிலும் ஒரு தொல்லை உண்டு. பொறுமைக்கும் ஓர் அளவு உண்டு. அந்த அளவை மீறும் பொழுது பொறுமை என்று பேசுவது இயலாத காரியம்.

எனவே, அளவுக்குட்பட்ட தீமையைப் பொறுத்துக் கொள் என்று கூறுவது சரியே. ஆனால், அளவில் மிஞ்சும் தீமையைப் பொறுத்துக் கொள் என்று கூறுவது பொருளற்ற ஒன்றாகி விடும். இந்த இடர்ப்பாட்டை அறிந்த பூங்குன்றன் புதிய வழி வகுக்கின்றார். பிறர் தீமை செய்கின்றார் என்று நினைத்து அதனைப் பொறுத்துக் கொள்ள முயல்வதைக் காட்டிலும் அவர் தீமையே செய்யவில்லை என்று நினைப்பதால் உண்மையான பயன் ஏற்படும். தீதும் நன்றும் நிகழும்பொழுது அது பிறர் செய்வதால் ஏற்படுகின்றன என்று கருதாமல் தாமே அதற்குப் பொறுப்பு என ஒருவர் எண்ணக் கூடுமாயின், அதனால் அவர் யார்மாட்டும் பகையோ, காழ்ப்போ கொள்ளவேண்டிய சூழ்நிலை ஏற்படாது.

## கவிதையின்படி வாழ்ந்தவர்

திரு. வி.க. அவர்கள் புறநானூற்றின் இந்த இரண்டு அடிகளையும் வாழ்வில் மேற்கொண்டார். 'யாதும் ஊர் யாவருங் கேளிர்' என்று எவ்வாறு அவரால் நினைந்து வாழ முடிந்தது என்றால், அடுத்த அடியின்படி வாழ்ந்தமையா லேயே முடிந்தது என்று கூறிவிடலாம். அதாவது, தமக்கு வரும் நலம் தீங்கு என்ற இரண்டுமே பிறர் தரவில்லை என அவர் உணர்ந்து வாழ்ந்தாராகலின் அவரால் யாரையும் கேளிராகக் கொள்ள முடிந்தது. இவை பற்றிப் பேசுவதும் எழுதுவதும் எளிது. ஆனால், இதனை வாழ்க்கையில் மேற்கொண்டு நடத்தல் என்பது அத்துணை எளிதன்று. இவற்றை நடைமுறையில் மேற்கொள்ளக்கூடிய பண்பாளர் ஒருவரிடம் கல்வி முதலிய வேறு எத்தகைய சிறப்பையும் உலகம் எதிர்பார்ப்பதில்லை. ஆனால், இப் பண்பாளர் களிடம் கல்வி முதலியனவும் இருந்துவிடின் அது பொன் மலர் நாற்றமும் பெற்றது போலாம். இத்தகைய பெரியார்கள் நீண்ட காலத்துக்கு ஒருமுறைதான் தோன்றுவர். அத்தகைய

ஒரு பெரியார் நம்முடைய தமிழ்நாட்டில் நம் காலத்தில் தோன்றியது நாம் செய்த பெரும் பேறாகும்.

**புலனடக்கம் உடையார்**

*மானிடத் தன்மை பெற்ற பெரியார்கள் உறுதியான புலனடக்கம் உடையவர்களாகவே இருப்பர். இங்குப் புலனடக்கம் என்று குறிப்பிடுவது புலன்களை ஒரு நெறிப் படுத்திச் செலுத்தும் இயல்பையே தவிர அவற்றைக் கழித்து ஒழிப்பதையன்று. திரு. வி.க. அவர்கள் இதுபற்றி விரிவாகத் தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளார்.*

**பிறவியின் பயன்**

*திரு. வி.க. அவர்கள் மிக இளமையிலேயே இத் தொண்டுள்ளத்தைப் பெற்றிருந்தார் என்று அறிய முடிகிறது. அவருடைய வாழ்க்கைக் குறிப்பில் காணப்பெறும் கீழ்வரும் பகுதி இதனை வலியுறுத்துகிறது.*

> *"விடுதலை பலவிதம். உடலுடனும் விடுதலை பெற்றிருக்கலாம்; உடலை விடுத்தும் விடுதலை பெற்றிருக்கலாம். வினையற்ற உடல் விடுதலை அடைவது; வினையுற்ற உடல் விடுதலை அடையாதது. வினையற்றால் உடல் இராது என்று சிலர் கூறுப. அக்கூற்றுக்கு, வினையற்றால் மாயா உடல் இராது என்று பொருள் விளக்குக. வினையற்ற உடல் ஆண்டவன் கோயிலாகின்றது; அதை மாயா உடல் என்று கொண்டு ஏன் இடர்ப்படல் வேண்டும்?*
>
> *வினையுற்ற மாயா உடலை வினையற்றதாக்கி? அதை ஆண்டவன் கோயிலாக்க ஏன் முயலல் வேண்டும்? விடுதலைக்கு என்க. விடுதலைக்கு வழி என்ன? உலகம் பல கூறும். கீதை வழிகாட்டியுள்ளது. கீதை நிஷ்காமிய கர்மத்தை—பயன் கருதாத் தொண்டை அறிவுறுத்துகிறது. பயன் கருதாத்*

தொண்டு செய்யச் செய்ய மாயாவினை சேராது; உடல் ஆண்டவன் கோயிலாகும். இதுவே விடுதலை; பிறவி நோக்க நிறைவேற்றம்.

யான் பிறப்பை வெறுக்கின்றேனில்லை; அதை விரும்புகிறேன். தொண்டுக்குப் பிறவி பயன்படல் வேண்டுமென்பது எனது வேட்கை. எனது வேட்கை ஒருவாறு நிறைவேறியே வருகிறது. **இளமையில் என் தொண்டு காமியத்தில் சென்றது; பின்னே அது நிஷ்காமியமாக மாறியது. அம் மாற்றம் எப்படியோ உற்றது! நல்ல நூல்களும் பெரியோர் சேர்க்கையும், இல்வாழ்க்கையும் இயற்கை இறையின் அருளும் மாற்றத்துக்குக் காரணம் என்று கூறுவேன்.**

தொண்டுக்குரிய பிறப்பை யான் தாங்க அருள் புரிந்த என் தாய் தந்தையர்க்கு யான் என்ன கைம்மாறு செலுத்த வல்லேன்? அவர்களை மனமொழி மெய்களால் வணங்குகிறேன். இவ் வணக்கம் போதுமா? வேறு காண்கிலேன்! என் செய்வேன்! பெற்றோர் அன்புக்கு ஈடு செய்யும் பொருள் எவ்வுலகில் உண்டு. இல்வாழ்க்கை வாழ்க! வெல்க! இல்வாழ்க்கையை வாழ்த்த வாழ்த்த என் மனம் குளிர்கிறது.

தொண்டினுஞ் சிறந்த ஒன்று இருக்கிறதா? எனக்கு ஒன்றுந் தோன்றவில்லை. தொண்டே எனது வாழ்க்கை; எனது செல்வம்; எனது ஆருயிர்; எனது சமயம்; எல்லாம்; எல்லாம். விளைவு என்ன ஆயினும் ஆக. அதுபற்றிய கவலை எனக்கில்லை. 'என் கடன் பணி செய்து கிடப்பதே'

எனக்குப் பிறப்பு வேண்டும்; பிறப்புப் பயன் கருதாத் தொண்டுக்குப் பயன்படுதல் வேண்டும். சாதி, மதம், மொழி, நிறம் நாடு முதலியவற்றைக் கடந்து

நிற்கும் பொதுமை அறத்துக்குரிய சன்மார்க்கத் தொண்டு செய்தல் வேண்டும். இதுவே எனது வேண்டுதல்."

## இருதலைக் கொள்ளி

இந்த எண்ணம் நாளாவட்டத்தில் வளர்ந்து முழு ஆட்சி பெற்றுவிட்டது. தம்மால் அன்பு செலுத்தப் பெறும் ஒருவர் (கதிரைவேலனார்) வழக்குமன்றத்தில் இழுக்கப் பட்டார். அவருக்குத் தம்முடைய சான்று இன்றியமையாதது எனக் கண்டார் பள்ளி மாணவராகிய திரு. வி.க. ஆனால், சான்று கூறப்போனால் தேர்வு எழுத முடியாது என்பதும் தெரியும். இரண்டில் எதனை மேற்கொண்டாலும் மற்றொன்றை இழக்க நேரிடும். வறுமையில் உழன்ற ஒரு குடும்பத்தில் மகன் மெட்ரிகுலேஷன் தேர்வு பெறுவது ஒரு பெரிய வரப்பிரசாதமாகக் கருதப்பெற்ற காலம் அது. அந்நிலையிலும் இவ்விரண்டையும் சீர்தூக்கிப் பார்த்தே ஒரு முடிவுக்கு வந்தார் திரு. வி.க.

"விசாரணை நாள். தேர்தல் சோதனையின் முதல் நாள்! என் செய்வேன்! என் சோதனை பெரிதாயிற்று. சான்றுக்குச் செல்வதா!? பரீட்சைக்குப் போவதா? இரண்டும் மாறிமாறி என்னை வாட்டின. ஒரு பக்கம் கதிரைவேல்; இன்னொரு பக்கம் வாழ்வு. கதிரைவேல் அன்பே விஞ்சியது. பெரிய தந்தையார் மைந்தரால் பலவிதத் தடைகள் கிளத்தப்பட்டன. தந்தையார் ஒன்றுஞ் சொல்லவில்லை. பள்ளி வாழ்வு வேறு வாழ்வாக மாறும் காலம் வந்தது. அதைத் தடுத்தல் எவரால் இயலும்? யான் சான்றுக்குச் செல்ல உறுதி கொண்டேன்"[1]

1. 'திரு. வி.க. வாழ்க்கைக் குறிப்புகள்' பக்கம் 59

என்று எழுதும் பள்ளி மாணவன் திரு. வி.க. தியாகி திரு. வி.க. வாக உருவெடுத்தலின் முதற் படியாகும் இது.

## பல்லோர் நட்பு

இத்தகைய தொண்டுள்ளம் நாளாவட்டத்தில் விரியத் தொடங்கியது. சமயத் தொடர்பாக அவர் எழுதிய நூல்களி லெல்லாம் அவருடைய தொண்டு மனப்பான்மையைக் காண முடிகிறது. அவ்வாறு எழுதும் மனப்பான்மையைத் திரு. வி.க. யாண்டுப் பெற்றார் என்று ஆய வேண்டியது நம் கடமை. இப் பெரியாரின் இளமையில் இவருடன் தொடர்பு கொண்டவர்கள் பல திறத்தவராவர். கதிரைவேற் பிள்ளை, மயிலைத் தணிகாசல முதலியார், மறைமலையடிகள் ஆகிய சைவ சித்தாந்திகள் ஒருபுறம், சிவப்பிரகாச சுவாமிகள் போன்ற அத்வைதிகள் ஒருபுறம், சக்கரவர்த்தி நயினார் போன்ற சைனர்கள் ஒருபுறம், சிங்கார வேல் செட்டியார் போன்ற பௌத்த சமயவாதிகள் ஒருபுறம், இரத்தினம் பிள்ளை போன்ற கிறிஸ்தவ நண்பர்கள் ஒருபுறம் என இத்திறத்த பல சமயவாதிகளுடனும் தொடர்பு கொண்டி ருந்தார். பெரும்பாலும் மனித இயல்பு ஏதாவதொரு கூட்டினுள் அடைபட்டவுடன், உண்மை என்பது அக் கூட்டைத் தவிர வேறு யாண்டும் இல்லை என்றுதான் நினையும். முற்றிலும் மாறுபட்ட இத்தகையவர்களுடன் பழகிய திரு. வி.க. பொறுமை, சகிப்புத்தன்மை, பிறரிடமும் உண்மை உண்டு என்று ஏற்றுக்கொள்ளும் பண்பு ஆகிய வற்றை நிரம்பப் பெற்றுவிட்டார்.

## தம்மை இழக்கவில்லை

தொண்டுள்ளங் கொண்டவருக்கு மேலே கூறிய இப் பண்புகள் மிக இன்றியமையாதவை. இதனிடையே நீதிவான் சதாசிவ ஐயர், அன்னிபெசன்ட் அம்மையார் ஆகியவர்கள் தொடர்பால் தியாசாஃபிகல் கழகத்தின் தொடர்பும் பெற்றார். சாதாரண மனிதனிடம் இத்துணை மாறுபட்ட

கருத்துகள் மோதினால் அவன் தன்னையே இழந்து திரியும் நிலை ஏற்பட்டுவிடும். ஆனால், திண்மை நிரம்பிய திரு. வி.க. இவை ஒவ்வொன்றிலும் உள்ள நலன்களை எடுத்துக் கொண்டாரேயன்றிப் பகையுணர்ச்சிக்கு இரையாகவில்லை. புதிய புதிய தொடர்புகள் ஏற்பட ஏற்பட அவருடைய அறிவும் மனமும் விரிவடைந்தன. உண்மை என்பது பன்னிறமுடைய பளிங்கு என்பதை உணரத் தொடங்கினார். ஏட்டுக் கல்வியால் ஓரளவு பண்பட்ட அவருடைய உள்ளம், மாறுபட்ட கருத்துடைய பலர் தொடர்பால் விரிவடைந்தது. தியாசாஃபிகல் கழகத்தின் தொடர்பால் யாண்டும் உண்மை இருத்தல் கூடும் என்ற உண்மையை உணர்ந்து, இயற்கையில் ஈடுபட்டு இறைவனைக் காணும் அளவு வரை சென்றது. தொண்டுள்ளம் உண்மையில் ஒருவற்குக் கைவர வேண்டு மாயின் எங்கும், எவற்றினிடத்தும் இறைவன் உளன் என்னும் எண்ணம் ஊறவேண்டும். இயற்கைபற்றி இதோ அறிஞர் பேசுகிறார்:

> "காவிய ஓவியங்களோடு பழகினேன். அவற்றில் படிந்தேன்; படிந்து படிந்து உழன்றேன்; பன்னெடுநாள் உழன்றேன்; உழல உழல அவை என்ன செய்கின்றன? நன்றி செய்கின்றன. எவ்வழியில்? அவை தங்கள் முதலாகிய இயற்கைக் கருவூலத்தில் எளியேனைப் பிடர் பிடித்துத் தள்ளுகின்றன. என்றும் காணாத செல்வத்தை யான் காண்கிறேன். அங்கே கட்டில்லை; காவலில்லை; செல்வக் கடல்; கொள்ளக் கொள்ள வற்றாது; வரையாது. இயற்கை அன்னை தண்ணருள் பொழிகிறாள். அவள் கோலம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காவிய ஓவியமாகத் தோன்றுகிறது. ஞாயிறு, திங்கள், உடுக்கள், வானம், மலை, காடு, ஆறு, வயல், கடல், புழுபூச்சி, பறவை, விலங்கு, மகள், மகன், குழந்தை முதலிய யாவும் காவிய ஓவியங்களெனப் பொலிகின்றன. இயற்கையுலகே தொல் காப்பியமாகத்

தோன்றுகிறது. அகிலம் ஒரு பெருங் கழகமாகக் காணப் படுகின்றது.

அக் கழக மாணாக்கருள் யானும் ஒருவ னானேன். அங்கே ஆசிரியன்மாரில்லை. இயற்கைக் கூறு ஒவ்வொன்றும் ஆசிரியத் தொண்டு செய்கிறது. இங்கே காவியமும் ஓவியமும் புறத்தே வேறுபாடு காட்டுகின்றன. அங்கே வேறுபட்ட காட்சியே கிடையாது. எல்லாம் காவியம்; ஓவியம். இங்கே பள்ளியில் பல திறப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. அங்கும் பல திறக் கலைகளிருக்கின்றன. யான் மாணாக்கன்; இயற்கைக் கழகத்தில் பயில்கின்றேன்.

ஞாயிற்றை நோக்குகிறேன். ஐயங்கள் எழுகின்றன. அவற்றை எப்படிக் களைந்துகொள்வது? ஞாயிற்றையே நோக்கி, 'ஞாயிறே! நீ எழுவதும் மறைவதும் உண்மையா? காலையிலும் மாலையிலுஞ் சிவந்த கோலம் தாங்குவதென்னை? உன்னிடத்தில் ஏழு நிறம் அமைவானேன்? எட்டு ஏன் அமைய வில்லை? நீ எற்றுக்கு ஒளி கால்கிறாய்? ஒளி உன்னுடையதா? பிறருடையதா?' என்று கேட்பேன். எளிதில் விடைகள் கிடைப்பதில்லை. ஞாயிற்றை உன்னி உன்னி அதில் மூழ்கி ஒன்றுவேன். விடைகள் கிடைக்கும்.

வேனிற் காலம்; தென்றற் காற்று; கண் விழித்தேன். அண்ணாந்து பார்க்கிறேன்; நீலவானம்; முத்துகள் போன்ற உடுக்கள்; வெண்திங்கள் உழவு. ஆனந்தம். 'வானமே! நீல நிறத்தை எப்படிப் பெற்றாய்? அஃது உண்மையா? உருவெளியா? உன்னிடத்திலா உடுக்கள் உறைகின்றன? உடுக்களே! உங்கள் வரலா றென்ன? உங்களிடத்தில் உயிர்கள் வாழ்கின்றனவா? உங்களால் இம் மண்ணுலகுக்கு ஏதேனும் நலன்

விளைகிறதா? எற்றுக்கு ஒளிர்கிறீர்கள்? உங்கள் ஒளி இயற்கையா? செயற்கையா? உங்கட்குப் பகல் பகைமையா? வெண்திங்களே! நீ ஏன் ஓடிக் கொண்டே இருக்கிறாய்? ஏன் ஓரிடத்தில் நிற்ப தில்லை? உன் நிலவு இன்பம் ஊட்டுவதென்னை? அதை நீ எப்படி அடைந்தாய்? பகலில் அந் நிலவை ஏன் பொழிவதில்லை? பகலில் நீ இருக்கிறாயா? இல்லையா? எங்கே மறைந்து கொள்கிறாய்? இவ்வினாக்கள் எழுகின்றன. அவற்றை எண்ணி எண்ணிப் பார்ப்பேன். எப்படியோ பதில்கள் வரும்.

கடற்கரை நண்ணுவேன். கடற்காவியத்தைக் காண்பேன். 'கடலே! நீ ஏன் பரந்து விரிந்து கிடக்கிறாய்? ஏன் ஆழியாய் இருக்கிறாய்? உன்னை அடைந்தால் ஏன் விழுங்குகிறாய்? உன் தரங்கம் ஏன் பாடுகிறது? நீ ஏன் உப்பை வைத்திருக்கிறாய்? கோடிக் கணக்கான உயிர்களை ஏன் அடக்கி நிறகிறாய்? அவை மூச்சு விடுகின்றனவா? அவை ஒளி, காற்றுப் பெறுகின்றனவா? நீ பூமியினும் பெரிதா யிருப்பதென்னை? அதை விழுங்கவா? நீ நிலமா யிருந்தது உண்மையா? உண்மையானால் ஏன் நீரானாய்? மீண்டும் நிலமாவையோ? உன்னருகே உலவினால் உடலில் மரம் ஏறுவதென்னை? உன்னிடத் தில் என்ன மருந்திருக்கிறது? இவற்றைக் கடல் கேட்டு முறை முறையே இறை இறுக்கும்.

வயல் வழியே செல்வேன். வெள்ளைக் கோவணம் அணிந்து வெள்ளைக் குட்டையைத் தலையில் சுற்றி உழவர்கள் பணி செய்வது கருத்தை ஈர்க்கும். அவர்களது விஞ்ஞானம் எனக்கு உதயமாகும். பல நிறப் பூக்கள் நகைபுரிந்து தங்கள் வரலாறுகளைச்

சொல்லும்; பல திறக் கொடிகள் தங்கள் நிலைகளைத் தெரிவிக்கும்.

சோலையில் புகுவேன். மரங்கள் கூப்பிடும்; விருந்து வைக்கும். ஆலமர நிழலில் அமர்வேன். ஆல், 'என் விழுதைப் பார். அந்த அரசுக்கு இஃது உண்டா' என்னும். அரசு கண்ணிற் படும். 'யான் விழுதின்றி வானுற ஓங்கி நிற்கிறேன். என்னை மக்கள் சுற்றிச் செல்கிறார்கள். காண்' என்னும். 'வேம்பு என் நிழல் நலஞ் செய்யும். என் பூவின் குணங்களைச் சொல்கிறேன், வா!' என்னும். அத்தி, நாகை, விளா, மா, வில்வம் முதலிய மரங்கள் விளியாமலிருக்குமோ? சிந்தனையில் அவற்றின் நுட்பங்கள் விளங்கும்.

மலை என்னை அடிக்கடி அழைக்கும். மலைமீது இவர்வேன்; ஓரிடத்தில் அமர்வேன். மேலுங் கீழும் பார்ப்பேன்; சுற்று முற்றும் பார்ப்பேன். மனம் அமைதி எய்தும். அமைதி பொருந்திய மனத்துடன் மலையை நோக்குவேன். என் அருமை மலையே! உன்னை அடைந்ததும் மனம் அமைதியுறுவானேன்? உன் வரலாறென்னை? நீ எப்படி அமைந்தாய்? மக்கள் முதன் முதல் உன்னிடத்திலா தோன்றினார்கள்? உன்னிடத்தில் எப்படி அருவிகள் அணைந்தன? வண்டுகள் சூழ்ந்தன? மயில்கள் வந்தன? குயில்கள் கூடின? நீ இசை அரங்கா? மக்கள் உன்னை நாடி வருவானேன்? உன்னிடம் வந்து உலவுங் காற்று ஏதேனும் தனி இயல்பு பெறுகிறதா? உன் மீது பொழியும் ஒளிக்கு ஏதேனும் தனிச் சிறப்புண்டா?' என்று கேட்பேன். மலை எளிதில் வாய் திறக்குமோ? மலையை முன்னமுன்ன வாய்மை தவழும்."[1]

1. 'திரு. வி.க. வாழ்க்கைக் குறிப்புகள்' பக்கம் 119–122

## சமரசத்தின் ஆணிவேர்

இத்தகைய மனநிலையைப் பெற்றுவிட்ட ஒருவர். யாவும் இறைவன் உறைகின்ற இடம் என்னும் தத்துவத்தை உணர்ந்துவிட்ட ஒருவர் தொண்டுள்ளம் கைவரப் பெறுவதில் வியப்பு ஒன்றுமில்லை. உண்மை யாண்டும் பல்வேறு வடிவுடனும் இலங்கும் என்பதையும், அனைத்தும் இறைவனுடைய படைப்புகள் தாம் என்பதையும் உணர்ந்த ஒருவர் சமயக் கொள்கையில் சமரச நோக்குடையவராய்த் திகழாமல் வேறு எவ்வாறு இருத்தல் இயலும்? தொண்டுள்ளங் கொள்ள இன்றியமையாது வேண்டப்படும் இயல்புகளுள் அச்சமின்மை ஒன்றாகும். இளமைதொட்டே அச்சமின்மை அவரிடமிருந்தது என்பதை அவருடைய 'வாழ்க்கைக் குறிப்புகள்' என்ற நூலில் காணலாம்.

## அவர் கல்வி யாது?

திரு. வி.க. இளமையிற் பெற்ற இத் தொண்டுள்ளம் நாளும் வலுப்பெற்று வளரலாயிற்று. தாம் பெற்ற கல்வியும் இதற்குத் துணை செய்தது என்று 'வாழ்க்கைக் குறிப்பில்' அவரே கூறுகிறார்:

> "ஏட்டுக் கல்வி இரு வழியில் அமையும். ஒன்று நேரே இயற்கையினின்றும் இறங்கி அமைவது; மற்றொன்று இன்னோர் ஏட்டினின்றும் இறங்கி அமைவது. முன்னையது இயற்கைக் கல்வி பெறுதற்குத் துணை போகும் வாய்ப்புடையது. அதை நல்வழியிற் பயன்படுத்தினால் அது தன் கடமையைச் செய்தே தீரும். அக் கல்வியைப் பயன்படுத்தும் விதத்தில் மாறுதல் நேர்ந்தாலும் அதனால் பெருந்தீமை விளையாது. பின்னையதோ இயற்கைக் கல்வி பெறுவதற்குத் துணை போதல் அரிது; துணை போகா தொழியினும் தீமை விளைவியாமலிருந்தால் போதும். இக் கல்வி, பொறாமை, பகை, பிணக்கு, சூழ்ச்சி

*முதலியவற்றைப் பெருக்கி வாழ்க்கையை அல்லற் படுத்தும்.* இந்நாளில் இயந்திரம் அதிகம். அதனால் போலி ஏட்டு நூல்கள் ஒன்றினின்றும் ஒன்றாகப் பல்கிப் பெருகுகின்றன. அப் பாழ்கள் வாழ்க்கைக்கு இன்றியமை யாத அமைதியைக் கெடுத்து உலகை எரித்துவரல் கண்கூடு.

*இயற்கைக் கல்வியே மக்களை நல்வழிப்படுத்தி அவர்கட்கு அந்தண்மை என்னும் பொதுமை யுணர்வை எழுப்பவல்லது.*

*எனது பள்ளிப் படிப்பு, கனியாது வெம்பி வீழ்ந்தது. பின்னே ஏட்டுக் கல்வி பயின்றேன். அது முதலில் என்னைச் செயற்கைச் சேற்றில் சிறிது அழுத்தியது; பின்னே இயற்கைக் கல்வியைப் பெறுவித்தது. முதலில் கேடு விளைந்தமைக்குக் காரணம் பள்ளிப் படிப்புச் சிறிது பெற்றதன் பயனாய் இருக்குமோ?*

*எனக்குப் பள்ளிப் படிப்புப் பெருகியிருக்குமேல் எனது நிலை என்னவாகியிருக்குமோ? பொருட் செல்வம் பெருகியிருக்குமோ? களியாட்டில் அயர்ந் திருப்பேனோ என்னவோ தெரியவில்லை. எவ் வழியிலோ என் பள்ளிப் படிப்புப் பட்டது. யான் பொருட் செல்வமும் பெற்றேனில்லை; களியாட்டிலும் அயர்ந்தேனில்லை. இயற்கைக் கல்வியால் யான் பொதுமையுணர்வு பெறலானேன். எனக்கு யாதும் ஊராகியது; எவருங் கேளிராயினர். எனது நிலை மற்றவர்க்கு எப்படிப் புலனாகிறதோ யான் அறியேன்.*

*எனது பள்ளிப் படிப்பைக் கெடுத்து, என்னை ஏட்டுக் கல்வியில் நிறுத்தி, எனக்கு இயற்கைக் கல்வி யைப் பெறுவித்தது எது?"*[1]

1. திரு. வி.க. வாழ்க்கைக் குறிப்புகள், பக்கம் 220–221

இயற்கையில் பெற்ற கல்வியோடும் இயல்பாய் அமைந்த தொண்டுள்ளத்தோடும் அற்றை நாளில் நிலவி வந்த சமயங்களையும் அவற்றின் உட்கோள்களையும் ஆயத் தொடங்கினார் இவர். நாவுக்கரசர் உண்மை காண வேண்டும் என்ற நோக்குடன் பிற சமய ஆராய்ச்சியில் இறங்கினது போலவே தமிழ் முனிவரும் இறங்கினார். ஆனால், ஒரு வேறுபாடு உண்டு. 'நல்லாறு தெரிந்துணர்ந்தும் நம்பர் அருளாமையினால் கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினார்'[1] நாவுக்கரசர். திரு. வி.க.வோ எனில் இறைவனருள் பெற்ற பிற சமயங்களை ஆய முற்பட்டார்.

## சமயமூலம் உலக ஒற்றுமை

சமய வாழ்வு ஒன்றினால்தான் மனிதகுலம் ஒற்றுமைப் பட முடியும் என்பதை இளமையிலேயே உணர்ந்து விட்டார் இவர். சகோதரநேயம் என்பது தன்னுயிரைப் போல மன்னுயிரைக் கருதும் அன்பாகும். இத்தகைய ஓர் அன்பை நாடு, மொழி, நிறம், இனம், மதம் என்பவை கூட்டா. எனவே, பரந்துபட்ட அன்புக்கு, எல்லையற்ற அன்புக்குக் கட்டற்ற எல்லையற்ற ஒன்றன் தொடர்பு தேவை. வேறு வகையாகக் கூறினால் எங்குமுள்ள இறைவனுடன் தொடர்பு கொண்டவன் பிறருக்குத் தீங்கு செய்ய முற்படான். இத்தகையதொரு புதுமையான கருத்தை 1922ஆம் ஆண்டிலேயே திரு. வி.க. அவர்கள் 'தமிழ் நாடும் நம்மாழ்வாரும்' என்ற நூலில் குறித்துள்ளார். அவர் கூற்றைச் சரியாக விரிவாக எடுத்துக் காட்டிவிட்டு இதில் காணும் புதுமைபற்றி ஆராயலாம்.

"வாழ்வு இருவிதம். ஒன்று நல்வாழ்வு; மற்றொன்று அஃது அல்லாதது. நல்வாழ்வு எது?

1. 'பெரியபுராணம்', திருநாவுக்கரசர் புராணம்

மற்றைய வாழ்வு எது? அமைதியுற்ற வாழ்வு நல்வாழ்வு என்றும், அமைதியற்ற வாழ்வு நல்வாழ்வு அல்லாதது என்றும் சுருங்கச் சொல்லலாம். வாழ்வில் பல நலங்கள் பொருந்தியிருப்பினும், அதன்மாட்டு அமைதி ஒன்றில்லையேல், அது நல்வாழ்வாகாது. நல்வாழ்வுக்கு அறிகுறி அமைதி; அமைதியேயாகும்.

அமைதி வாழ்வுக்குச் சகோதர நேயம் இன்றியமையாதது. சகோதர நேயம் எப்படி உண்டாகும்? சகோதர நேயம் என்னும் பெயரால் உலகில் எத்துணையோ அமைப்புக்கள் ஏற்பட்டிருக் கின்றன. அவற்றால் சகோதர நேயம் வளர்கிறதா? அமைதி வாழ்வு நிலைக்கிறதா? இல்லையே!

தற்கால உலகை நோக்கினால் உண்மை விளங்கும். தற்கால உலகை நோக்குவோம். அஃது எக் காட்சி வழங்குகிறது? பொய், பொறாமை, கொலை, கொள்ளை, போர் முதலியவற்றையல்லவோ அது வழங்குகிறது? இதற்குக் காரணம் என்னை? அமைதிக் குரிய சகோதர நேயம் பெருகிப் பரவாமையேயாகும்.

அமைதிக்கெனச் சட்டங்கள் செய்யப்படு கின்றன; ஆயுதங்கள் தாங்கப்படுகின்றன; வேறு பல கட்டுகளும் வகுக்கப்படுகின்றன. இவற்றால் அமைதி நிலவுகிறதா? அச்சத்தால் ஒருபோதும் உண்மை அமைதி நிலவாது. சகோதர நேயம் ஒன்றே உண்மை அமைதியை நிலை பெறுத்தவல்லது.

சகோதர நேயம் என்பது தன்னுயிரைப்போல மன்னுயிரைக் கருதும் அன்பேயாகும். அன்பை நாடு, மொழி, நிறம், இனம், மதம், இன்ன பிற கூட்டுதல் அரிது. ஏன்? நாடு, மொழி முதலியன எல்லைக்கு உட்பட்டன. எல்லைக்குட்பட்ட கண்டப் பொருள் கட்டற்ற பரந்த அன்பை எங்ஙனங் கூட்டும்?

அவற்றால் ஒவ்வோர் அளவில் கட்டுப்பட்ட அன்பு கூடலாம். கட்டுப்பட்ட அன்பால் அமைதி நிலை பெறாது. ஒருவேளை அதனால் கலாம்* விளையினும் விளையும்.

பரந்த அன்புக்கு, எல்லையற்ற—கட்டற்ற—ஒன்றன் தொடர்பு தேவை. எல்லையற்ற—கட்டற்ற—ஒன்று எங்குமுள்ள இறையன்றிப் பிறிதில்லை. இறையுடன் தொடர்பு கொள்ளக்கொள்ள, அத் தொடர்பு, தன்னுயிரிலும் மற்ற உயிர்களிலும் உள்ளது ஒன்றே என்னும் உணர்வை நல்கும். எல்லையற்று—கட்டற்று—எங்கும் நீக்கமற நிறைந்துள்ள அகண்டத்தில் அன்பு கொண்டவரிடம், தம்முயிரைப்போல் மற்ற உயிர்களைக் கருதும் சகோதர நேயம் தானே பிறக்கும்.

பராபரம் எல்லா உயிர்களிலும் நீக்கமற நிறைந்து நிற்றலால், அதற்கு உயிர்களெல்லாம் உறுப்புகளாகின்றன. ஓருறுப்புக்குத் துன்பம் நேரின், அத் துன்பம் மற்ற உறுப்புகட்கும் நேர்தல் இயல்பு. தன் உறுப்புகளில் எதற்காவது கேடுசூழ அறிவுடைய எவனாதல் நினைப்பனோ? எவனும் நினையான். எங்குமுள்ள பராபரத்துடன் தொடர்புகொண்ட ஒருவன், பிறருக்குத் தீங்கு செய்தல் தனக்கே தீங்கு செய்தல் ஆதலை நன்கு உணர்வன். ஆகவே, எங்குமுள்ள பராபரத்துடன் தொடர்புகொள்வதால், சகோதர நேயம் பிறக்கும் என்பது தெளிதற்பாலது. அதனால் உண்மை அமைதி நிலவும்.

'சகோதர நேயத்தால் உலகில் அமைதி நிலை பெறுதல் வேண்டும்' என்னும் பெருங்கருணையால், ஆன்றோர், பராபரம் எங்குமுள்ள உண்மையைப் பல

*கலாம் – பூசல்

படியாக உலகுக்கு உணர்த்தினர். இப் பேருணர்வு பெறுதற்குரிய அரசியல், கல்வி, தொழில் முதலியன உலகுக்குத் தேவை."

## கருத்துப் புதுமை

இக் கருத்தைப் பெரியார் எழுதிய காலம் உன்னுதற் குரியது. 1922ஆம் ஆண்டு எத்தகைய காலம் என்பதைச் சிந்தித்தல் வேண்டும். 1917ஆம் ஆண்டு, இரஷ்ய நாட்டில் நிகழ்ந்த புரட்சி வெற்றி கண்ட ஆண்டாகும். அப் புரட்சிக்கு ஆணிவேராக அமைந்தவர் லெனின் ஆவார். லெனினுக்கு குருவாக அமைந்தவர் கார்ல் மார்க்ஸ் ஆவார். கார்ல் மார்க்ஸ் திரு. வி.க.வால் போற்றி ஏற்றுக் கொள்ளப் பெற்றவர். மார்க்ஸைப் போற்றும் ஒருவர் அந்த மார்க்ஸின் சீடரான லெனினையும் போற்றியுள்ளார். ஆனால், அந்த லெனின், 'சமயம் என்பது மக்களுக்கு அபின் போன்றது, என்று கூறியுள்ளதை மறுத்தல் ஆகாது. கார்ல் மார்க்ஸ், லெனின் இருவரும் தார்க்கீக உலகாயதவாதிகள் (Dialectic Materialists) அவர்கள் இருவரும் உலக சகோதரத்துவத்தைப் பெரிதாகப் போற்றினர் என்பது உண்மை. ஆனால், உழைப்பாளரை மட்டும் சோதரராகப் போற்றினர் அவர்கள். உலக சோதரத்துவம் வேண்டும் என்று கூறிய அளவில் அவர்கள் கருத்தை ஏற்றுக்கொண்டார் திரு. வி.க. ஆனால், அந்தச் சகோதரத்துவத்தை நிலைநாட்ட வன்முறையையும் கையாளலாம் என்று அவர்கள் கூறியதை இவர் ஏற்கவில்லை.

## மார்க்ஸ் தத்துவத்தில் குறை

மார்க்ஸ்–லெனின் தத்துவத்தில் மற்றோர் பெருங்குறை அமைந்து கிடக்கிறது. உலகம் முழுவதும் அவர்கள் கொள்கை பரவிவிட்ட காலத்திலும், உழைப்போர் அனைவரும் சமம் என்பது ஏட்டளவில் இன்றி வாழ்க்கையில் உண்மையாகவே நடைமுறைக்கு வந்து விடுவதாக வைத்துக்கொண்டால் அந்தக் காலத்திலும், அத்தகைய நாட்டில் வாழும் மனிதன்

அமைதியுடன் வாழ்ந்துவிட முடியுமா? 'மனிதன் ரொட்டித் துண்டால் மட்டும் வாழ முடியாது' என்பது விவிலிய நூல் வாக்கு. இந் நாட்டிடைத் தோன்றிய தமிழ் மூதாட்டியும், 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' என்பதைக் கூறி, அதற்கு மேலும் ஒரு பிரச்சினையைப் பேசுகிறார். அந்த அடியை அடுத்துவரும் பகுதி சிந்திப்பதற்குரியது. உண்பது நாழிதான், உடுப்பது நான்கு முழந்தான்; ஆனால், அவற்றை அடுத்து 'எண்பது கோடி நினைந்து எண்ணுவன' என்று வரும் பகுதியை மார்க்ஸியத் தத்துவத்தார் சிந்திக்க மறந்து விட்டனர். மனிதனுடைய வயிற்றை நிர்பபிவிடுவதால் மட்டும் அவனை அமைதியடையச் செய்ய இயலாது. அன்றியும், வன்முறையால் நிலைநாட்டப்படும் எவ்வளவு சிறந்த தத்துவமும் இறுதியில் வன்முறையாலேயே அழியும். 'வாள் எடுத்தவன் வாளாலே மாள்வன்'[1] என்ற விவிலிய நூல் வாக்கும், 'அழக் கொண்டவெல்லாம் அழப்போம்' என்ற குறளும் சிந்தனையில் இருக்கவேண்டியவை.

இவற்றையெல்லாம் மனத்துள் வாங்கிக்கொண்ட தமிழ்ப் பெரியார் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படையில் உலக சகோதரத்துவம் காணப் புது வழி வகுக்கிறார். இறையுணர்வுடையார்க்கு உலக சோதரத்துவம் தானே வந்து அமையும். இதனால்தான் திரு. வி.க., 'எங்குமுள்ள பராபரத் துடன் தொடர்பு கொள்வதால் சகோதர நேயம் பிறக்கும் என்பது தெளிதற்பாலது. அதனால் உண்மை அமைதி நிலவும்'[2] என்று எழுதிப் போனார்.

இத்துடன் பெரியார் நின்றாரில்லை. மார்க்ஸியக் கருத்துப்படிச் சமத்துவம் அடைந்த மனிதனுடைய மனம் வாளா கிடப்பதில்லை. உடலுக்குற்ற பசிப்பிணி இல்லை யாயினும் மனத்தில் உற்ற வெறுமை அவனைச் சும்மா

1. 'கிறிஸ்துவின் அருள் வேட்டல்'
2. 'தமிழ்நாடும் நம்மாழ்வாரும்', பக்கம் 12

விடுவதில்லை. அந்த வெறுமையைப் போக்க அவன் சிந்திக்கத் தொடங்கினால் விளைவது புரட்சி. இதனைத் தடுக்கவே, படையுதவியை நாடி என்றும் மக்களை அதிகார பலத்தின் கீழேயே வைக்கவேண்டியுள்ளது. மனித மனம் ஏதாவதொரு பொருளை நாடி அதனைப் போற்றிக் கொண்டிருக்கும் இயல்புடையது. அம் மனத்தால் போற்றப் படும் பொருளைப் பறித்து விட்டால் வேறு ஏதாவதொன்றை மனம் நாடத் தொடங்கிவிடும். இந்த உண்மையை அறிந்த சீனப் பொதுவுடைமைவாதிகள் கன்பூஷியஸ், புத்தர் என்ற குறிக்கோள் மக்களைச் சீன மக்கள் மனத்திலிருந்து அகற்றி விட்டபிறகு, அந்த இடம் வெறுமையடையக் கூடாது என்பதற்காக மாசேதுங்கைக் கடவுளாக மாற்றி அமைத்து விட்டனர்.

## மன அமைதிக்கு வழி எது?

அத்தகைய கொள்கையர் ஆட்சியில் இத்தகைய ஒரு கொடுமை நிகழும் என்பதை நன்குணர்ந்த திரு. வி.க. மார்க்கிஸத்துடன் ஆன்மீக சிந்தனையும் வளர வேண்டும் என்று கருதினார். பொது உடைமையாளர் கனவு காணும் சகோதரத்துவத்தைவிடத் திரு. வி.க. கண்ட சகோதரத்துவம் நின்று நிலைக்கக் கூடியது. பரம்பொருள் உணர்வு அடிப்படையில் ஏற்படும் இந்த சகோதரத்துவம் நிலைக்கக் கூடியது; வன்முறையை மேற்கொள்ளாதது. ஆனால், அதே நேரத்தில் வயிற்றுப் பாட்டைச் சமத்துவமாக்கும் மார்க்ஸியத் தையும் திரு. விக. மறந்தாரில்லை. அனைவருக்கும் சமத்துவமான சந்தர்ப்பமும் தேவைப் பூர்த்தியும் அளிக்கின்ற வரை மார்க்ஸியக் கொள்கை திரு. வி.க.வுக்கு உடன்பாடு தான். ஆனால், மனிதனுடைய தேவைகளில் உடலைப் பற்றிய பகுதியைப் பூர்த்தி செய்யும் இக் கொள்கை அவனுடைய மறு பாதியை, அதாவது, மன உலகை வெறுமையாக விட்டுவிடுவதைத் திரு.வி.க. உணர்ந்தார்.

உடனே அதனை நிரப்பும் வழியைக் கூறுகிறார் 'மார்க்ஸிய மும் காந்தியமும்' என்ற நூலில்

"மார்க்கிஸ் முனிவன் மார்க்கம் கண்டனன்
அந்த மார்க்கம் யாக்கை போன்றது;
ஆவி நல்க மேவினன் காந்தி;
மார்க்கிஸ் காந்தி மார்க்க மூலம்
யாதென் றுலகம் ஓது கின்றது?
ஆதி அருகன் ஓதினன் மூலம்;
அகிம்சை மேலாம் அறமென முதன்முதல்
அருளிய பெருமை அருகனுக் குண்டே;
அகிம்சை உயிர்ப்பை அளித்த ஐயன்,
சீலப் போர்வையும் சால அமைத்தனன்
சீலம் வளர்வழி கோலினன்; அதுவே
மிகுபொருள் விரும்பா மேன்மை ஒழுக்கம்;
மிகுபொருள் விரும்பாத் தகுதி இடத்தில்
அகிம்சா தர்மம் ஆடல் புரியும்;
மிகுபொருள் விரும்பும் விலங்குள இடத்தில்
அகிம்சை அகலும்; புகுங்கொலை களவு;
மிகுபொருள் விரும்பாத் தகுதி, அகிம்சை—
உண்மை—சீலம்—ஒழுக்கம்—காக்கும்;
பொருளின் நிலைக்கும் அருளின் நிலைக்கும்
உற்றுள தொடர்பை உற்று நோக்குக;
பொருளொரு பாலே பெருகிச் செல்லின்
கொலைபுலை களவு குலைக்கும் உயிரை;
'பொதுமை பொதுமை பொதுமை' என்றே
பட்டினி பசியும் நெட்டிக் கூவும்;
அருகன் மொழிந்த அருளற வழியே,
புதுமை முயற்சியால் பொதுமை மலர்க;
மூர்க்கப் புரட்சியால் முளைக்கும் பொதுமை

மூர்க்கத் தாலே முடிவும் எய்தும்;
'வாளை எடுப்பவன் வாளால் மடிவன்'
என்றே கிறிஸ்து நன்றே கூறினர்;
மார்க்ஸியம் காந்தியம் தொடக்கம் மாறே
இரண்டும் முடிவில் இணையும் ஒன்றாய்;
அகிம்சையை இம்சையால் இணைப்பது மார்க்ஸியம்;
அகிம்சையை அகிம்சையால் அணைப்பது காந்தியம்
இரண்டு மார்க்கமும் திரண்ட மூலம்
ஆதி பகவன் போதனை என்க;
பொருளின் ஆணவம் அருளையும் ஒட்டிக்
கொலைபுலை காமம் களவுபொய் கள்ளே
முதலிய பாவம் நிதம்செயத் தூண்டும்;
பொருளில் ஆணவம் பொருந்தா வாறு
பொருளைத் தேடுக பொருளைத் தேடுக;
அறவழி நின்று பொருளைத் தேடுக;
வையம் பொருளே தெய்வம் அருளே
மார்க்ஸிஸ் பொருளே காந்தி அருளே
ஒன்ற இரண்டும் உழைத்தல் நன்றே."[1]

மார்க்கிஸம் ஏற்படுத்தும் மனவெறுமையில் தீய எண்ணங்கள் குடிபுகல் இயல்பு. புறத்தை சமத்துவம் கண்டு அகத்தைப்பற்றிக் கவலைப்படாமல் விட்டு விட்டால், மனிதனிடம் இயல்பாக எழும் பேராசை நாளாவட்டத்தில் கொலை, களவு என்பவற்றையெல்லாம் புகுத்திவிடும். எனவே, மனத்தை ஒழுங்குபடுத்தும் காந்தியத்தை மார்க்கிஸத்துடன் இணைக்கிறார் திரு. வி.க. 'மிகுபொருள் விரும்பா மேன்மை ஒழுக்கம்' பொருளின் நிலைக்கும் அருளின் நிலைக்கும் உள்ள தொடர்பை அறிவுறுத்தும். மார்க்ஸியத்

1. 'பொருளும் அருளும் அல்லது மார்க்ஸியமும் காந்தியமும்', பக்கம் 43 முதல் 45 வரை (வரிகள் 65 முதல் 109 வரை)

தத்துவப்படி பொருள் மட்டும் சேர்ந்து விட்டால் என்ன நடக்கும் எனப் பெரியார் கூறுகிறார். பொருளின் ஆணவம் மனத்தில் எழவேண்டிய அருளையும் ஒட்டிக் கொலை, புலை, காமம், களவு, பொய், கள் முதலிய பாவம் நிதம் செய்யத் தூண்டும். மனத்தில் தோன்றும் இப் பாவங்களைப் போக்க மார்க்கிஸத்தில் வழி கூறப்பெறவில்லை. வயிறு நிரம்பியவன். நிரம்பாதவன் ஆகிய இருவரும் செய்வதே இது. எனவே, இறையுணர்வுடன் கூடிய மார்க்கிஸமே வேண்டும் என்கிறார்.

> 'வையம் பொருளே தெய்வம் அருளே
> மார்க்கிஸ் பொருளே காந்தி அருளே
> ஒன்ற இரண்டும் உழைத்தல் நன்றே'

எனும் பகுதி கூர்ந்து சிந்தித்தற்குரியது.

மார்க்கிஸத்தால் உடல் வாட்டும் பசியைத் தொலைத்து, காந்தியத்தால் உளம் வாட்டும் மறத்தைத் தொலைத்து ஒரு புதிய சமுதாயத்தை அமைக்கப் புகுந்தார் திரு. வி.க. தமிழர் ஒருவர் தமிழ் மொழியில் புதிய கருத்து ஒன்றைத் தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் தந்துள்ளார்.

**சமயத்தில் ஊன்றியவர்**

திரு. வி.க. அவர்கள் பல்வேறு துறைகளில் ஆய்வு செய்து நூல்கள் பல எழுதியுள்ளார். ஏறத்தாழச் சிறியவும் பெரியவுமான ஐம்பது நூல்கள் எழுதியுள்ளார். எனினும், அவற்றுள் முப்பதுக்கு மேற்பட்டவை சமயத் தொடர்புடையவை. எனவே, திரு. வி.க. என்ற மனிதர் தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் செய்த தொண்டை இன்று ஆயும்பொழுது ஓர் உண்மை புலப்பட்டே தீரும். மார்க்கிஸத்தைப் போற்றிய அவர், இந்தியாவிலேயே முதலாவது தொழிலாளர் சங்கங் கண்ட அவர், பின்னைப் புதுமைக்கும் புதியவராக விளங்கிய அவர் முன்னைப்

*பழமைக்கும் பழையவராக நிற்கின்றார். அவருடைய ஆணி, சல்லி வேர்கள் சமயத்தில் வலுவாக ஊன்றியுள்ளன.*

**வளர்ச்சி முறை**

*எனவே சமயம், சமய இலக்கியம் என்பவற்றிற்கு அவர் செய்துள்ள தொண்டை முதற்கண் ஆய்வது பொருத்த முடையதே யாகும். பெரியார் அவர்கள் தோன்றியது 1883ஆம் ஆண்டிலாகும். 1930-க்குள் பல சமய சம்பந்தமான நூல்களை எழுதி முடித்துவிட்டார். 1920 முதல் 1925 வரை சைவம் பற்றிய நூல்கள் பத்துக்கு மேல் எழுதியுல்ளார். நாற்பத்தைந்து ஆண்டுக்குள் அவரது சமய நூல்கள் ஏறத்தாழ அனைத்தும் தோன்றிவிட்டன. அவர் பெரியபுராணக் குறிப்புரை 1907இல் எழுதத் தொடங்கி 1910இல் முடித்தார் (சஞ்சிகையாக) தனி நூலாக 1934இல் வெளிவந்தது. மிகுந்த மாற்றங்களுடன்,*

| | |
|---|---|
| 1917 | மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் |
| 1921 | என் கடன் பணிசெய்து கிடப்பதே |
| 1922 | நாயன்மார் திறம், தமிழ்நாடும் நம்மாழ்வாரும் |
| 1924 | சைவத்தின் சமரசம் |
| 1925 | முருகன் அல்லது அழகு |
| 1927 | பெண்ணின் பெருமை |
| 1928 | கடவுட் காட்சியும் தாயுமானாரும் |
| | தமிழ் நூல்களில் பௌத்தம் |
| 1929 | இராமலிங்கர் திருவுள்ளம் |
| | சைவத்தின் திறவு |
| 1930 | இமயமலை அல்லது தியானம் |
| | நினைப்பவர் மனம் |
| 1933 | சன்மார்க்க போதமும் திறவும் |
| 1934 | சமரச தீபம் |
| 1935 | சித்த மார்க்கம் |
| 1938 | திருமால் அருள் வேட்டல் |

1941 உள்ளொளி

1942 பொதுமை வேட்டல்

1944 ஆலமும் அமுதமும்

1945 புதுமை வேட்டல்
கிறிஸ்துவின் அருள் வேட்டல்

1947 சிவனருள் வேட்டல்

1948 கிறிஸ்து மொழிக் குறள்

1949 பரம்பொருள் அல்லது வாழ்க்கை வழி

1950 இருமையும் ஒருமையும்

1951 அருகன் அருகே அல்லது விடுதலை வழி
இருளில் ஒளி

1951 சித்தந் திருந்தல்
முதுமை உளறல்

1953 படுக்கைப் பிதற்றல்

*இப் பட்டியல் திரு. வி.க.வின் சமயத் தொண்டைக் குறிக்கவே ஈண்டுக் குறிக்கப்பெற்றது. 1917 முதல் 1941 வரை தோன்றிய சமயத் தொடர்பான இந்நூல்கள் அனைத்தும் உரைநடையில் உள்ளன. இந்த இருபது ஆண்டுகளில்தான் பெரியார் அரசியலிலும் ஈடு கொடுத்துப் பத்திரிகை ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார். அத்தொண்டு பற்றிப் பின்னர் சற்று விரிவாகக் காணலாம். திரு. வி.க.வின் சமய நூல்களின் பட்டியல் முன்னர்த் தரப்பெற்றுள்ளதை நோக்குக. 1942 முதல் வெளியான 14 நூல்களுள் 1949இல் எழுதப்பெற்ற 'பரம்' பொருள் அல்லது வாழ்க்கை வழி' என்ற நூல் மட்டுமே உரைநடையில் உள்ளது; ஏனைய 13ஆம் செய்யுள் வடிவில் உள்ளன.*

## சமயவாதி

*இந்தப் பட்டியல் திரு. வி.க.வைப்பற்றிய ஒரு பேருண்மையை விளக்கியே தீரும். அப் பெரியார்*

எந்நிலையில் நின்றிருப்பினும், எப் பணி புரிந்திருப்பினும், எக்கோலங் கொண்டிருப்பினும், தொடக்க முதல் இறுதி வரை சமயவாதியாகவே திகழ்ந்துள்ளார் என்பதுதான் அந்த உண்மை. சமயவாதி என்ற சொல்லை மணிமேகலை காலத்தி லிருந்து குறுகிய பொருளிலேயே பயன்படுத்தி வந்து விட்டோம். கடவுளை ஏற்காத ஒரு கூட்டத்தை விட்டுவிட்டு ஏதாவதொரு சமயத்தை மட்டும் நம்பும் ஒருவரைச் சமயவாதி என்று கூறுகிறோம். மேலும், மணிவாசகப் பெருமான் 'சமயவாதிகள் தத்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந்தனர்"[1] என்று கூறும்பொழுது முரட்டுப் பிடிவாதக்காரர்கள் நினைவே நமக்கு வருகிறது. திரு. வி.க.வைச் சமயவாதி என்று கூறினவுடன் தயைகூர்ந்து இந்தப் பொருளை யாரும் நினைத்து இடர்ப்பட வேண்டா. வேறு சொல்லின்மையின் இச் சொல்லைப் பயன்படுத்து கிறேனே தவிர வேறு கருத்தில்லை.

## பொதுச் சமயவாதி

திரு. வி.க. சமயவாதி என்றால் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவர் என்ற வினாத் தோன்றியே தீரும். 'சைவ சமய சாரம்', 'நாயன்மார் வரலாறு', 'பெரியபுராண உரை', 'பட்டினத்தார் பாடல் உரை', 'முருகன் அல்லது அழகு' முதலிய நூல்கள் எழுதியவரைச் சைவர் என்று குறிப்பதால் தவறில்லை. இத்தகைய நூல்கள் எழுதிவிட்டமையின் அவரைச் சைவர் என்று குறிக்கலாம் என்றால், அதனால் பெரும் பிழை நேரிடும். 'திருமால் அருள் வேட்டல்', 'தமிழ் நாடும் நம்மாழ்வாரும்' என்ற நூல்கள் எழுதினமையின் வைணவர் என்றும், 'கிறிஸ்துவின் அருள் வேட்டல்', கிறிஸ்து மொழிக் குறள் என்ற நூல்கள் எழுதினமையின் கிறிஸ்துவர் என்றும், 'அருகன் அருகே' எழுதினமையின் சமணரென்றும், 'மார்க்கிஸம்' பற்றி எழுதினமையின் கடவுள் நம்பிக்கையே

1. திருவாசகம்

இல்லாதவர் என்றும் கூற நேரிடும். எத்தகைய பெரியாராயினும் பெயர்ச் சீட்டு ஒட்டிக் குப்பியில் அடைக்கும் நம் பழைய வழக்கத்தை ஒட்டித் திரு. வி.க.வைச் சிறைப்படுத்தவேண்டா.

## இவர்தாம் முனிவர்

இவை அனைத்திலும் நுழைந்து, இவை அனைத்தையும் ஏற்றுக்கொண்டு, இவை அனைத்தையுங் கடந்து நிற்கும் தமிழர் ஒருவர் உளர் என்றால், இவை அனைத்தையும் ஒற்றுமைப்படுத்திக் காணும் நற்பழக்கத்தைத் தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் சிந்திக்கும் திறனுடைய தமிழனுக்கும் தந்தவர் ஒருவர் உளர் என்றால், அவர்தாம் இராயப்பேட்டைத் தவமுனிவர் திரு. வி.க. முனிவர் என்று கூறியவுடன், காட்டிற் சென்று கனசடை வைத்து, உலகம் மாயை, பெண் என்பவள் பேய், பொறிபுலன்களை அடக்கவேண்டும் என்று கூறும் ஒருவர் நம் மனக்கண்முன் தோன்றுதல் இயல்பு. ஆனால், இந்த முனிவர் இல்லறத்தே வாழ்ந்து ஒரு குழந்தைக்கும் தந்தையாக விளங்கினார். 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை' என்ற நூலும் எழுதினார். பொறி புலன்களை அடக்க வேண்டும் என்பதன் எதிரே அவற்றிற்கு உரிமை தந்து நன்கு அனுபவிக்க வேண்டும் என்று கூறும் இவர் 'முருகன் அல்லது அழகு' என்ற நூலையும் எழுதினார். எனவே, இவர் ஒரு தனிப்பட்ட வகையான முனிவர் என்பது விளங்கும்.

## தன்னலம் கருதா முனிவர்

முனிவர் என்பவர் காமம், கோபம் முதலியவற்றை முனிந்தவர்களே தவிர நாட்டையும் வீட்டையும் முனிந்த வர்களல்லர். இன்னுங் கூறவேண்டுமானால், தம்முடைய பொறி புலன்கள் மேல் நம்பிக்கையற்றுக் காட்டில் சென்று தவஞ் செய்யும் முனிவர்களானவர்களுங்கூட ஒரு மேனகை யைக் கண்டு தவத்தை இழந்தார்கள் என்று படிக்கிறோம்.

துர்வாசர் போன்ற முனிவர்கள் தம் சினத்தை அடக்க முடியாமல் அதனுடனேயே வாழ்ந்தார்கள். காட்டிற் சென்று இவற்றை அடக்க முடியாமல் போராடின இவர்களைவிட நாட்டில், வீட்டிலிருந்தே இவற்றை வென்று வாழ்ந்தவரை ஏன் முனிவர் என்று கூறக்கூடாது? மேலே குறிப்பிட்ட முனிவர்கள் தாம் வீடுபேறு பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு தவமியற்றினர். ஆனால், திரு. வி.க.வோ தன்னலத்தால் எதுவுஞ் செய்தாரில்லர். பிறர் பிறப்பு அறத் தவமுயன்றனர். இவர் என்ன கருதினார் என்பதை இதோ அவரே கூறுகிறார். 'எனக்குப் பிறப்பு வேண்டும்; பிறப்பு பயன் கருதாத தொண்டுக்குப் பயன்படுதல் வேண்டும்'[1] என்று அவர் தம் வாழ்க்கைக் குறிப்பில் கூறி விட்டு, வள்ளலாரின் 'அப்பா நான் வேண்டுதல் கேட்டு அருள் புரிதல் வேண்டும் ஆருயிர்கட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்' என்ற பாடலை எடுத்தாள்கிறார்.

### வள்ளலாரின் சன்மார்க்கம்

நாட்டிடை, மக்களிடை, இல்லறத்தே இருந்து கொண்டு துறவு வாழ்க்கையை மேற்கொண்ட இப்பெரியாரின் மனம் சமய வாழ்க்கையிலும் ஒரு புது வாழ்வை, சமரச சன்மார்க்க வாழ்வைக் கண்டது. சமரச சன்மார்க்கம் என்பதுபற்றி இராலிங்க வள்ளலார் விரிவாகப் பேசிச் சென்றுள்ளார் எனில், தமிழ்ப் பெரியார் இவ் வழியைப் புதிதாகக் கண்டார் என்று கூறல் பொருந்துமா என்று வினவலாம். சமரச சன்மார்க்கம் பற்றி வள்ளலார் கூறியது உண்மைதான் எனினும், அதன் அடிப்படை முற்றிலும் ஆன்மிக வாழ்வை மட்டுமே கொண்டது. மக்களிடைக் காணப்பெறும் பசி, துயரம் முதலியவற்றைப் போக்குதற்கு அடிகளார் சீவகாருண்யம் ஒன்றையே வழியாகக் கொண்டனர். தற்கால வாழ்வில், விஞ்ஞான யுகத்தில்,

1. 'வாழ்க்கைக் குறிப்புகள்', பக்கம் 20

அரசியல் வாழ்வில் பிறர் துயரம் களைய வேண்டிய தொழிலைக் கடமையாக வகுக்காமல் ஒருவரின் பரிவுக்கு (Mercy) வழியாக அமைப்பதிலும் இடர் பல உண்டு. வள்ளலார் இங்ஙனம் முடிவுக்கு வர ஒரு காரணம், சமுதாய நிலையில் நின்று உலகைக் காணாமல் ஆன்மிக நிலையில் நின்று உலகைக் கண்டதேயாகும்.

## இவர் கண்ட சன்மார்க்கம்

திரு. வி.க. அவர்கள் கண்ட சமரச சன்மார்க்கம் சமுதாய அடிப்படையில் நின்று காணப்பெற்ற ஒன்றாகும். ஆதலால்தான் பெரியார் காரல் மார்க்ஸையும் காந்தியின் ஆன்மிகத்தையும் தம்முடைய சமரச சன்மார்க்கத்தில் இடம் பெறச் செய்கிறார். இந்த நெறியை அவர் வகுப்பதற்கு முன்னர் ஏற்பட்ட அவருடைய வளர்ச்சியைக் காண்டல் வேண்டும்.

## மேனாட்டார் உதவி

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியவர் இப்பெரியார். ஆங்கிலம் அதிகம் கற்காவிடினும், தியாசாஃபிகல் சங்கத் தொடர்பாலும் அப்பொழுது நாட்டில் அதிகம் பேசப்பெற்ற சமதர்மக் கொள்கையாலும் ஈர்க்கப் பெற்றார். விஞ்ஞான அறிவு மேலைநாடுகளை ஆட்டிப் படைத்த அற்றை நாளில் அந் நாடுகளில் கடவுள் பற்றி ஆய்வு மிகுதியும் இடம் பெற்றது. விஞ்ஞான அறிவு வளர்ச்சி கடவுள் பற்றிய நீண்ட நாளைய கொள்கையை ஆட்டத் தொட்ங்கியது. சடப் பொருளையே சித்துப் பொருள் என்று கொண்டு பேசுவோர் மேனாடுகளில் மிகுந்தனர். இதன் எதிராக ஸர் ஆலிவர் லாட்ஜ் போன்றவர்கள் சித்துப் பொருளின் உண்மையை நிலைநாட்ட அந்த விஞ்ஞான அறிவையே பயன்படுத்தினர். அங்கு நடந்த இந்தப் போராட்டம் நமது அறிஞரின் கவனத்தை அதிகம் கவர்ந்தது.

## சடவாதம்

மேனாட்டாரைப் பொறுத்தவரை சடவாதம், உலகாயதம் என்பன புதுமையானவையாக இருக்கலாம். ஆனால், இந்த நாட்டைப் பொறுத்தவரை இரண்டாயிரம் ஆண்டுகளின் முன்னரே இவ் வாதம் இருந்து வந்தது. இதனை ஏற்று, மறுத்து, இதன் மேல்தான் நம்மவர் ஆன்மிக வாதத்தைத் தொடர்ந்தனர். அறிவின் துணை கொண்டு செய்யப் பெற்ற நம்மவருடைய வாதங்களில் எத்துணையோ கருத்துகள் தர்க்க முறையில் நேரடி வாதமாகப் பேசப் பெறாமல் பொருள்பொதி கதைகளாகப் (Parables) பேசப் பெற்றன. பிற்காலத்தில் இக் கதைகளின் உட்பொருள் மறைந்து வெறும் கதைகள் மட்டும் எஞ்சின. புராண வரலாறுகளை எடுத்துப் பேசுவோர் நிறைந்து இருந்தமையின் இக் கதைகள் செவிவழியாக இறங்கின. நாளாவட்டத்தில் இக் கதைகளைக் கேட்டவர்கள் கதைகள் எந்த உண்மையை அறிவுறுத்தத் தோற்றுவிக்கப் பெற்றனவோ அந்த உண்மை களை மறந்து கதைகளை அப்படியே நம்பத் தொடங்கி விட்டனர். இக் கதைகளே பெரிய இழுக்கை உண்டாக்கி விட்டது. இக் கதைகளை அப்படியே நம்புபவர்கள் மட்டுமே சமயவாதிகள் என்றும் ஏனையோர் சமய விரோதிகள் என்றும் கருதப் பெற்றனர்.

## பழமையில் புதுமை

விஞ்ஞானத்தையும் அறிந்துகொண்டு, சர் ஆலிவர் லாட்ஜையும் அறிந்துகொண்டு, நம்முடைய பழமையான சமயத்தையும் நன்கு அறிந்துகொண்டு ஆராய்ச்சியில் இறங்கிய திரு. வி.க.வுக்கு வியப்பும் வருத்தமும் ஒருங்கே எழுந்தன. எத்துணைப் பெரிய விஞ்ஞான உண்மைகளை நம்மவர்கள் பன்னெடுங்காலம் முன்பே அறிந்து கூறியிருப்பவும் அதன் அருமையறியாது இருந்துவிட்டோமே என அவர் அங்கலாய்க்கத் தொடங்கினார். அவருடைய

கிறிஸ்தவ நண்பர்கள் பல சமயம் நல்லெண்ணத்தாலும் சில சமயம் எள்ளும் நோக்கத்தாலும் அவருடைய சமயக் கதைகளின் உள்ளுறை அறியாமல் எள்ளி நகையாடினர். அவர்களுடைய சமயங்களைப் பொறுத்தமட்டில், நம் நாட்டுச் சமயங்கட்கிருப்பதுபோல் சாத்திரப் பகுதியும் தோத்திரப் பகுதியும் அதிகம் இல்லை. பிறர் தம் சமய தத்துவங்களில் குறை காண்கையில் அதற்கேற்ற விடை தேட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

## சடம் அழிவற்றது

புதிதாகக் கிடைத்த ஆங்கில விஞ்ஞான அறிவைக் கொண்டு நம்முடைய பழைய சாத்திரங்களையும் கதைகளையும் ஆராய முற்பட்டார் அறிஞர். உதாரணமாக ஒன்று கூற விழைகிறேன். விஞ்ஞானப் பொருள்களை ஆய்ந்து ஆய்ந்து முடிவில் அவை அணு வடிவுடையன என்று இறுதியாக உள்ள சடப்பொருள் (Matter) அழிக்கப்பட முடியாதது என்றும் கூறின (Indestrucibility of Matter) சடப் பொருள், சக்தி என்ற இரண்டுபற்றி (Matter and Energy) சர் ஆலிவர் லாட்ஜ் போன்றவர்கள் ஆய்வுரை வெளியிட்டனர். சைவ சித்தாந்தத்தில் ஊறித் திளைத்திருந்த திரு. வி.க.விற்கு, அதுவரை வெறும் சொல்லலங்காரமாக இருந்த 'சத்காரிய வாதம்', சத்தி, சிவம் என்பன புதிய காட்சி நல்கத் தொடங்கின. 'உள்ளது போகாது இல்லது வாராது' என்று கிளிப்பிள்ளைபோல் சத்காரிய வாதம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தவர்கள் வியக்கும் முறையில் சடப்பொருள் மாற்றமடையுமே தவிர அழிக்க முடியாததாகும் என்ற விஞ்ஞான தத்துவம் ஒளி காட்டியது போல் இருந்தது. திருமால் பத்து அவதாரங்களை எடுத்தார் என்றும் அவை இன்னஇன்ன என்றும் புராண வரலாறு கூறிற்று. அதனை அப்படியே மக்கள் நம்பவேண்டும் என்று பௌராணிக மதம் விரும்பிற்று. ஞானநூல் ஆராய்ச்சியும் விஞ்ஞான

அறிவுமுடையார் இக் கதைகள் உட்பொருளுடைய கதைகள் (Symbolical stories) என்பதை உணர்ந்தனர்.

## கூர்தல் அறம்

இந் நிலையில் டார்வினின் கூர்தல் பரிணாமக் கொள்கை (Theory of Evolution) உலகில் புகுந்தது. மேலை நாடுகளைப் பொறுத்தவரை இக் கொள்கை அவர்களுடைய சமயக் கொள்கைகளை ஆட்டங் காணச் செய்தது. மேனாட்டுச் சமயவாதிகள் டார்வினின் கூர்தல் கொள்கைக்கு விடை கூற முடியாமல் அவர்மேல் சீறிப் பாய்ந்தனர். திருமால் அவதாரங்கள் பற்றிய கதைகள் இப்பரிணாமக் கொள்கையுடன் எவ்வளவு ஒத்துப் போகின்றன என்பதை அறிஞர் கண்டார். அன்றியும், மணிவாசகப் பெருமான் ‘புல்லாய் பூடாய்’ என்ற முறையில் தொடங்கி, அம்முறையில் முன்பின்னாகவேனும் மனிதரை வைத்தமுறை அறிஞர்க்கு வியப்பை அளித்தது. டார்வின் தோன்றுதற்கு எத்துணை ஆயிரமாண்டுகட்கு முன்னர்த் திருமால் அவதாரக் கதைகள் தோன்றின. அவர்க்கு ஓராயிரம் ஆண்டின் முன்னரே மணிவாசகர் உயிர் வைப்பு முறையைப் பாடிச் சென்றார். டார்வினுக்கு ஈராயிரம் ஆண்டின் முன்னர்த் தோன்றிய ஆசிரியர் தொல்காப்பியனார் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்கள் வரை வகைப்படுத்திப் போனார்.

## திருமால் அவதாரங்கள்

இவற்றையெல்லாம் அறிந்த கூர்த்த மதியினராகிய நம் பெரியார் அந்த விஞ்ஞான அறிவை நம் சமயங்களை ஆராய்வதில் பயன்படுத்தினார். டார்வின் கொள்கைபற்றியும் திருமால் அவதார முறைபற்றியும் ‘தமிழ்நாடும் நம்மாழ்வாரும்’ என்ற நூலில் இதோ பேசுகிறார்:

“அவதாரங்களைப் பற்றி ‘யான் பன்முறை சிந்திப்பதுண்டு; ஆராய்வதுண்டு. சிந்தனையாலும் ஆராய்ச்சியாலும் எனக்கு டார்வின் கொள்கையில்

உறுதி ஏற்பட்டு விட்டது. டார்வின் முதலியோரை நாத்திகர் என்று தள்ளுதல் அறிவுடைமையாகாது. அவர்தம் ஆராய்ச்சித் திறன்கள், நம் பெரியோர் கண்ட அனுபவங்களுக்கு எவ்வெவ் வழியில் அரண் செய்கின்றன என்று பார்ப்பது அறிவுக்கு அழகு. டார்வின் முதலிய பேரறிஞர் கண்ட பல உண்மைகள், நமது நாட்டில் பல புராணக் கதைகளாக நிலவி வருகின்றன. புராணக் கதைகளை உள்ளவாறே கொள்வது பௌராணிக மதமாகும். ஞான நூல் ஆராய்ச்சியுடையவர் புராணக் கதைகளை அப்படியே கொள்வதில்லை. அவர், கதைகளின் உட்கிடக்கை களைக் காணவே முயல்வர். எதையும் பகுத்தறிவு கொண்டு ஆய்ந்து தெளிவடைவது சிறப்பு.

உலகை நோக்குவோம். தாவரம் முதல் மக்கள் ஈறாக உலகம் ஆக்கப்பட்டிருத்தலைக் காண்கிறோம். தாவரம் முதல் மக்கள் ஈறாக உள்ள யாவும் உயிர்களே. அவை உடலமைப்புக்கேற்ற வண்ணம் அவ்வவ்வுயிர் அறிவு விளக்கம் பெறுகிறது. இது பற்றியே முன்னோர், உயிர்களை ஓரறிவுமுதல் ஆறறிவு வரை வகுத்துக் காட்டினர்போலும். உயிர்களின் அறிவு உடலமைப்புக் கேற்ற வண்ணம் படிப்படியாக வளர்ந்து கொண்டே போகும். அவ் வளர்ச்சி புதிய ஒன்றிலிருந்து உறுவதில்லை. வளர்ச்சி, உள்ளத்திலிருந்து உறுகிறது. இது கூர்தல் (Evolution) எனப்படும்— (கூர்தல்— உள்ளது சிறத்தல்). இக் கூர்தல் நியாயப்படியே டார்வின், உயிர் வரலாற்றை விளக்கிப் போந்தனர்.

நம் நாட்டவர் கொண்டுள்ள அவதாரங்களைப் பார்ப்போம். அவை மச்சத்தினின்றும் தொடங்கு கின்றன. ஒவ்வொன்றும் படிப்படியே வளர்ந்து வருதல் கருதற்பாலது. மச்சம் நீரில் வாழ்வது. அது நிலத்தில்

நகர்தலுஞ் செய்யாது. கூர்மம் (ஆமை) சிறுகால் கொண்டு ஊர்ந்து செல்வது. வராகம் நன்றாக நடக்கவல்லது. நரசிம்மம், விலங்கினமும் மனித உருவும் கலந்தது. மனிதத் தோற்றத்துக்குக் கால்கொண்ட இடம் இதுவே. பின்னே வாமனன் தோன்றினன். வாமனன் மனிதனாயினும் அவன் முதலில் தோன்றின வனாதலின், அவன்பால் மனிதப் பிறவிக்குரிய முழுமை விளங்கவில்லை. அவன் குறளனாகவே இருந்தான். பரசுராமன் முழு மனிதன்; ஆனால், சாந்த மில்லாதவன். ஸ்ரீ ராமன் அழகன்; சாந்தமுடையவன்; ஒவ்வொருபோது பூர்வ ஞானமுடையவனாயிருந்தவன். கண்ணன் மனித உடலும் தெய்வ நிலையும் உடையவன்; எப்பொழுதும் பூர்வ ஞான முடையவனாயிருந்தவன்”[1]

இக் கருத்துக்களிலிருந்து நாம் அறிவது ஒன்றுண்டு. திரு. வி.க.வின் கருத்துப்படி இந் நாட்டுப் பழங்கால அறிஞர்கள் தம் நுண்மான் நுழைபுல உதவியால் இக்கால விஞ்ஞானிகள் கண்டளித்த பேருண்மைகளையே கண்டு எழுதிப் போந்தனர். ஆனால், இக் காலம்போல விஞ்ஞான ரீதியில் விளக்கம் தராமல் கதைகளாகவே எழுதிப் போயினர். அவ்வாறானால் மனிதனின் வளர்ச்சியைக் கூற வேண்டிய வர்கள் திருமாலின் அவதாரங்கள் இவை என்று கூற வேண்டிய இன்றியமையாது என்ற வினாவிற்கும் பெரியார் விடை நல்குகிறார். முன்னர்க் கூறிய அதே நூலில் அதே பகுதியைத் தொடர்ந்து இதனை விளக்குகிறார்.

“இவ்வவதாரம் ஒவ்வொன்றும் உயிர் வளர்ச்சி யின் ஒவ்வொரு நிலையை உணர்த்துவது. இந்நிலையை நம்மவர் கற்பம் என்பவர். உயிர் வர்க்கம்

[1] ‘தமிழ்நாடும் நம்மாழ்வாரும்’, பக்கம் 51, 52

மீனாயிருந்தது ஒரு கற்பம்; ஆமையானது மற்றொரு கற்பம்; இவ்வாறே பிறவும்.

அவதாரங்களை இறைவன்மீது ஏற்றுவது என்னை? இஃது உன்னத்தக்கது. உயிர்கட்கு அறியாமைக் கட்டு உண்டு. அதனால் அவைகட்கு இயல்பில் அறிவு விளங்குவதில்லை. அறிவு விளக்கத்துக்கென அவை மாயா உடலங்களைத் தாங்குகின்றன. அறியாமையால் கட்டுண்டு கிடக்கும் உயிர்கள், தாங்களே மாயா உடலங்களை எங்ஙனம் தாங்க வல்லனவாகும்? இதற்கு ஒரு துணை இன்றியமையாத தாகிறது. அத் துணை, அறியாமைக் கட்டில்லாத தாயிருத்தல் வேண்டும். அப்பொழுதே அஃது அறியாமைக் கட்டுடைய உயிர்கட்குத் துணை செய்யவல்லதாகும். அறியாமைக் கட்டில்லா ஒன்றே சித் என்னும் செம்பொருள். அச் சித் எங்கும் நிறைந்தது, எல்லாவற்றிற்கும் வித்தாய் இருப்பது. அஃது உயிர்களின் உள்ளும் புறமும் நின்று, அவை மாயா உடலங்களைத் தாங்கத் துணை செய்கிறது. அத்துணையின்றி உயிர்கள் மாயா உடலங்களைத் தாங்குதல் அரிது. இதனால் துணையின் பெருமை விளங்குதல் காண்க. சித் என்னுஞ் செம்பொருளின் துணையால், எல்லாம் நிகழ்வதால், எந் நிகழ்ச்சியையும் அதன்பாற்படுத்திச் சொல்வது ஒருவித மரபு. அம்மரபுபற்றிப் புராணங்கள் அவதாரங்களை ஆண்டவன்பாற் படுத்தினபோலும். இம் முறையில் அவதார நுட்பம் எனக்கு விளங்குகிறது. அக்கண்ணுங் கருத்துங் கொண்டு ஆழ்வார் கூறிய அவதாரங்களை நோக்குகிறேன். யான் மனிதன்; குறையுடையவன்."*

* 'தமிழ்நாடும் நம்மாழ்வாரும்' பக்கம் 52, 53.

இத் தருணத்தில் பெரியாரவர்கள் எழுதிய 'என் கடன் பணிசெய்து கிடப்பதே என்ற நூலில் கூறியுள்ள ஒரு பகுதியை அப்படியே இவண் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

'மேலைநாட்டு நாத்திக நூல்கள் பல, கீழை நாட்டு ஆத்திக நூல்களுக்கு ஆக்கந் தேடுவன என்பது எனது அநுபவத்திற் கண்ட உண்மை. மேலைநாட்டு நாத்திகப் பெரியோர் புறப்பொருளை ஆராய்ந்து கண்ட உண்மையை ஆதாரமாகக் கொண்டு, அவர் பின் வந்தார் சிலர், அதை ஆராய்ச்சி செய்து, இப்பொழுது சடப்பொருளுக்கு வேறாக ஒரு சித்துப் பொருளுண்டு என்னும் முடிவிற்கு வந்திருக்கின்றனர். பூதபௌதிக தத்துவ நூலில் தேர்ச்சி பெற்ற ஸர் ஓலிவர் லாட்ஜ் முதலியோர், கண்ணுக்குப் புலனாகுஞ் சடப் பொருளுக்கு வேறாக மற்றுமொரு பொருள் இருத் தலை நிறுவிக் காட்டியிருக்கின்றனர்."*

## விஞ்ஞானம் சமயத்தின் பகையா

இதில் வியப்பு என்ன எனின், விஞ்ஞானப் புதுமைகள் தோன்றிய மேனாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இவ் விஞ்ஞான அறிவு சமயக் கொள்கைகளை அழித்து ஒழித்துவிடும் என நம்பினர். ஆனால், நம்முடைய நாட்டில் தோன்றிய இப்பெரியார் இவை நம் பழங் கொள்கைகட்கு அரண் செய்யும் எனக் கருதினார். கருதின அளவில் நிற்காமல் மேலும் மேலும் உண்மையைக் காண இவற்றின் துணையை நாடி நின்றார். நம்முடைய சமயத்தை மட்டும் ஆய்வதுடன் இவர் நின்றுவிடவில்லை. இதோ நம் வாழ்க்கைக் குறிப்பில் தாம் செய்த ஆராய்ச்சிகள் பற்றிக் கூறுகிறார்.

* 'என் கடன் பணிசெய்து கிடப்பதே', பக்கம் 18.

"மருவூர் கணேச சாஸ்திரியார் நடுப்பட்டணத்தில் சிவகீதை சொல்வர்; சூளையில் நீலகண்டபாடியஞ் சொல்வர்; வெவ்வேறிடங்களில் வெவ்வேறு நூல்கள் சொல்வர். அவ்வவ்விடத்துக்கு யான் செல்வேன். வான்மீகி இராமாயணம், வியாசபாரதம், தக்கவரால் சொல்லப்படும் இடங்களிலெல்லாம் என்னைக் காணலாம். பகவத்கீதை பலரிடங் கேட்டேன் ............... அயோத்தி தாஸ் பண்டிதரால் திரிபிடகமும் வேறு நூல்களும் போதிக்கப் பட்டன...................... அப்துல்கரீம் என்பவர் அங்கே வருவர்; அவர் ஒரு மௌல்வியின் புதல்வர்; திருக்குரான் ஓதியவர். அவர் திருக்குரானை வாசித்துத் தமிழில் பொருள் கூறுவர் .................................... சிங்காரவேல் செட்டியார் டார்வின் கண்ட உண்மை யையும் பிறர் கண்ட நுட்பங்களையும் அறிவுறுத்துந் தொண்டில் ஈடுபட்டார்..................."*

யான் மாணாக்கனாயிருந்து பைபிள் படித்தேன்........................."†

## மேனாட்டறிவு சமயத்திற்கு ஆக்கம்

சமய உலகில் இத்துணை ஆர்வத்துடன் நுழைந்த திரு.வி.க. எவ்வாறு பிற துறைகளில் இறங்கினார். அவ்வாறு அவர் சென்றது சமயத்துறை ஆராய்ச்சிக்கு ஆக்கந் தந்ததா அன்றிக் கேடு சூழ்ந்ததா என்பதுபற்றி அவரே பேசுகிறார் தம் 'வாழ்க்கைக் குறிப்புகள்' என்ற நூலில்.

"எனது வாழ்க்கை, தொடக்கத்தில் சமயப் பணியில் ஈடுபட்டது. அதனால் பல சமய ஆராய்ச்சிப் பேறு எனக்குக் கிடைத்தது. அவ்வாராய்ச்சி பொதுமை

* 'வாழ்க்கைக் குறிப்புகள்', பக்கம் 103.

† 'வாழ்க்கைக் குறிப்புகள்', பக்கம் 203.

உணர்ச்சியை உண்டாக்கியது. சமயங்களில் அடிப்படையாயுள்ள பொதுமை—சமரசம்—ஏன் உலகில் பரவவில்லை என்று யான் எண்ணுவேன்; சிற்சில போது ஆழ எண்ணுவேன். எனக்கு ஒன்றும் விளங்குவதில்லை. சிங்காரவேல் செட்டியார் கூட்டுறவு சிறிது விளக்கஞ் செய்தது. அவ்விளக்கம், பொதுமையை உலகில் பரப்பி நிலைபெறுத்தவல்லது காரல் மார்க்ஸ்' கொள்கை என்ற எண்ணத்தை என் உள்ளத்தில் இடம் பெறச் செய்தது.

காந்தியடிகளின் அஹிம்ஸா தர்மத்தில் என் மனம் சென்றது. 'அஹிம்ஸை நல்லதே. அது வெறும் தத்துவ உலகிலும், கவி உலகிலும் நிலவிக் கொண்டிருக்கும்; வாழ்க்கை உலகில் ஒன்றி நிலவுமா?' என்று ஐயுறுவேன். சிலவேளை ஐயம் முனைந்தெழுந்து என் நெஞ்சைத் துளைக்கும். துளைப்பு சிற்சில சமயம் மனநோயையும் உண்டுபண்ணும். அந்நோயைப் போக்க மார்க்ஸ் மருத்துவராய் என் மானத உலகில் தோன்றுவர். மார்க்ஸ் அருளியுள்ள கொள்கை உலகில் பரவினால் வாழ்க்கை அஹிம்சையில் ஒன்றுவதாகும். என்னும் நுட்பம் எனக்குச் செவ்வனே விளங்கியது.

ஒரே வயிற்றில் பிறந்தவர் பொருளைக் குறித்துப் போரிடுவதும், மன்றம் ஏறுவதும் என் உள்ளத்தைப் புண்படுத்தும். உடன் பிறந்தவரிடத்தில் போர் மூட்டாத— அவரை மன்றம் ஏற்றாத—ஆட்சிமுறை அமையுமா என்று ஏக்கறுவேன். மார்க்ஸ் நினைவு அவ்வேகத்தைப் போக்கும். அமைதி நினைவு தோன்றும் போதெல்லாம் மார்க்ஸ் நினைவும் உடன் தோன்றும் வழக்கமாகியது.

மார்க்ஸ் கொள்கைக்கு ஆக்கந் தேடும் அமைப்பு தொழிலாளர் இயக்கம். அவ்வியக்கத்தில் இறங்கித்

தொண்டு புரியக் கீர் ஹார்டியின் காட்சியும், 'வெங்கடேச குணாமிர்த வருஷிணி சபை'யின் அழைப்பும் துணைநின்றன. வாழ்க்கையில் என்னென்னவோ மாறுதலும் வளர்ச்சியும் நிகழ்கின்றன; அவ்விசித்திரத்தை யான் என்ன என்று விளம்புவேன்?

'மார்க்ஸியம் பொருட் பொதுமையே அறிவுறுத்தும் நாத்திகமன்றோ?' என்று சிலர் என்னைக் கேட்பதுண்டு. மார்க்ஸியம் என்று சிலர் நாத்திகப் பிரசாரஞ் செய்வதும் எனக்குத் தெரியும். என் மனத்துக்கு மார்க்ஸியம் நாத்திகமாகத் தோன்றவில்லை எப்படி?

மகமதுவின் தெய்வ ஒருமையும், கிறிஸ்துவின் அன்பும், புத்தர் தர்மமும், அருகர் அஹிம்ஸையும், கிருஷ்ணன் நிஷ்காமியமும், குமரன் அழகும், தட்சிணாமூர்த்தியின் சாந்தமும், பொதுமை அறத்தை வேராகக் கொண்டவை. அப்பொதுமை அறம் ஏன் ஓங்கவில்லை? சில தடைகள் மறிக்கின்றன. அவை யாவை? சாம்ராஜ்யங்கள், மடங்கள், சம்பிரதாயங்கள், கட்டுப்பாடுகள், கண்மூடி வழக்க வொழுக்கங்கள் முதலியன. இவற்றைப் படைத்து வளர்ப்பது எது? முதலாளி-தொழிலாளி வேற்றுமை. இவ் வேற்றுமையை ஒழிக்கவல்லது பொருட்பொதுமை. பொருட் பொதுமை மகமதுவின் தெய்வ ஒருமையும் கிறிஸ்துவின் அன்பும் பிறவும் மன்பதையில் கால் கொள்வதற்குத் துணை செய்யும் ஆற்றல் வாய்ந்தது என்னும் நுட்பம் எனக்குப் புலப்பட்டது. அதனால் மார்க்ஸியம் என் உள்ளத்தைக் கவர்ந்தது.

உலகம் போராட்டத்துக்கு இரையாதல் கண்கூடு. மூலம் என்ன? இது குறித்துத் தனித்தனி ஆராய்ச்சி செய்தவர் பலர். அவருள் சிறந்தவர் காரல்

மார்க்ஸ். உலகப் போராட்டத்துக்கு மூலமாக நிற்பது முதலாளி-தொழிலாளி என்னும் வேற்றுமை உணர் வென்பது மார்க்ஸ் கண்ட உண்மை. இது நடுநிலையில் நின்று போர் மூலத்தை ஆராயும் ஒவ்வோர் அறிஞர்க்கும் எளிதில் புலனாகும்.

பண்டை நாளில் சாம்ராஜ்யங்கள் பெருக வில்லை. அதனால் முதலாளி-தொழிலாளி வேற்றுமை உணர்வு வளராமற் கிடந்தது. இந்நாளில் சாம்ராஜ் யங்கள் பெருகியுள்ளன. அப் பெருக்கம் முதலாளி-தொழிலாளி வேற்றுமை உணர்வை வளர்ப்பதாயிற்று. அவ்வளர்ச்சி வாழ்க்கையில் போராட்டத்தைப் புகுத்தியது. போராட்டத்தை ஒழிக்கும் மருந்து காரல் மார்க்ஸுக்குக் கிடைத்தது. அது, பொதுமை அறத்தை நிலைபெறுத்தவல்ல பொருளாதார சமரசம்.

மார்க்ஸ் கண்ட பொருட் பொதுமை உலகில் புற அமைதியை நிலவச் செய்யும் மாண்புடையது. அவ் அமைதியை மகம்மது, கிறிஸ்து, அருகர், புத்தர், கண்ணபிரான், குமரன், தட்சிணாமூர்த்தி முதலியோர் கொள்கை நிலைபெறச் செய்யும். அக அமைதிக்குப் புற அமைதி வேண்டற்பாலது. புற அமைதியை உலகில் நிலவச் செய்யும் வல்லமை வாய்ந்த மார்க்ஸியத்தை நாத்திகம் என்று எப்படித் தள்ளுவது? மார்க்ஸி யத்தைத் தள்ளுவது சான்றோரின் அமைதிச் செல்வத்தைத் தள்ளுவதாகும்; போராட்டத்தை அழைப்பதாகும்.

சான்றோர் அருளிய பொதுமை அறத்துக்கு ஆக்கந் தேடவே யான் மார்க்ஸின் பொருட் பொதுமைக் கொள்கையைத் தழுவுகிறேன். மார்க்ஸி யத்தைச் சான்றோரின் மூலக் கொள்கைக்கு மாறாகப்

பயன்படுத்தும் இயக்கங்களில் என் மனம் ஈடுபடுவ தில்லை.

மார்க்ஸியம் முழுமையதா? குறையுடையதா? எதிலுங் குறையுண்டு. மார்க்ஸியத்திலுஞ் சிறு குறையுண்டு. என்ன குறை? அதன்கண் 'சத்' என்னுஞ் செம்பொருள் வெளிப் படையாகக் காணப்படாமை. மார்க்ஸியத்தில் 'சத்' என்னுஞ் செம்பொருள் சேர்ந் தால் அது நிறைவுடையதாகும்.

மார்க்ஸியம் சமதர்மத்தை அறிவுறுத்துவது. சம தர்மத்தில் 'சத்' தானே சேரும். 'சத்'தைக் கொண்ட சம தர்மமே சன்மார்க்க மென்பது. சன்மார்க்கம், எது? மார்க்ஸியமும், மகம்மது, கிறிஸ்து, புத்தர், அருகர், கண்ணபிரான், குமரன், தட்சிணாமூர்த்தி முதலியோர் கொள்கையுஞ் சேர்ந்த ஒன்று சன்மார்க்கம். இஃது எனது கல்வி கேள்வி ஆராய்ச்சி அனுபவங்களி னின்றும் கனிந்த உண்மை.*"

இக்கருத்துகளை அவர் வாய்மொழியாகவே அறிந்த பிறகு அவருடைய அறிவு பணிபுரிந்த வகையை ஒருவாறு அறிந்துகொள்ள முடிகின்றது. இந்த அடிப்படையை வைத்துக் கொண்டு அவருடைய சமய அறிவு வளர்ச்சி எவ்வாறு பரிணமித்தது என்பதைச் சற்று விரிவாகக் காண்டல் வேண்டும். இவ்வளர்ச்சியில்தான் திரு.வி.க.வின் முழு வடிவத்தையும் காண முடிகிறது. இங்கே யான் கூறப் போகின்றவை அவர் எழுதிய நூல்களை அடிப்படையாகக் கொண்டு எழுபவை. தேவைப்பட்ட இடங்களில் மேற்கோள் களை அவருடைய நூல்களிலிருந்து எடுத்துத்தர விழை கின்றேன்.

* 'வாழ்க்கைக் குறிப்புகள்', பக்கம் 579 முதல் 582 வரை

மனிதனுடைய தோற்றம், வாழ்வு, பிற உயிர்களோடு அவனுக்குள்ள தொடர் என்பவைபற்றிய ஆராய்ச்சி மேனாடுகளில் மிகப் பிற்காலத்தில் தோன்றியது. சென்ற இரு நூற்றாண்டுகளில் இவ்வாராய்ச்சி தோன்றினும் மிக வேகமாக முன்னேறியுள்ளது என்பதை மறுத்தல் இயலாது. ஆனால், உயிர் வருக்கம் முழுவதும் தொடர்புடையன என்பதையும் எடுக்கும் உடலுக்கேற்ப அவை அறிவு விளக்கம் பெறுகின்றன என்பதையும் இந்நாட்டவர் பல்லாயிரம் ஆண்டுகளின் முன்னரே அறிந்திருந்தனர். மனிதன் விலங்கி லிருந்து தோன்றினான் என்பதை மேனாட்டு விஞ்ஞானி யரும் கீழை நாட்டுச் சமயவாதிகளும் ஒப்புக் கொள்கின்றனர். இவ்வாறு தோன்றிய மனிதருள்ளும் அவரவர்கள் விலங்கி லிருந்து எத்துணைத் தூரம் கடந்து வந்துள்ளனரோ அத்துணைத் தூரம் அறிவு விளக்கம் பெறலாயினர். இவை பற்றி நம் பெரியார் 'முருகன் அல்லது அழகு' என்ற நூலில் விளக்கமாகப் பேசுவதைச் சற்றுக் காண்டல் வேண்டும்.

> "மலையிடை மக்கள் நல்வாழ்வு செலுத்தப் புகு முன்னர் மக்கள் எப்படி இருந்தார்கள்? மக்கள் தோற்ற வரலாற்றை ஆராய்ந்தால் பலதிற உண்மைகள் போதரும். மக்கள் தோற்ற வரலாற்றைப்பற்றிச் சமய நூல்கள் பலவாறு பகர்கின்றன. அவை நம்பிக்கை யுலகுக்கு உரியனவாம். இயற்கைத் துணை கொண்டு ஆராய்ந்து முடிவு கண்ட அறிஞர் மக்களின் மூதாதைகள் விலங்குகளென்று கருதுகின்றனர். மக்களுலகின் தோற்றுவாய்க்கு நிலைக்களன் விலங்கு உலகம் என்பது அக் கூர்த்தமதியினர் ஆராய்ச்சியிற் போந்த உண்மை. இவ்வாராய்ச்சியிற் புகுந்து பன்னெடு நாள் உழைத்துப் பலதிற நுட்பங்களை உலகிற் குணர்த்திய ஹெக்கல், டார்வின் முதலிய பேரறி ஞர்க்கு உலகங் கடமைப்படுவதாக.

நமது நாட்டுப் புராணங்கள் சில இவ்வுண்மையை ஒருவாறு கதைகள் வடிவாக அறிவுறுத்துகின்றன. புராண நூல்களில் பல இடங்களில் திருமாலின் பத்துப் பிறவிகள் சொல்லப்படுகின்றன. கூர்தல் அல்லது உள்ளது சிறத்தல் (Evolution) முறை பற்றி அப்பத்தையும் உற்று நோக்கின், படிப்படியாக உயிர்களின் பிறவி வளர்ச்சி புலனாகும். நம் நாட்டுப் பௌராணிகர்கள் பெரிய ஹெக்கல்கள், டார்வின்கள் போலும்!

விலங்கினின்றும் பிறந்த மகனுக்குத் தொடக்கத்தில் பலதிற விலங்குக் கூறுகளிருந்தன. அவற்றுள் ஒன்று பல். அந்நாளைய மகனுக்குக் கூரிய வாளனைய கோரைப் பற்களிருந்தன. அப்பல் நாளடைவில் தேய்ந்து தேய்ந்து இப்பொழுதுள்ள நிலையை அடைந்திருக்கிறது. கோரைப் பல்லினின்றுந் தேய்வுற்ற அப் பல்லுக்கு இன்னும் நாய்ப் பல் என்னும் வழக்கிருத்தலை ஓர்க. கோரைப் பல்லெனும் விலங்குப் பல்லுடைய பாவைகள் இன்னுங் கோயில்களில் நின்று கொண்டிருக்கின்றன. அவை நமது மூதாதைகளின் நினைவு குறிகளாகும்.

விலங்கினின்றும் பிறந்த மகனுக்குக் கடவுள் உணர் வெனும் அன்பு நெறி உடனே விளங்கியிராது. பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே அவனுக்குக் கடவுள் உணர்வு தோன்றியிருக்கும். எப்போது அவ்வுணர்வு தோன்றியிருக்கலாம்?

நீண்ட கோரைப்பல் விலங்குணர்விற்கு அறிகுறி. அஃதிருந்த மட்டும் மகனுக்குக் கடவுள் உணர்வு தோன்றியிராது. பல்லுக்கும் குடலின் உள்ளுறுப்புச் சிலவற்றிற்கும், மூளைக்குந் தொடர்புண்டு. பல் தேயும் அளவினதாக உள்ளுறுப்புகளுந் தேயும். அவ்வுறுப்புகள்

தேயும் அளவினதாக மூளையின் வன்மை அருகி மென்மை பெருகும். மென்மை அளவாக அறிவு விளக்கமுறும். சில ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் இருந்த மக்களின் உள்ளூறுப்புகட்கும், சில நூறு ஆண்டு கட்கு முன்னர் இருந்த மக்களின் உள்ளூறுப்புகட்கும், இப்போதைய மக்களின் அவ்வுறுப்புகட்கும் வேற்றுமை உண்டு. இப்பொழுதுஞ் சில உள்ளூறுப்புகள் பயனின்றிக் கிடக்கின்றன என்று மருத்துவ அறிஞர் கருதுகின்றனர். இவ்விரிந்த ஆராய்ச்சியில் ஈண்டு நுழைய வேண்டுவதில்லை. விலங்கினின்றும் பிறந்த மகன் எப்பொழுது கடவுள் உணர்வு பெற்றிருப்பான் என்பதொன்றே ஈண்டு நமக்குத் தேவை.

விலங்கினின்றும் தோன்றிய மகன், வடிவான் விலங்கொடு வேறுபட்டு விளங்கினும், உணர்வால் நீண்ட நாள் அதனோடு வேறுபடாமலிருந்தான். பின்னைப் பல் முதலியன தேய்வுற, உணர்வானும் அவன் விலங்கினின்றும் வேறுபடலானான். ஆகியும் மகன் இன்னும் விலங்குணர்வினின்றும் முற்றும் விடுதலையடைந்தானில்லை. விடுதலையடையாமை யான் அவன் இனத்துள் இரு பிரிவு தோன்றலாயின. ஒன்று மாக்கள் இனம்; மற்றொன்று மக்கள் இனம். மாக்களாவார் விலங்கையொத்த ஐயறிவுடையார்; மக்களாவார் ஆறறிவுடையார். 'மாவு மாக்களும் ஐயறி வினவே', 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்றார் தொல்காப்பியனார். அம்மாக்களும் மக்களுஞ் சேர்ந்த ஒன்றே மன்பதை என்பது.

ஆறாவது அறிவு எது; அவ்வறிவே கடவுள் உணர்வெனும் அன்பு நெறி விளக்கத்துக்கு நிலைக் களனாயிருப்பது. அவ்வறிவு விளங்கிய மக்கள், அவ்வறிவு விளங்காத மாக்களினின்றும் பிரிவுற்ற

போழ்து, அவர்களிடை (மக்களிடை)க் கடவுள் உணர்வு அரும்பியிருத்தல் வேண்டும். அக்கடவுள் உணர்வே மக்களையும் மாக்களையும் வேறுபடுத்துவ தென்க. மக்களிடையே கடவுளுணர்வு, அவர்கள் மலையிடை மட்டும் வாழ்ந்த போது தோன்றின மையால், அவர்கள் கடவுளைக் 'குறிஞ்சி கிழான்' 'மலை கிழவோன்' என்று போற்றினார்கள் போலும்!"*

## அச்சத்திலிருந்து

மலையிடைத் தோன்றிப் பன்னெடுங் காலம் ஆன பிறகு மாக்கள் நிலையை விடுத்து மக்கள் நிலையை அடைந்த மனிதன் அதற்கும் நெடுங்காலம் கழித்தே கடவுள் அறிவு பெற்றிருத்தல் கூடும். முதன் முதலாகக் கடவுளறிவை எவ்வாறு மனிதன் பெற்றிருப்பான்? தன்னினும் மேம்பட்ட இயற்கையினிடத்துக் கொண்ட அச்சங் காரணமாக இயற்கை யினிடத்து ஒரு மதிப்புத் தோன்றியிருக்கும். இதிலிருந்து நெடுங்காலங் கழித்து அச்சம் நீங்கியவனாய் இயற்கையில் ஈடுபடத் தொடங்கினான். இதுபற்றி அறிஞர் 'முருகன் அல்லது அழகு' என்ற நூலில் இதோ பேசுகிறார்:

"மலையிடை வாழ்ந்த தமிழ் மக்கள் தங்கட்குக் கண்கூடாகக் காட்சியளித்த இயற்கையை அடிக்கடி கண்ணாற் கண்டு, உள்ளத்தால் முகந்து அதை இடையறாது நினைந்து நினைந்து, அதன் கண் படிந்த வாழ்வு நடத்தினார்கள். அதன் பயனாக அவர்கள் இயற்கையினுள் பிரிவின்று விரவி நிற்கும் அழகையும், அழகின் மாறாத இளமையையும் இளமையிலூறும் அழியா மணத்தையும், இவையுடைய ஒன்று எல்லா வற்றையுங் கடந்து மாறுதலின்றி யொளிருந் தன்மை யையுள் கண்டார்கள். இவ்வழகு, இளமை, மணம்,

* 'முருகன் அல்லது அழகு', பக்கம் 30–32.

கடவுட்டன்மை ஆகிய இயல்புகளைக் கொண்ட ஒன்றைப் பண்டைத்தமிழ் மக்கள் முருகு என்னுஞ் சொல்லால் அழைத்துப் போற்றினார்கள், முருகு என்பது பொருள் பொதிந்த ஒரு சொல். அம்முருகை யுடையவன் முருகன்."*

## இயற்கை பற்றி அறிதல்

மனிதனின் இயற்கை ஈடுபாடே அவனைக் கடவுட் பொருள்பற்றிச் சிந்திக்கத் தூண்டியது. இந்த இயற்கையைப் படைத்ததன் மூலமே கடவுள் உயிர்களைப் புரக்கின்றான் என்ற உண்மை நாளாவட்டத்தில் மனிதனுக்குப் புலனா யிற்று. இயற்கையைக் கண்டு அஞ்சிய மனிதன், பின்னர் அதன் உதவியாலேயே தன் வாழ்வு நடைபெறுகிறது என்பதைக் கண்டுகொண்டான். அடுத்து அதன் மாட்டு அன்பு செலுத்தவும் அதன் அழகில் ஈடுபடவும் கற்றுக் கொண்டான். மலை முதலிய இயற்கைப் படைப்பில் அழகு உள்ளது என்று கருதியது போக, அவையே அழகு என்பதையும் அறியத் தொடங்கினான். பொருளினிடத்து அழகிற்காக ஈடுபட்ட மனிதன் அதனிடம் உள்ள அழகு மாறாதது என்பதையும் அறிந்து கொண்டான். இந்த அற்புத இயற்கை தன் பொருட்டாகவே உளது என்பதையும் அறிந்த பிறகு, இத்தகைய ஒன்றைத் தன் பொருட்டு ஆக்கித் தந்த தலைவன் ஒருவன் இருத்தல் வேண்டும் என்ற எண்ணம் உதிக்கலாயிற்று. **எல்லையற்ற பரம்பொருளின் அடையாளமாய், அப்பொருளின் அழகை எடுத்துக்காட்டும் கண்ணாடியாய் இயற்கை அமைந்திருப்பதைக் கண்டான்.**

## நியதியிலடங்கிய இயற்கை

இதனையடுத்து, இயற்கை மூலம் தான் பெற்றுவரும் துணை, இயற்கை தனக்கு நேரே நல்குகிறதா, அன்றி அந்த

* அதே நூல், பக்கம் 33, 34.

இயற்கையின் உள்ளுறை பொருளாய் இருக்கும் இறையி னுடையதா என்பதையும் ஆய்ந்தான் என்றும் அழகையே நல்கும் இயற்கை மாறிமாறித் தோன்றி மறைந்துவரும் சூழ்நிலையையும் மனிதன் கண்டான். விண்ணினை அண்ணாந்து பார்த்த மனிதனுக்கு, அங்குள்ள கோள்களும் மீன்களும் ஒரு நியதியை ஒட்டியே சென்று வருகின்றன என்ற உண்மை புலப்படலாயிற்று. ,அதே போன்று மலர்களும் காய்களும் ஒரு நியதியை ஒட்டியே தோன்றி மறைகின்றன என்பதையும் அறிய முடிந்தது. தன்னைச் சுற்றியுள்ள இயற்கை முழுவதிலும் ஒரு நியதி இருப்பதை அறிந்த மனிதன், இவை நியதிக்குக் கட்டுப்பட்டு நடக்கின்றன என்று அறிந்த பிறகு, இந்த நியதியை வகுத்தவன் ஒருவன் இருத்தல் வேண்டும் என்பதை உணர அதிக காலம் செல்லவில்லை.

## இறையுணர்வு

ஆதிமனிதன் இறையுணர்வைப் பெற்றது இயற்கையி லிருந்துதான் என்பதைத் திரு.வி.க. தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகிறார். மிகப் பழைய காலத்தையே மலையில் வாழ்ந்த மனிதன் இயற்கையின் அழகைக் கண்டு அதிலீடுபட்டு இயற்கை தோற்றுவிக்கும் புற அழகின் அடிப்படையில் இலங்குவது மாறாத அழகு என்ற உண்மையைக் கண்டு அதற்கு 'முருகு' எனப் பெயரீந்தான். பிற்காலத்தில் தோன்றிய அடியார்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகிய அனைவரும் இறைவனைப்பற்றிப் பாடும்போதெல்லாம் இயற்கையின் வடிவமாக அவன் அமைந்திருப்பதையும், அதனையும் கடந்து அவன் விளங்குவதையுமே பாடிச் சென்றனர். இயற்கை வழிபாடே இறைவன் வழிபாடாக அன்று கருதப் பெற்றது. இதுபற்றித் திரு.வி.க. அவர்கள் 'தமிழ்நாடும் நம்மாழ்வாரும்' என்ற நூலில் இவ்வாறு குறிக்கிறார்:

"இயற்கையைப் போற்றுவதும், இயற்கை இறையைப் போற்றுவதும் ஒன்றே. சில அறிஞர் இறையை இயற்கை என்றே போற்றுவர்; சிலர் இயற்கை வடிவமான இறை என்று போற்றுவர். அப்போற்று தலும் இப்போற்றுதலும் சென்று சேருமிடம் ஒன்றே. ஆகவே, இயற்கையைப் போற்றுவோர் யாவரும் இறைவனைப் போற்றுவோரேயாவார். இது பற்றிப் பொதுவாக எனது நூல் பலவற்றிலும், சிறப்பாகச் 'சன்மார்க்க போதமும் திறவும்' என்னும் நூலிலும் விளக்கியுள்ளேன்.

எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாய், எங்குமிருப்ப தாய் உள்ள வித்தை உணர்ந்த ஆழ்வார்— எங்குமுள்ள அவ்வித்தை எட்டு மூர்த்தமாக உலகுக்கு உரைத்தருளிய நம்மாழ்வார்—'இறை வடிவம் இயற்கை' என்பதைப் பலபடப் பாடிப்பாடி, இயற்கையின் மாண்பை இனிது விளக்கினார். ஆழ்வார் இயற்கையில் தோய்ந்து, இறையில் திளைத்து, இறை இன்பம் கொழிக்க இயற்கைப் பாக்களைத் தமிழில் பொழிந்தார். அவர் பாக்களில் எங்கும் இயற்கை; எங்கும் இறை; எங்கும் இயற்கை இறை.

ஆழ்வார் அருளிய இயற்கைப் பாக்களை நோக்குவோம்; அவற்றில் பூக்கள் மலர்கின்றன; ஞாயிறு வெயில் வீசுகிறது; திங்கள் அமுதம் பொழிகிறது; சோலை மணங் கமழ்கிறது; மலைகள் நிற்கின்றன; மேகங்கள் தவழ்கின்றன; பறவைகள் பறக்கின்றன; ஆநிரைகள் மேய்கின்றன; ஆயர்கள் ஆடுகிறார்கள்; குழலோசை கேட்கிறது; உயிர்கள் உலாவுகின்றன; உலகம் புலனாகிறது. இஃதென்ன அருமை! ஒருவர் பாக்களில் இவ்வளவு பொருள்!

சொற்புலவோர் இயற்கைக் கூறுகளை வருணிப்பது வழக்கம். அவர்கள் பாக்களில் சொற்களைக் காணலாம்; பொருள்களைக் காண்டல் அரிது. நம்மாழ்வார் பாக்களிலோ பொருள்கள் பொலிகின்றன. அப் பொருட்கண் அறிவு செறிந்து, அன்பு நிறைந்து, இன்பம் பிலிற்றுகிறது. இவ்வுண்மை என்னை? நம்மாழ்வாரை அடைவோம்.

நம்மாழ்வார்,—பூ, ஞாயிறு, திங்கள், மலை முதலியவற்றை அவ்வப் பொருள் வடிவாகப் புறக் கண்களால் மாத்திரங் கண்டு, அவற்றைப் பாக்களாகப் பாடினாரில்லை. அப் பொருள்களின் ஊடே கலந்துள்ள ஓர் அகண்டாகாரப் பேரறிவை ஆழ்வார் தமது அகக் கண்ணால் கண்டு, அதனைப் பாக்களாகப் பாடினார் என்பது தெரியவருகிறது. அக்காட்சி முதிர்ச்சியால், தமது அகத்துள்ள அறிவும், புறத்துள்ள அறிவும், ஒன்றுபட்டு ஊற்றிய இன்பக் குழம்பே ஆழ்வார் பாக்கள் என்னலாம். ஆழ்வார் கொண்ட பூவும், ஞாயிறும், திங்களும், பிறவும் ஆண்டவன் வடிவங்கள். அவர் பூ முதலியவற்றை இறைவனாகவே வழிபட்டுப் பாக்களை அருளினார். நம்மாழ்வார் இயற்கை வாயிலாகக் கடவுளைக் கண்டு, அக்கடவுள் தம்முள்ளத்துள்ள செம்பொருள் என்பதை உணர்ந்து, எல்லாம் கடவுள் மயம் என்னும் உண்மையை உலகுக்கு அறிவுறுத்திய பாக்கள் பல."*

## அழகு எங்கே உள்ளது?

அடியார்களும் ஆழ்வார்களும் இயற்கையை இறைவனுடைய அட்டமூர்த்தமாகவே கருதி வழிபடக் காரணம் என்னை? ஆதி மனிதனில் தொடங்கி இன்றளவும் மனிதன்

* 'தமிழ்நாடும் நம்மாழ்வாரும்', பக்கம் 22, 23, 24.

அழகில் ஈடுபடுபவனாகிறான். அழகில் ஈடுபடாத மனிதர்களே இல்லை. ஏன்? மாக்கள் என்று இழித்துக் கூறப்பெறுபவர்களும் அழகில் ஈடுபடுகின்றனர். உயிர்களை ஈர்ப்பதற்கு அழகு உறுதுணையாக இருக்கிறது எனில் அந்த அழகு எதன் மூலம் வெளிப்படுகிறது? இயற்கையின் மூலமே அழகு வெளிப்பட்டு நிற்கிறது? அழகுக்கும் இயற்கைக்கும் உள்ள தொடர்பை என்னென்று கூறுவது? அழகு எங்கே உறைகிறது? இயற்கையிலா அன்றித் தனித்தா? தனித்து நிற்கும் அழகைக் கணித்து அறிவதும் அனுபவிப்பதும் அனைவர்க்கும் இயலக்கூடிய ஒன்றன்று. தாகூர் கீதாஞ்சலியில் பின் வருமாறு அழகைப்பற்றிப் பாடுகிறார்:

> "அழகே நீ எங்கே உறைகின்றாய்? வண்ணப் பூவின் இதழில் நீ உறைகின்றாய் என்று நினைத்து அப்பூவைப் பறித்தால், புறவிதழும் அகவிதழும் என் கையில் இருக்கின்றனவே தவிர நீ இல்லை! எங்கே சென்றுவிட்டாய்!"

இப்பாடல் மூலம் இயற்கையை உடலாகக் கொண்டு விளங்கும் மலரில் அழகு நுண்பொருளாகவே உள்ளது என்ற கருத்தை அறிவிக்கின்றார். உடலில் உயிர் தங்கி யிருப்பினும், தங்கியுள்ளது என்பதை நாம் உணர முடிந்தாலும், உயிரின் நுண்மை இயல்பு காரணமாக அதனைத் தனியே பிரித்து அறிய முடிவதில்லையல்லவா?

## அழியா அழகு

அழகாகிய நுண்பொருள் இயற்கையாகிய பருப் பொருளுடன் ஊடுருவி நின்று தன் இருப்பை உணர்த்தி நிற்கின்றது. இவை இரண்டிற்குமுள்ள தொடர்பு பிரித்தறியக் கூடாத ஒன்றாகும். பிரித்துக் காண இயலாதிருக்கின்றமையின் அழகை இல்பொருளென்று தவறாக முடிவு செய்து விட வேண்டா. இயற்கை பலப் பல வடிவங்களாகத் தோன்றித் தோன்றி மறையினும் அதன் முதல் கேடுறுவ

தில்லை. "உள்ளதற்குத்தான் தோற்றமுண்டே தவிர இல்ல தற்குத் தோற்றம் இல்லை" என்பது இந்நாட்டார் கூறிய அளவையாகும். அழகிலிருந்து அரும்பிக் காட்சி அளிப்பது இயற்கை எனலாம். உயிருடன் உடல் காட்சியளிக்கிறது. இவ்வுடல் அழிந்து மாறினும் உயிர் கேடுறுவதில்லை. அதே போன்று இயற்கை வடிவங்கள் மாறினும் உள்ளே உறையும் அழகு என்றும் அழியாததாய்ப் புதுப்புது வடிவம் தாங்கி நிற்கிறது. அழகின் இத் தன்மையைக் கண்டே நம் முன்னோர் அழகை இறைவனுடன் தொடர்புபடுத்தி 'முருகன்' என்று பெயரிட்டனர் போலும். பழந்தமிழர் தாம் தொழுத கடவுளை அழகுப் பொருளாகவே கொண்டனர் என்பதற்குப் பல சான்றுகள் உள. அச்சான்றுகள் இரண் டொன்று வருமாறு:

"தமிழ் பிறந்த இடமும், தமிழ் வளர்த்த குறுமுனி வாழ்ந்த இடமும், தமிழ்ச் சங்கம் மருவிய இடமும் பாண்டிநாடு என்று சொல்லப்படுகிறது. அப்பாண்டி நாட்டுப் பழைய மக்கள் தங்கள் ஆவலாய் அவிர்சடைக் கடவுளைச் சொக்கன் என்னும் பெயரால் வழிபட்டார்கள். (அச்சொக்கன் பின்னைச் சுந்தரேசனானான்.)

சொக்கன் என்னுஞ் சொல்லுக்குரிய பொரு ளென்ன? முழு அழகன்—பேரழகன் என்பது.

பாண்டி நாட்டில் சிறப்புற்று விளங்கும் மற்றொரு பழம்பதியாகிய திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள கடவுளைத் தமிழ் மக்கள் 'அழகன' என்று போற்றியுருத்தலையுங் காண்க."*

என்று திரு.வி.க. கூறிச் செல்கிறார்.

* 'முருகன் அல்லது அழகு', பக்கம் 24.

## பொறிகள் வழி அழகு அனுபவம்

எந்தக் காலத்தில் இறைவனை அழகன் என்றும், இளையோன் என்றும், இயற்கையின் வாயிலாகவும் அவன் இலங்குகிறான் என்றும், இத்தமிழர்கள் கண்டார்களோ, அன்றே பொறிபுலன்களின் பயனையும் பெற்றுவிட்டார்கள் என்று கூறலாம். இப்பரந்த உலகையும் இயற்கையையும் நோக்கி அதன் மணத்தை மோகந்து அதனைத் தொட்டு இன்புற்று வாழப் பழகிக் கொண்டனர் நம் முன்னோர். அவர்கள் போற்றும் இயற்கை 'கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அனுபவிக்கக்கூடிய' ஒன்று என்ற முடிவிற்கு வந்த பின்னர், பொறிபுலன்களை அடக்கி ஒடுக்க வேண்டும் என்ற கொள்கை அர்த்தமற்ற கொள்கையாகி விட்டது. வாழ்வு முழுத்தன்மை பெறவேண்டுமாயின் பொறிபுலன் களின் உதவி இன்றியமையாதது. அவை இல்லாத வாழ்க்கை கல், மரம், செடி போன்ற வாழ்க்கையாகும்.

## பொறிகள் தரப்பெற்ற காரணம்

மேலும் முற்றறிவினையுடையவனாகிய இறைவன் இந்தப் பரந்த் உலகையும் அதிலுள்ள இவ்வளவு அழகிய பொருள்களையும் படைத்துவிட்டு, அவற்றை அனுபவிக்கக் கூடிய பொறிபுலன்களையும் நம்மிடம் தந்துள்ளான். ஆனால், சிற்றறிவுடைய மனிதர் சிலர் இறைவனுடைய கருத்துண ராமல் அவனால் படைக்கப்பெற்ற பொறிபுலன்கள் மூலம் அனுபவிக்கக் கூடாது எனத் தடை செய்தனர். இறைவனின் கருத்து இதுவாயிருந்திருப்பின் மக்கள் குலத்திற்குப் பொறி புலன்களைப் படைத்திருக்க வேண்டிய தேவையே இல்லை. ஒருவேளை அவை தரப்பெற்றிருப்பினும் அவற்றால் அனுப விக்கப் பெறும் இயற்கையை இத்துணை அழகுறப் படைத் திருக்க வேண்டுவதில்லை. எப்பொழுது இவை இரண்டும் இம்முறையில் அமைந்தனவோ இவற்றை நாம் அனுபவிக்க வேண்டும் என்பதே இறைவன் கருத்தாதல் வேண்டும்.

பயனற்ற ஒன்றைப் படைப்பது அறிவுடையோன் செயலன்று; முற்றறிவினனாய இறைவன் மட்டும் இவ்விதிக்கு விலக்காமாறு யாங்ஙனம்?

## அடியவர் கண்ட இயற்கை

இந்த நாட்டில் தோன்றிய அடியவர்கள் யாவரும் இயற்கை அழகில் ஈடுபட்டு அந்த அழகில் இறைவனைக் காண முயன்றனர். திருமுருகாற்றுப்படைக்காரர் 'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர் புகழ் ஞாயிறை'க் கடலின் விளிம்பில் கண்டு தம்மை மறந்து அந்த அழகு 'கைபுனைந்து இயற்றாக் கவின் பெருவனப்பாக' அமைவதைப் பாடுகிறார். கேதாரம் சென்ற திருஞான சம்பந்தர், 'வண்டு பாட, மயிலாட, மான்கன்று துள்ள, வரிக் கெண்டை பாய, சுனை நீலம் மொட்டலரும் கேதாரத்தை'க் காண்கிறார். வண்டின் பாட்டையும், மயிலின் ஆட்டத்தையும், மான்கன்றின் துள்ளலையும் மட்டும் அவர் காணவில்லை. அந்தப் பாடல், ஆடல், துள்ளல் இவற்றின் அழகோடு அவற்றின் அடிப்படையில் இறைவனைக் காண்கிறார். ஓசையிலும், ஆட்டத்திலும், துள்ளலிலும், அழகிலும் இறைவனையே காணும் சிறப்பையுடைய இப் பெருமக்கள் இயற்கையையும் அதன் அழகையும் காணும்போது, அவற்றின் ஊடே எங்கும் நிறைந்து நீக்கமற நிற்கின்ற முழுமுதற் பொருளைக் காண்கின்றனர். இறைவன் அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் இருப்பவன் என்று கூறிவிட்ட பிறகு ஒருசிலவற்றை ஒதுக்குதல் எவ்வாறு முடியும்?

## இசை, நடனம் முதலியனவும் இயற்கையே

இயற்கையை இறைவனாகவே காணும் பேறு பெற்றவர்கள் அந்த இயற்கையின் பிரதிபலிப்பாக அமையும் ஓவியத்தையும், இயற்கையில் யாண்டும் காணப்பெறும் நடனத்தையும், இயற்கை தோற்றுவிக்கும் இசையையும் எங்ஙனம் ஒதுக்கிவிட முடியும்? இவற்றையெல்லாம் ஒதுக்கித்

துறந்து விட்டு எங்கோ சென்று தவஞ் செய்து வீடுபேற்றை அடைய முற்படுவது எத்துணை அறியாமையுடையது? வோர்ட்ஸ் வொர்த் என்ற ஆங்கிலக் கவிஞர் 'இயற்கை வழிபாட்டைப் பற்றிக் கூறுவதற்குப் பல்லாயிரம் ஆண்டு களின் முன்னரே இத்தமிழர் இயற்கை வழிபாட்டின் சிறப்பினை அறிந்து போற்றியுள்ளனர்.

இந்தக் கருத்தைத் திரு.வி.க. மிக அழகாக 'முருகன் அல்லது அழகு' என்ற நூலில் கீழ்வருமாறு குறிக்கின்றார்:

"இயற்கை அழகை உணரும் பேறு பெறுதல் எளிதன்று. அரிதில் முயன்று அப்பேறு பெற்ற ஒருவன் எக்காரணம் பற்றியும் அதை இழத்தலாகாது, அப்பேற்றிற்கு இடர் விளைவிக்கப் பலதிறப் பேய் களிருக்கின்றன. அப்பேய்களின் சூழ்ச்சிக்கு எளிமை யாய் இரையாகாதவாறு மகன் தன்னைக் காத்துக் கொள்வதே அறிவுடைமை. இதற்கென்ன செய்வது?

இயற்கையை இடையறாது மகன் நினைந்த வண்ணமிருத்தல் வேண்டும். ஒன்றை இடையீடின்றி நினைந்துகொண்டிருக்கும் இயல்பு மிகச் சிலர்க்கே அமைவதுண்டு. மற்றப் பெரும்பான்மையோர்க்கு அவ்வியல்பு எளிதில் அமைவதில்லை. ஆதலால், இயற்கை நினைவினின்றும் பிரியாதவாறு தம்மைக் காக்கவல்ல முயற்சிகளில் இவர் தலைப்படுதல் சிறப்பு. இம்முயற்சியை வழிபாடு என்றுங் கூறலாம். வழிபாடுகள் பல திறத்தன. அவரவர் தத்தம் ஆற்றலுக் கியன்றதும், இயல்பிற்குப் பொருந்தியதுமாக உள்ள ஒவ்வொரு வித வழிபாட்டைக் கொள்வாராக.

ஈண்டுச் சிறப்பாக முத்திற வழிபாடுகளைக் குறிக்கிறேன். ஒன்று பாட்டு; மற்றொன்று ஓவியம்; இன்னொன்று இசை. இவை மக்கள் உணர்வையும்

இயற்கையையும் தொடர்புபடுத்தத்தக்க பாலங்கள் போன்றன.

முதலாவது பாட்டை எடுத்துக் கொள்வோம். பாட்டாவதென்னை? இயற்கையே பாட்டு. இயற்கை பாட்டெனில் அதன் உள்ளுறையாக உள்ள முருகு அல்லது அழகும் பாட்டாகும். இயற்கையை உள்ள வாறு எழுத்தால் அணிபெற வரைவதும் பாட்டே. இப்பாட்டை இயற்கையின் படம் என்று சொல்லலாம்.

இயற்கை எப்பொருளை உளத்தில் பதிக்கிறதோ, அப்பொருளையே அதன் படமாக உள்ள பாட்டும் பதித்தல் வேண்டும்; அங்ஙனம் பதிவியாதது பாட்டன்று.

குருமணி உறைந்து உருண்டு திரண்டாலென இருள் சூழ்ந்த கொண்டல் முடியும், செஞ்ஞாயிற்றின் எழு கதிருமிழும் இளவெயிலில் ஒன்றி அழகு காட்டும் பச்சைப் பசுங்காட்டுப் போர்வையும், மணிகொழித்து முழவார்த்துச் சங்கொலிக்கும் அருவி அணியும், வண்டு யாழ் முரலும், குயில் பாட்டும். மஞ்ஞை ஆட்டும் கொண்ட ஒரு மால்வரை நிற்கிறது. அவ்வரையை எழுத்தால் ஓவியமாக ஒரு புலவன் வரைந்த பாட்டு மற்றோரிடத்தில் பொலிகிறது.

அம்மலையைப் பாராது இப்பாட்டைக் கண்ணுற்ற வேறொரு புலவனும், இப்பாட்டைக் காணாது அம் மலையை நோக்கிய மற்றொரு புலவனும் ஒரு நிலையத்தில் சந்திக்கின்றனர். முன்னைய புலவன் பாட்டின் சிறப்பைக் கூறப் புகுந்தான். பாட்டுப் பொருளை அவன் விரித்துப் பகருங்கால், பொருள் இன்பத்தைச் செவிமடுத்த மற்றொருவன், 'இஃதென்ன பாட்டா? மலையா? வழியிடை யான் கண்ட ஒரு மலையைப் பற்றிப்

பேசுகிறீரே! அம் மலையின் படமோ இப்பாட்டு? அம் மலை, புறத்தே வழங்கிய காட்சியையும் இன்பத்தையும், இப் பாட்டு அகத்தே வழங்குகிறது' என்று மகிழ் வெய்தினான். பின்னை அவ்விரு புலவருங் குறித்த மலை போந்து, அம் மலை பாட்டாகப் பாடியுள்ள அழகையுணர்ந்து இன்புற்றனர். இன்பத்தில் இருவரும் ஒருவராயினர்.

புறத்தே இயற்கையைக் காண்போன் எத்தகைய இன்பத்தை நுகர்கிறானோ, அத்தகைய இன்பத்தை அவ்வியற்கைப் பாட்டை ஓரிடத்திலிருந்து படிப் போனும் நுகர்தல் வேண்டும். இத்தன்மை வாய்ந்த ஒன்றே பாட்டாகும்.

பாட்டுக்குரிய பொருட் காட்சியையாதல், அதற்குரிய இன்பத்தையாதல் வழங்காதது பாட்டா காது. அது வெறுஞ் சொற்கட்டேயாகும். அது விரைவில் உளுத்துப் போகும்.

இயற்கையை உள்ளவாறு குறிக்கும் பாட்டை அணிபெற யாக்க வல்லான் எவன்? புலன்களை இயற்கை வழிப்படுத்தித் தூய்மை செய்து, இயற்கை அழகை உளத்தால் முகந்து, உணர்விற்கு இன்ப விருந் தூட்டும் ஒருவனே இயற்கையைப் பாட்டில் வடிக்க வல்லான். அப்புலவன் இயற்கையைப் பாட்டோவிய மாக வரையும்போது, அவன் புலன்களிலும், உளத்திலும், உணர்விலும் இயற்கையும், இயற்கைப் பொருளுறுப்புகளும், கூறுபாடுகளும், இயல்புகளும், பிறவும் எவ்வாறு படிகின்றன என்று சொல்லலும் வேண்டுமோ? அவன் இயற்கை வண்ணமாகிறான்.

இயற்கை படியும் இடந்தொறும் அழகெனும் முருகன் எழுந்தருள்வன். ஆகவே, இயற்கையைப் பாடப் புகுவதும் முருகன் வழிபாடாதல் காண்க.

இயற்கையைப் பாட இயலாதார் இயற்கைப் புலவர் பாடிய பாடல்களைப் பொருளுணர்ந்து ஓதி, இயற்கை இன்பத்தில் திளைப்பாராக. இதுவும் முருகன் வழி பாடாகும்.

உலகில் பல இடங்களில் பல புலவர் தம் தம் மொழியில் இயற்கையைப் பாட்டோவியமாக எழுதி யிருக்கிறார். நம் தமிழ்ப் புலவரும் இயற்கைப் படம் பல வரைந்து நமக்கு உதவியுள்ளனர். அப் படங்கள் பல்லாயிரக் கணக்காகக் கடலெனப் பெருகிக் கிடக்கின்றன. அக் கடலினின்றும் இரண்டொரு துளி எடுத்துச் சொட்டுகிறேன்:

*'திசைமுகம் பசந்து செம்மலர்க் கண்கள்*
*முழுநீர் வார முழுமெயும் பனித்துத்*
*திரைநீ ராடை யிருநில மடந்தை*
*யரசுகெடுத் தலம்வரு மல்லற் காலை'*

இஃது இளங்கோ வரைந்த அந்திவான ஓவியம்.*

## எது புலனடக்கம்?

இறைவனை இயற்கை வடிவாகவும், ஓவியமாகவும், கவிதையாகவும் போற்றினர் நம் முன்னோர் எனில், பொறி புலன்கட்கு முழு உரிமை தந்தனர் என்றுதானே கொள்ளல் வேண்டும்? ஆனால், புலனடக்கம் வேண்டும் என்று பல பெரியோர் கூறியிருக்கின்றனரே என்ற வினாவை எழுப்பி அழகாக விடை இறுக்கின்றார் தமிழ்ப் பெரியார். புலனடக்கம் என்பது புலன்களை அறவே பயனற்றுப் போம்படி அழிப்பது என்பது பொருளன்று. புலனடக்கம் என்ற சொல்லே செம்மையான பொருளைத் தந்து நிற்கின்றது. அடக்கம் வேறு; அழிவு வேறு. அடக்கம் என்பது

* 'முருகன் அல்லது அழகு', பக்கம் 47, 48, 49

வரம்புக்குட்பட்டு நிற்றலாகும். ஆங்கிலத்தில் உரிமை (liberty) என்றும் கட்டற்ற ஊதாரித்தனம் (licentiousness) என்றும் இரண்டு உண்டு. புலன்களைக் கட்டுப்படுத்திச் செம்மை யான வழியில் செல்லுமாறு செய்வதே புலனடக்கம். புலன் நாம் செலுத்தும்வழிச் செல்லுதல் வேண்டுமே தவிர அவை செலுத்தும்வழி நாம் செல்லுதல் தகாது. இது குறித்துப் பெரியார் கூறும் விளக்கம் போற்றி ஏற்றுக் கொள்ளற் குரியது.

> "இயற்கையுடன் உறவு கொண்டு, புறத்தையும் அகத்தையும் ஒன்றச் செய்து, உயிர்கட்கு இன்ப மூட்டப் படைப்பில் அமைந்துள்ள புலன்களை அவா என்னும் பேய்க்கும், மற்றும் பல செயற்கை நரகத் துறைகட்கும் அடிமைப்படுத்தல் இயற்கையையும் அதன் உள்ளுறையாம் முருகையும் மறப்பதாகும். இம் மறப்புள்ள மட்டுந் துன்பம் நீங்காது."*

பெரியோர்கள் புலன்களைக் கள்ளர் என்றும் வஞ்சகர் என்றும் ஏசுவது அப்புலன்கள் அவா முதலியவற்றிற்கு அடிமையாகும்போது அவற்றைத் திருத்தி நல்வழிப் படுத்தல் வேண்டும் என்ற எண்ணத்திலேயேயாகும்.

மனத்தை ஒருநிலைப்படுத்தவும் இப் புலன்களே உதவு கின்றன. தொடக்கத்தில் எந்த ஒரு பழக்கமும் தொல்லை தரத்தான் செய்யும். அத் தொல்லையைப் பொறுத்துக் கொண்டு புலன்களை இயற்கைவழி திருப்பி விடின். அவ் வியற்கையின் உள்ளுறையாய் நிற்கும் முருகு அப்புலன்களை தன் வயப்படுத்தி நன்னெறியிற் செலுத்தும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்.

### வழிபாடு யாது?

சமயத்தை இயற்கையின் அடிப்படையில் கண்ட நம் பெரியார் இதனையடுத்து அந்த சமயத்துடன் நெருங்கிய

* 'முருகன் அல்லது அழகு', பக்கம் 39.

தொடர்புடைய வழிபாடுபற்றிப் பேசுகிறார். வழிபாடு என்பதற்கு இறைவனிடம் உள்ளத்தை வழிப்படுத்துதல் என்று பொருள் கூறினால் தவறில்லை. அவ்வாறானால், இயற்கையே இறைவன் வடிவம் என்று கூறிவிட்ட பிறகு உருவ வழிபாட்டிற்கு இடமேது என்ற ஐயம் சிலர் மனத்தி லாவது எழலாம். இந்நாட்டில் தோன்றி வளர்ந்த சைவம், வைணவம் இரண்டுமே மும்மூர்த்திகள் என்று பேசுவதை அறிவோம். மும்மூர்த்திகளும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் செய்வதாகக் கூறுகிறோம். உலகிடைத் தோன்றிய பழமையான சமயங்கள் பலவும் மும்மூர்த்தி வழக்கைப் பின்பற்றியுள்ளன. என்றாலும், முழுமுதற் பொருள் இம்மூவருக்கும் அப்பாற்பட்ட ஒன்று என்பதைச் சாற்றியுள்ளன. 'மூவரும் அறிகிலர்' என அப்பர் பெருமானும், 'மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கு முதல்வன் தன்னை' எனவும் 'மூவர் முதல்வன் மூவுலகாளி' எனவும் நம்மாழ்வாரும் பாடுவது இக்கருத்தை வலியுறுத்தும். அவ்வாறாயின், இந்நாட்டவர் முழுமுதற் பொருளை உருவமாகக் கண்டு நினைந்துதான் வழிபட்டனரா? முழுமுதற் பொருளுக்கு ஊர், பெயர், வடிவு ஒன்றுமில்லை. 'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்று மணிவாசகரும் 'வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம் மிழலையே' என ஞானசம்பந்தரும் பாடியிருக்கையில், கடவுளுக்கு வடிவு கற்பித்தது ஒரு பயன் கருதித்தான் என்பதை அறிதல் வேண்டும்.

## மனம் பற்ற முடியாமை

அறிவு, உணர்வு என்ற இரண்டின் துணைகொண்டு கடவுட் பொருளை ஆய்ந்த தமிழின் 'கடவுள்' என்று முழு முதற் பொருளுக்குப் பெயரிட்டதே அவனுடைய திறத்தை அறிவிக்கும். 'கற்பனை கடந்த சோதி' என்று பாடும் இவர்கள்

மனம், வாக்கு ஆகிய அனைத்தையும் கடந்து நிற்பது என்ற பொருளில்தானே கடவுள் எனப் பெயரிட்டனர். அவ்வாறாயின், உருவ வழிபாட்டிற்கு இந்நாட்டில் இடம் ஏது என்று கருதலாம். கடவுளின் கற்பனைக்கெட்டா நிலையை அறிய முயன்ற மனிதன் தன்னுடைய குறைபாட்டையும் நன்கு அறிந்து கொண்டான். எல்லையற்றதாய், எங்கும் நிறைந்ததாய், என்றும் உள்ளதாய் உள்ள பரம்பொருளை எல்லை உடையதாய், ஓரிடத்தே மட்டும் உள்ளதாய், அழிதன் மாலையதாய் உள்ள மனம் சென்று பற்றிச் சிந்தித்தல் இயலாத காரியம். எனவே, எல்லையுடைய இம்மனித மனம் பற்றக்கூடிய நிலையில் பரம்பொருளுக்கு வடிவு சமைத்தான் மனிதன். எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் இவன் சமைத்த வடிவில் மட்டும் தோன்றிய மக்கள் அவரவர்கள் சூழ்நிலை, பழக்கவழக்கம் என்பவற்றிற்கேற்ப இறைவனுக்கு வடிவு சமைத்தனர். அதிலும் இந்நாட்டவர்கள் தம் கூர்த்த மதியின் உதவி கொண்டு நாத தத்துவம், விந்து தத்துவம் ஆகிய இரண்டையும் கடவுளுக்குரிய இன்றியமையா உறுப்புகளாகச் செய்தனர். முருகன் மயில்மேலமர்ந்து கோழிக் கொடி பிடித்துள்ளான் என்றே கதை எழுதினர். இவற்றுள் மயில் விந்து தத்துவத்தையும் கோழி, நாத தத்துவத்தையும் குறிப்பிடல் காண்க. அந்தக் கோழியும் மயிலும் சூரபன்மன் இரண்டாகப் பிளக்கப் பெற்றபொழுது உண்டாயினவாம். அகங்கார வடிவாக இருக்கின்ற வரையில் ஒன்றும் புலப்படாமல் அஞ்ஞான இருளில் மூடப் பெற்றிருந்த ஒன்று அஞ்ஞானம் அகற்றப்பெற்ற பின் நாதமாய், விந்துவாய் விரிந்தமை அறியப்படல் வேண்டும்.

### நாத தத்துவம்

உலகின் தோற்றமே நாதத்திலிருந்துதானே ஏற்படுகிறது. எனவே, திருமாலுக்கு ஒரு சங்கையும் இறைவனுக்கு ஓர் உடுக்கையையும் தந்தனர். இவ்வுலகமும்—ஏன்?—அண்ட முழுதுமே அவனுடைய வடிவமென்று சங்ககாலத்தின் முன்

தொட்டே நம் தமிழர் கூறி வந்துள்ளனர். 'மாநிலம் சேவடியாக, தூநீர் வளைநரல் பௌவம் உடுக்கையாக, இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கி' என்று சங்கப் புலவன் கடவுள் வாழ்த்துப் பாடுகிறான். இவை அனைத்தையும்விட வியக்கத்தகும் ஒன்றையும் இத் தமிழ் மக்கள் கண்டு கூறினர். இறைவனைக் கருணைக் கடல் என்றும் மேலுலகில் இருப்பவன் என்றும் பிற சமயிகள் கூறினமையின், நரகம், துன்பம் என்பவற்றை அவன் படைக்கவில்லை என்று கூற வேண்டிய நிலையை அடைந்தனர். இக் கருத்தை வளர்த்துக்கொண்டு சென்று நரகின் தலைவனான ஒருவனை நியமித்தனர். அந்த இடத்தை இறைவன் ஆணை செல்லாத இடமாக ஆக்க வேண்டிய சூழ்நிலையும் ஏற்பட்டது. இவ்வாறு கூறுவதால் இறைவனுடைய சர்வ வியாபகத்துக்கும் சர்வ சக்திக்கும் குறை நேருகிறதே என்பதைக்கூட அவர்கள் கருதவில்லை.

## அனைத்தும் அவனே

ஆனால், இத் தமிழ் மக்கள். அனைத்தும் அவனே என்று கூறிவிட்ட பிறகு, நரகு என்ற ஒன்று இருப்பின் அதுவும் அவனே என்று கூறினர் நன்மை, குற்றம் என்பவையும் அவனே என்று கூறிவிட்டனர்.

*"யானும்நீ தானே யாவதோ மெய்யே*
*அருநரகு அவையும்நீ ஆனால்*
*வானுயர் இன்பம் எய்தின் என்? மற்றை*
*நரகமே எய்தின் என்?"*

என்று நம்மாழ்வாரும்

*"குற்றம் நீ! குணங்கள் நீ! கூடல் ஆலவாயிலாய்!"*

என்று ஞானசம்பந்தரும் பாடியுள்ளனர். ஆனால், உடன் பாட்டு முகத்தால் இவன் இத்தகையவன் என்று கூறினாலும் இடர்ப்பாடு நேரும். குணங் குறி கடந்த ஒன்றைக் குறி

அல்லது அடையாளத்துள் அடைக்கும் பிழையைச் செய்தவர்களாவோம். எனவே, பெரியோர்கள் அப் பிழையும் நேராமல் இருத்தற்கு எதிர் மறை முகத்தான் இறைவனைக் குறித்தும் சென்றனர். 'வேறாய் உடன் ஆனான்' என்று ஆளுடைய பிள்ளையாரும் 'மூவுலகங்களுமாய் அல்லனாய்' என்றும்,

> 'ஆணல்லன்; பெண்ணல்லன்; அல்லா அலியுமல்லன்;
> காணலும் ஆகான்; உளன் அல்லன்; இலன்அல்லன்;
> பேணுங்கால் பேணும் உருவாகும்; அல்லனுமாம்;
> கோணை பெரிதுடைத்து எம்மானைக் கூறுதலே'

என்றும் நம்மாழ்வாரும் கூறிப் போயினர்.

### மாறும் உலகம்

வேற்றுமையில் ஒற்றுமை காண முற்பட்ட நம் பெரியோர்கள் அனைத்தும் அவனே என்ற முடிவிற்கு மிக முற்காலத்திலேயே வந்துவிட்டனர். உலகம் முழுவதையும் ஆய்ந்தாலும் அவன், அவள், அது என்ற முறையில் சுட்டி உரைக்கத்தக்கதாய் இவ்வுலகு அடங்கிவிடுகிறது. சுட்டப் படும் பொருள் எதுவாகத இருப்பினும் அது மாறுதலடையும் இயல்புடையவை என்றால், அம்மாறுதல் நிகழ்ச்சிக்கு ஒரு நிலைக்களன் வேண்டுமன்றோ? நிலைக்களன் ஒன்றில் வழி எதுவும் ஒழுங்கு முறையில் இயங்கவும் மாறுதலடையவும் இயலாது.

### மாறா நிலைக்களன்

மாறுதலடையும் உலகின் நிலைக்களனாய் அமைகின்ற பொருள், தோற்றம் ஒடுக்கம் முதலியன அற்றதாய், என்றும் ஒரு பெற்றியதாய், எல்லாவற்றிற்கும் அடிப்படையாய்-நிலைக்களனாய் இருத்தல் வேண்டும். தோற்றம் ஒடுக்கம் உடையதைச் 'சடம்' அல்லது 'அசித்து' என்றும் இவை இரண்டும் அற்றதைச் 'சித்து' அல்லது 'அறிவு' என்றும் நம்

முன்னோர் கூறினர். மாறுதலுடைய அசித்துக்கு மாறுதல் அற்ற சித்து, வித்தாய் இருத்தல் இயல்பு. சடமாகிய உலகம் தோன்றி நின்று ஒடுங்குவதற்கு வித்தாயிருப்பது சித்தாகிய கடவுள் என்பது இந்த நாட்டாருடைய கொள்கை. இதனையடுத்து சத், சித்து, ஆனந்தம் என்ற மூன்றையும் கண்ட அறிஞர்கள் இவற்றுள் ஒரு தொடர்பைக் கண்டனர். சத் என்பது சத்தியம்; சித் என்பது அறிவு; ஆனந்தம் என்பது உண்மை. இவை ஒன்று உள்ள இடத்தில் ஏனைய இரண்டும் இருந்தே தீரும். இவற்றின் தன்மையை நன்கு அறிந்த பெரியோர்கள் ‘சத்’ என்பதை ஆணாகவும், ‘சித்’ என்பதைப் பெண்ணாகவும், ‘ஆனந்தம்’ என்பதைக் குழந்தையாகவும் உருவகித்தனர்.

இந்த முறையில் பொதுவாகச் சமயத்தைப் பற்றிக் கூறிய திரு.வி.க. அவர்கள், சைவராகப் பிறந்த காரணத்தாலோ, அன்றி வேறு எக்காரணத்தாலோ சைவ சமயம் பற்றி ஆழ்ந்து சென்று ஆராய்ந்துள்ளார். வேதாந்த சிம்மம் என்று போற்றப்பட்ட விவேகானந்த அடிகளுங்கூடச் சைவ சித்தாந்த உண்மைகளை ஜே.எம். நல்லுசாமிப் பிள்ளை யவர்கள் மூலம் அறிந்து வியப்பெய்தினார் என்று கூறுகின் றார்கள். எனவே, சைவ சித்தாந்தம் போன்ற பரந்த ஒரு சமயக் கொள்கையைக் காண்டல் அரிது.

‘சைவத்தின் சமரசம்’ என்ற நூலில் பெரியார் கீழ் வருமாறு பேசுகிறார்:

> “சைவ சித்தாந்தம் முப்பொருளுண்மை கூறினாலும் பொருளொன்றே என்னுங் கொள்கை யையும் வேறு வேறு என்னும் கொள்கையையும் தன்னகத்தே தாங்கி நிற்றலால், எக் கொள்கை யினரிடத்தும் அது மாறுபட்டு நிற்பதில்லை. கடவுள் உலகுயிரோடு நீக்கம் அறக் கலந்து நிற்றலானும் கடவுளுக்கு வேறாகப் பிரிந்து உலகும் உயிரும் நிற்ற

லின்மையானும் கலப்பால் ஒற்றுமையும் பொருட்டன் மையால் வேற்றுமையுஞ் சைவ சித்தாந்தம் தெரிவிக் கிறது. பொருளொன்றே என்று கூறுவோரை நோக்கி, 'ஆம் கலப்பால் ஒன்றே' என்றும் பொருள் வேறு வேறு என்போரை நோக்கி, 'ஆம் பொருட்டன் மையால் வேறு வேறு' என்று இருவரையும் தன்னுடன் சேர்த்துப் பிணக்கொழிக்கும் பெருந்தகைமை வாய்ந்தது சைவ சித்தாந்தம். கலப்பால் ஒற்றுமையும், பொருட்டன்மையால் வேற்றுமையுமுடைய ஒரு நிலையையே சைவ சித்தாந்தம் அத்துவிதம் என்று சொல்கிறது.

'உலகெலா மாகி வேறாய் உடனுமாய்'

என்று மெய்கண்ட சாத்திரம் முழங்குகிறது.

அத்துவிதமென்னும் சொல்லிலுள்ள அகரத் துக்கு மெய்கண்டார் அண்மைப் பொருள் கொண்டார். எண்ணுப் பெயர்முன் வரும் அகரம் அண்மைப் பொருள் குறிக்கு மென்பது அவர் கருத்து. ஒன்றென்பதற்கு ஏகமென்னுஞ் சொல்லிருப்ப, இரண்டைக் குறித்தற்குத் துவிதமென்னுஞ் சொல்லிருப்ப, வேதாந்தம் இரண்டையும் விடுத்து, அத்துவிதமென்று அறைவதன் நோக்கமென்னை? ஒன்று இரண்டு என்று சொல்ல முடியாத நிலையை அத்வைதம் என்று வேதாந்தம் அருளியிருக்கிறது. நமது சைவ சிந்தாந்தத் தவப்பொருளாம் மெய்கண்டார் இவ்வுண்மையைக் கண்டமையான்,

'பொய்கண்டார் காணாப்புனிதமெனும் அத்துவித
மெய்கண்டநாதன் அருள் மேவுநாள் எந்நாளோ'

என்று தாயுமானரும் அவரைப் போற்றலானார். ஆகவே, சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருளும்,

அவற்றின் கலப்பும் பல சமயத்தார் கருத்துகளுக்குப் பெரிதும் அரண் செய்தல் காண்க.

எல்லார்க்கும் பொதுவாக உள்ள வேதாந்த உண்மை இஃதென ஒவ்வோர் அறிஞர் கூறியவாறு மெய்கண்டாரும் தாங்கண்ட வேதாந்த உண்மையை உலகிற்கு அறிவுறுத்தினார். அவ்வுண்மை சித்தாந்தம், சுத்தாத்துவிதம் முதலிய பெயர்களால் வழங்கப்பட்டு வருகிறது.

ஏகான்ம வாதமே வேதாந்தமெனக் கூறுவோர்க்கும், இச்சித்தாந்தக் கொள்கையுடையவர்க்கும் என்றும் போர் நிகழ்ந்துவருவதை யான் அறிவேன். வேதாந்தமென்பது ஒரு கூட்டத்தார் உடைமையன்று. வேதாந்தம் 'என் பொருள்' 'என் பொருள்' என்று போரிடுவோர்க்கு அஃதொன்றும் பொருளாதல் அரிது; அரிது. என்னை? வேதாந்தம் வாதப் போர்களைக் கடந்தொளிர்வதாகலின் என்க. வேதாந்தமாதல் சித்தாந்தமாதல் போரிடுமாறு யாண்டுக் கூறுகிறது? உண்மையைக் குறிக்கொண்டு ஆராய்வோர்க்கு வேதாந்த சித்தாந்த வேற்றுமை தோன்றவே தோன்றாது."*

## கந்தழி

சைவ சித்தாந்திகள் என்று தம்மைக் கூறிக்கொள்வோர் இதனை நன்கு ஆராயவேண்டும். மிகப் பழைய காலத்தில் 'கந்தழி' என்று கடவுட்குப் பெயரிட்டனர். கந்து—கட்டு; அழி-அற்றவிடம். முழுமுதற் பொருள் கட்டற்றது என்ற பேருண்மையை அறிந்த நம்மவர் அதனைச் சிவம் என்று பெயரிட்டு வழிபட்டுவந்தனர். இவ்வாறு கூறுவதால் சைவ

* 'சைவத்தின் சமரசம்', பக்கம், 55–57

சித்தாந்தம் தவிர்த்த ஏனைய சமயங்கள் உண்மை இல்லாதவை என்ற முடிவுக்கு வருதலும் தவறு.

## பல சமயம் தோன்றக் காரணம்

ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோர் இடத்தில் வாழ்ந்த மக்கட்கு எவை தேவையோ அவற்றை மட்டும் அற்றை நாளில் தோன்றிய பெரியார்கள் உணர்த்திப் போயினர். வயிற்றுவலியால் அவதியுறுபவனுக்கு அதற்குரிய மருந்து தரப்படுகிறது. ஆனால், அம் மருந்து வயிற்று நோயைப் போக்குமே தவிர உடலை வளப்படுத்தும் டானிக்கன்று. அந்த மருந்திடம் டானிக் இயல்பு இல்லை என்று யாரும் குறை கூறுதல் தவறு. அதேபோல அறவாழ்க்கையை மட்டும் போதிக்க வந்தார் புத்தர் பெருமான். அவர் பின்னே வந்தவர்கள் அந்த அன்பு, அறம் என்பவற்றை விட்டுவிட்டுக் கடவுள் இல்லை, அறிவு என்னும் பொருளே இல்லை. பூதங்களே நித்தியம் என்னும் நாத்திகத்தைப் பரப்பினர். இந்த நிலையில் அறிவே பொருள் எனக் கொண்ட ஆதிசங்கரர் தோன்றி அந் நாத்திகத்தை ஒழிக்கப் பாடுபட்டார். பௌத்தர்கள் மெய் என்று கூறிய சடத்தைப் பொய் என்று நிரூபித்தார். ஆனால், சங்கரரின் பின் வந்தவர்கள் அவருடைய கருத்தைத் திரித்து சகுண வழிபாட்டை அழிக்கும் முறையில் சங்கரருடைய வாதத்தைத் திருத்திப் போதித்தனர். ஒருமை வழிபாட்டை அறிவுறுத்திய ஆதிசங்கரர், சகுண வழிபாட்டை ஒதுக்கவே இல்லை. சௌந்தர்ய லகரி, சிவானந்த லகரி, தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் என்பவற்றைப் பாடியவர் எவ்வாறு சகுண வழிபாட்டை ஒதுக்கியிருக்க முடியும்? சங்கரரின் பின் வந்தோர் சகுண வழிபாட்டை அவமதித்து ஒதுக்கியமையின், இராமானுஜர், மத்துவர் போன்றவர்கள் தோன்றி சகுண வழிபாட்டைப் பரப்பினர். இவற்றிலிருந்து அறியப்படும் ஓர் உண்மையைத் திரு.வி.க. மிக அழகாக எடுத்துக் கூறுகிறார்!

"ஒரே உண்மையைக் காலமிடங்களுக்கேற்ற வண்ணம் பலவாறு அறிஞர் வாயிலாக ஆண்டவரே அறிவுறுத்துகிறான் என்னும் உண்மையில் உறுதியுடை யார், எவரையும் எக் கொள்கையையுங் குறை கூறார்."*

இதனையடுத்துப் பெரியார் கூறுவதும் சிந்திக்கற் பாலாது:

"இவைகட்கு மெய்கண்ட சாத்திரமென்னும் பொதுப் பெயர் வழங்கிவருகிறது. இது வேதாந்த ஆராய்ச்சியில் நேர்ந்த பிணக்குகளை ஒழிக்க எழுந்த சித்தாந்த நூலென்பது.

'வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத்
திறனிங்குத் தெரிக்க லுற்றாம்'

என வரும் உமாபதி சிவத்தின் திருவாக்கான் வலியுறுத்தப் படுதல் காண்க.

தன்னந்தனியராய்த் தமிழ் மக்கள் கண்ட சமயம், முதன் முதல் சமணம், பௌத்தம் முதலிய சமயங் களோடு கூட்டுறவு கொண்டு, பின் வடமொழிக் கலைகளோடு நட்புப் பெற்று, ஏகான்ம வாதம் முதலிய சமயங்களோடு உறவாடி, முடிவில் மெய்கண்டார் வழிச் சித்தாந்த உருவடைந்து, உலகில் அருணெறியாகி வளர்ந்து வருகிறது.

இனி மெய்கண்ட சாத்திரம் தற்போதைய உலகம் விரும்பும் சமரச ஞானத்தை எவ்வளவில் தழுவி நிற்கிறது என்பதைச் சிறிது ஆராய்வோம். மெய் கண்ட சாத்திரம் தத்துவம் முப்பத்தாறையும் பொரு ளாகக் கொண்டிருக்கிறது. (முப்பத்தாறின் விரிவு தொண்ணூற்றாறு; விளக்கம் தத்துவக் கட்டளைகளிற்

*'சைவத்தின் சமரசம்', பக்கம், 35.

காண்க) ஒவ்வொரு தத்துவமும் ஒவ்வொரு சமயப் பொருளாக விளங்குவது. முப்பத்தாறையும் பொரு ளாக் கொண்ட மெய்கண்ட சாத்திரம் எத் தத்து வத்தை—எச் சமயத்தை ஒதுக்கல் கூடும்? எதைக் குறை கூறல் கூடும்? சைவ சித்தாந்தம் தனித்தும், எல்லாச் சமயங்களிலும் ஊடுருவிப் பாய்ந்தும் நிற்பது. எல்லாச் சமயங்களிளுஞ் சேர்ந்த ஒன்றே சைவ சித்தாந்த மென்றுங் கூறலாம். சைவ சித்தாந்தம் யானை கண்ட குருடர் பிணக்கைப் போக்கிய ஒருவனை யொத்திருக் கிறது. சைவ சித்தாந்தம் தனக்கு வேறாக ஒரு சமயம் இருக்கிறதென்று நினைக்க இடம் தரவில்லை. சைவ சித்தாந்திகள் என்று தங்களைச் சொல்லிக் கொள்ளுஞ் சிலர்பால் வேற்றுமை யுணர்விருக்கலாம். ஆனால், சைவ சித்தாந்தத்தில் வேற்றுமைக்கிடமில்லை."*

சைவ சித்தாந்தவழி நின்று மாயைபற்றியும் உயிர் பற்றியும் ஆராய்கின்றார் பெரியார். சைவ சமயத்தின் ஆணி வேராயுள்ள பதினான்கு சாத்திரங்களையும் கொழுந்தாக வுள்ள தேவார திருவாசக அருட்பாடல்களையுங் கொண்டே பெரியார் இவ்வாராய்ச்சியை நடத்தியுள்ளார். 'சைவத்தின் சமரசம்' என்ற நூலில் இதன் விரிவைக் கண்டு கொள்ள வேண்டுகிறேன்.

## சமரசப் பகை யாது?

இவ்வாராய்ச்சியின் முடிவில் ஏனைய சைவ சித்தாந்தி களைப் போல் அல்லாமல் எல்லாச் சமயங்களையும் ஏற்றுக் கொண்டு சமரசம் பேசும் நிலை சைவ சமயத்திற்கு உண்டு என்ற முடிவிற்கு வருகிறார் பெரியார், இப்பெரியார் கண்ட சமரசத்தைப்பற்றி அறியுமுன்னர் அச் சமரச அறிவு கை

* 'சைவத்தின் சமரசம்', பக்கம், 35–37.

கூடாமல் செய்யும் சிலபல குற்றங்கள் பற்றி அவருடைய கருத்தை அறிதல் வேண்டும்.

மிகப் பழமையானது என்ற காரணத்தால் ஒன்றை மதித்துப் போற்றவேண்டும் என்ற கொள்கைக்குப் பகைவ ராவார் திரு.வி.க. சாதிப்பேய் மிக நீண்ட காலமாக இந்நாட்டில் வேரூன்றி இருந்துவருகிறது. தம்மால் பெரிதும் போற்றப்பட்ட மகாத்மா காந்தியிடம்கூட இக்குறையைக் காண்கிறார் திரு.வி.க. 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்' என்ற நூலில் பின்வருமாறு கூறுகிறார்:

> "காந்தியடிகள் கூறும் வருணாச்சிரமத்தைக் கூர்ந்து உன்னுதல் வேண்டும். அவரது வருணாச் சிரமத்தை வைதிகரும் கொள்வதில்லை; சீர்திருத்தக் காரரும் ஏற்பதில்லை. அடிகள் 'வருணாச்சிரமம் பிறப்பு வழி இயங்கல் வேண்டும்' என்கிறார். அவர், உழவோன் மகன் உழவுத் தொழில் செய்தல் வேண்டு மென்றும், வாணிபன் மைந்தன் வாணிபத் தொழில் புரிதல் வேண்டுமென்றும், இவ்வாறு பிறப்பை யொட்டியே மற்றத் தொழில் முறைகளும் நடை பெறுதல் வேண்டுமென்றுங் கூறுகிறார்; இத்தொழின் முறை வேற்றுமைகொண்டு பிறப்பில் உயர்வு தாழ்வு கருதுதல் கூடாதென்றுஞ் சொல்கிறார். வருணாச் சிரமத்தைப்பற்றிப் பேசவோ எழுதவோ நேரும் போதெல்லாம், பிறப்பில் உயர்வு தாழ்வு கருதல் அறியாமை என்பதை அடிகள் வலியுறுத்தியே வருகிறார். உண்ணல், தின்னல், மறையோதல், திருக் கோயில் பூசை முதலியன பிறப்புவழி நிகழ்தல் வேண்டு மென்று அடிகள் அறைவதில்லை. பிறப்புவழித் தொழின் முறைகள் நடைபெற்றுவரின், உலகில் போராட்டம் அருகி அமைதி பெருகுமென்பது அடிகளின் கருத்து.

*வருணாச்சிரமத்தைப் பற்றி அடிகள் வெளியிட்டுள்ள கருத்துக்களில் பல பொன்னேபோல் போற்றற்குரியன. ஆனால், ஒன்றுமட்டும் எனது சிற்றறிவிற்கு விளங்கவில்லை. அஃதென்னை?* **அது பிறப்புவழி வருணாச்சிரமம் இயங்கவேண்டுமென்பது. அது குறித்துப் பன்னெடு நாள் யான் உன்னியது உண்டு.**

*பிறப்பையொட்டித் தொழின்முறைகளைக் கட்டுப்படுத்தல் இயற்கை நோக்கைச் சிறைப்படுத்துவதாகும். அவரவர் இயல்புக்கேற்ற தொழில்களை அவரவர்கள் ஏற்றுச் செய்யலாம். அவரவர் இயல்பு வழித் தொழில்களை ஏற்றுச் செய்வதே இயற்கை முறை. பிறப்பு வழித் தொழில்கள் நடைபெறல் வேண்டுமென்று கட்டுப்படுத்துவது இயற்கையை ஒறுப்பதாக முடியும். விளக்கம் எனது தலைமையுரைகளைக் கொண்ட 'தமிழ்த் தென்றல்' என்னும் நூலிற் காண்க. 'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என வரும் திருவள்ளுவர் மொழியே இயற்கை நோக்குக்கு அரண் செய்வதாகும். இதுவே சிறியேன் உட்கிடக்கையும்."**

## அன்றைய நிலை

*சாதிப் பித்தை அறவே வெறுத்து ஒறுக்கும் இவ்வறிஞர் சரித்திரத்தை மாற்றிக் கூற விரும்பவில்லை. ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்திலும் சாதாரண மக்களைப் பொறுத்த மட்டில் இப் பேய் தலைவிரித்தாடியதை அறிஞர் குறிக்கிறார். ஆனால், இவற்றைக் கடந்து நின்ற பெரியார்கள் மட்டுமே பெரியார்களாகக் கருதப்பெற்றனர். என்ற உண்மையையும்*

* 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்', பக்கம் 121–123

எடுத்துக் கூறுகிறார். 'நாயன்மார் திறம்' என்ற நூலில் பின் வருமாறு கூறுதல் அறிதற்குரியது:

"அறுபத்து மூவருள் வேதியரிருந்தனர்; வேளாள ரிருந்தனர்; சாலியர் இருந்தனர்; சான்றார் இருந்தனர்; பஞ்சமர் இருந்தனர்; பரதவர் இருந்தனர்; வண்ணார் இருந்தனர்; வேடர் இருந்தனர்; வேறு பல சாதியாரு மிருந்தனர். இப் பெரியவர்கள் தாங்கள் பிறந்த சாதியில் உயர்வு தாழ்வு கற்பித்துக்கொண்டு, தாங்கள் செய்த சேவையில் ஒருவரோடொருவர் மலைந்து பூசல் விளைத்தார்களோ? எல்லோரும் ஆன்மநேய ஒருமைப் பாட்டில் கட்டுப்பட்டுக் கிடந்தனர். அவர்தம் வழிவழி வந்த தமிழ் மக்கள் இப்பொழுது சாதிப் பகைமையில் தலைசிறந்து விளங்குகிறார்கள். என்னே காலம்! என்னே கொடுமை!!

சாதியால் தீட்டு உண்டு என்னுங் கருத்துக் கொண்டிருந்த நமிநந்தியடிகளுக்குக் கடவுள், 'எல்லா மனிதருஞ் சிவகணங்களே' என்ற உண்மையை அறிவுறுத்தியதையும், அந்தணச் செல்வராகிய திருநீல நக்கர், தம்மில்லம் போந்த திருநீலகண்ட யாழ்ப் பாணர்க்குத் தம் வீட்டின் நடுவண், வேதிகையின் பாங்கர், இடந் தந்து உபசரித்ததையும், வேறு பல நாயன்மார் சாதி பேதங் கருதாது, எல்லாரிடத்துஞ் சமரச உணர்வு கொண்டு, அன்னமிட்டு வழிபட்ட வரலாற்றையும் பெரிய புராணத்திற் பரக்கக் காண்க.

நாயன்மார் காலத்தில் சாதிபேதம் இருக்க வில்லை என்று சொல்லுதல் முடியாது. அவர்கள் காலத்தில் சாதி பேதம் இருந்தது. ஆனால், சாதிபேதம் பாராட்டப்படவில்லை. சாதி பேதங் கூடாது என்று உபதேசிக்கும் தற்கால நாகரிக தேவதை தாண்டவம் புரியும் இந்த வேளையில், சாதி நிந்தை, சாதி பகைமை,

சாதிப் பூசல், சாதிக் கூட்டம், சாதிப்பற்று முதலிய கொடுமைகளே நடம்புரிகின்றன. நாயன்மார் காலத்தில் தற்கால நாகரிகம் பரவியிருக்கவில்லை. ஆனால், அக்காலத்தில் சாதி பேதத்தால் நிந்தையாதல், பகைமையாதல், பிறவாதல் மூண்டு கனன்றெழ வில்லை. அக்காலம் நாகரிக காலமோ? இக்காலம் நாகரிக காலமோ? உண்மையை அறிஞர்கள் ஆராய் வார்களாக.

அந்தணர் பெருமானாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகையில் எல்லாச் சாதியாரையும் 'அடியார்க்கும் அடியேன்' என்று வழுத்தியிருக்கிறார். திருநாவுக்கரசு சுவாமிகள்.

'சாத்தி ரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்தி ரமுங்குல முங்கொண் டேன்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளு மாற்பேறரே'

என்று திருவாய் மலர்ந்திருக்கிறார்கள். வேறு பல நாயன்மாரும் சாதிபேதத்தை மறுத்தோதியிருக்கிறார். நாயன்மார் காலத்தில் சாதி வேற்றுமையிருந்தும், அதைக் கருதாது, அவர் அன்பின்வழி நின்று ஒழுகியது போல, இக் காலத்தும் அவர்தம் வழித்தோன்றிய தமிழ் மக்கள் சாதியில் கருத்தைச் செலுத்தாது, அன்பு நெறி பற்றித் தொண்டு செய்ய முயல்வார்களாக"*

## திருக்கோயில் நிலை

இந்தச் சாதி வேற்றுமையால் விளைந்த தீமை திருக் கோயில்களிலும் பரவிற்று. அனைத்துமாய் இருப்பவன் அவனே என்றும், 'உள்குவார் உள்கிற்றெல்லாம் உடன்

* 'நாயன்மார் திறம்', பக்கம், 8, 10, 11

இருந்து அறிபவன்' என்றும் 'யாதொரு தெய்வங் கண்டீர் அத் தெய்வம் ஆகி ஆங்கே மாதொரு பாகனார் வந்தருளுவர்' என்றும் நம் முன்னோர் பறைசாற்றியுள்ளனர். ஆனால், இறைவன் உறையும் திருக்கோயிலில் சிலர் சில தூரம் வரை மட்டுமே செல்லலாம். சிலர் கோயில் உள்ளும் நுழைதல் கூடாது என்றெல்லாம் முறை வகுத்தனர். இறைவன் திருமேனியின்மேல் எறும்பும் பல்லியும் ஊர்ந்தாலும் தவறு இல்லை; ஆனால், ஆறறிவு படைத்த மனிதருள் சிலர் அத் திருவுருவிடம் நெருங்கவும் தொடவும் கூடாது என விதி வகுத்தது விந்தையே. இத்தகைய ஒரு கொடுமை சைவ சமயத்தில் எந்நாளில் புகுந்தது என்று கூற இயலவில்லை. இதுபற்றிப் பெரியார் 'சித்த மார்க்கம்' என்ற நூலில் இதோ பேசுகிறார்:

> "உரிமை உணர்வின் சேய். உரிமை உணர்வு இல்லாத இடத்தில் சமரச நோக்குப் பிறத்தல் அரிது. சைவம் சமரசமுடையது என்பது உண்மை. அச் சமரசம் இப்பொழுது எங்கே இருக்கிறது? அஃது ஏட்டில் இருக்கிறது; வாக்கில் இருக்கிறது; செயலில் இருக்கிறதா? சாதி, மதம், நிறம், மொழி, நாடு முதலிய வற்றைக் கடந்த சிவன் வீற்றிருந்தருளும் திருக்கோயில் களிலாதல் சமரசம் உண்டா? சாதியற்ற சிவத்தைச் சாதிமயமாக்கிய நாட்டுக்கு எங்கிருந்து உய்வு வரும்? 'எவ்வுயிரும் நீங்கா துறையும் இறை சிவன் என்று—எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' என்பது 'சைவ சமய நெறி'. பாட்டு நன்றாயிருக்கிறது! பாட்டுக்கேற்ற நடை உண்டா?

சாதி முதலிய பேய்கள் தலைவிரித்தாடியபோது, நாயன்மார்கள் தோன்றி, அப் பேய்களை ஓட்ட முயன்றார்கள். 'சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்—கோத்திர முங்குலமுங் கொண்டென் செய்வீர்' என்று

அப்பர் இடித்துரைத்தார். 'சாதிகுலம் பிறப்பென்னும் சுழிபட்டுத் தடுமாறும், ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு, பேதைகுணம் பிறருருவம் யானெனன தென் னுரைமாய்த்துக், கோதிலமுதானானைக் குலாவு தில்லை கண்டேனே' என்று வாதவூரர் அழுதார். அப்பருக்கும் வாதவூரருக்கும் திருவிழாக்கள் செய்யப் படுகின்றன. அவர்கள் வாக்குக்கோ? வெட்கம்! வெட்கம்! திருநாளைப்போவார், அப்பூதியடிகள், திருநீலநக்கர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், நமிநந்தி யடிகள் முதலியோர் வரலாறுகள் படிக்கப்படுகின்றன. ஆனால், நடக்கையோ? எல்லா மரபினரையும் அடியவராகக் கருதி அவர்கட்கெல்லாம் 'அடியேன்' 'அடியேன்' என்று நம்பியாரூரார் பாடினார். அவ்வடியார் திருவுருவங்களும் திருக்கோயில்களில் வைக்கப்பட்டுள்ளன. திருத்தொண்டத் தொகை பாராயணமும், திருக்கோயில் வழிபாடும் பெருமித மாக நடைபெறுகின்றன. ஆனால், வாழ்வில் சாதிப் பித்து மாய்ந்ததா? மரம், பாம்பு, சிலந்தி, யானை, பறவை, விலங்கு முதலியவற்றிற்கு முத்தி கொடுத்த கருணை வள்ளல் எழுந்தருளிய இடத்திலுமா சாதி வேற்றுமை? கொடுமை! கொடுமை! சாதி வேற்றுமை தொலைந்து சமரசம் பரவும் வரை, சைவம் ஓங்கி வளராது. சாதிச் சைவத்துக்குச் சிவனருள் துணை செய்யாது. மனிதரை மனிதராகப் பாவியாத இடத்தில் சிவனருள் எங்ஙனம் நிலவும்? மனிதரை மனிதராக நினையாத ஒருவன் எங்ஙனஞ் சைவனாவான்? சாதி முதலிய களைகளைக் களைந்து, சைவ வான்பயிரை ஓம்ப இளைஞர்கள் ஊக்கங்கொண்டெழுதல் வேண்டும். இளைஞர்களே! சைவ இளைஞர்களே! சைவ உலகை நோக்குங்கள்; சைவ உலகம் கவலை யுற்றிருப்பதை உணருங்கள்; 'உரைசேரும் எண்பத்து

நான்கு நூறாயிரமாம் யோனி பேதம்—நிறைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில்' என்று இளங்குழந்தை — ஞானமூர்த்தி — அருளிய மொழியை உன்னுங்கள்; எங்குஞ் சிவம் கோயில் கொண்டிருத்தலைத் தெளியுங்கள்; எங்குமுள்ள சிவத்துடன் சம்பந்தம் பெறுவதன்றோ சைவம்? அச்சிவ சம்பந்தம் இப்பொழுது எந்நிலையிலிருக்கிறது? சாதி சம்பந்தமன்றோ இப்பொழுது உலவுகிறது? சைவம் எங்கே? அனலிடை நின்ற சைவம்—புனலிடை நின்ற சைவம்—எங்கே? நீற்றறையில் நின்ற சைவம்—கடலில் நின்ற சைவம்—எங்கே? அச் சுத்த சைவம் எங்கே? எங்கே? சாதிச் சைவமன்றோ இப்பொழுது நெளிந்து கொண்டிருக்கிறது? நினைக்க நினைக்க உள்ளம் உருகுகிறது; ஊன் குழைகிறது; கண்ணீர் பெருகுகிறது. சாதி மதம் மொழி நாடு முதலிய அஞ்ஞானப் புற்றுகள் சைவத்தின் மீது—அன்பின் மீது—எழும்பிப் படர்ந்துவிட்டன. அவற்றைத் தகர்க்க எழுங்கள்; 'சைவம் சமரசமுடையது; அஃது எவர்க்கும் உரியது; அன்பே சிவம்' என்னும் உண்மையைப் பறைசாற்ற எழுங்கள்; ஞான சம்பந்தர் மறைக் காட்டினின்றும் வீறுகொண்டு மதுரைக்கு எழுந்ததை நினையுங்கள்; மங்கையர்க்கரசியார் ஞானசம்பந்தரை எதிர் நோக்கிய வேட்கையை எண்ணுங்கள்; குலச்சிறையார் விரதத்தையும் வீரத்தையும் கருதுங்கள்; உங்கட்கு எழுச்சி தானே பிறக்கும். முதலாவது திருக்கோயிலில் சாதிப்பேயை ஓட்ட உறுதி கொள்ளுங்கள்; பிற இடங்களிலுள்ள மற்றப் பேய்கள் தாமே ஓடும். 'என்றும் நாம் யாவர்க்கும் இடைவோமல்லோம் இரு நிலத்தில் எமக்கு எதிராவார் யாருமில்லை' என்று அஞ்சா நெஞ்சங்கொண்டு எழுங்கள்; 'அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்; ஆருயிர்கட்

*கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்— எப்பாரும் எப்பதமும் எங்கணுநான் சென்றே எந்தைநின் தருட் புகழை இயம்பியிடல் வேண்டும்—செப்பாத மேனிலை மேற் சுத்தசிவ மார்க்கம் திகழ்ந்தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்—தப்பேதும் நான் செயினும் நீ பொறுத்தல் வேண்டும் தலைவ! நினைப் பிரியாத நிலைமையும் வேண்டுவனே' என்று வேண்டுதல் செய்து எழுங்கள்; சிவசோதி உங்களுக்கு வழி காட்டும்; நால்வர் துணை உங்களுக்குக் கிடைக்கும்; அஞ்சாது எழுங்கள்; எழுங்கள்."[1]*

திருக்கோயில்கள் ஆன்மாக்கள் லயிக்கும் இடமாய் அமைக்கப்பெற்றன. ஆனால், நாளடைவில் அத் திருக் கோயில்கள் சொத்துச் சேர்த்து அதனைப் பரிபாலிக்கும் நிலையங்களாய் மாறியது விந்தையே. திருக்கோயில் சம்பந்தமான வழக்குகள் நாள்தோறும் எத்தனை வருகின்றன என்பதை அறிய யாரும் மனம் நோவாமல் இருத்தல் இயலாது. இதுபற்றிக் கூறவந்த பெரியார்.

*"இத்தகைய அன்பு சிவத்துக்கு—சாந்த சிவத் துக்குப் பொன்னாம்! பூணாம்! பொருளாம்! நிலமாம்! புலமாம்! சட்டமாம்! திட்டமாம்! வழக்காம்! வக்கீலாம்! அந்தோ! என்ன கொடுமை! கொடுமை! அன்புக்கும் சாந்தத்துக்கும் எடுக்கப்பட்ட கோயில்கள் 'பூர்ஷ்வாக்கள்' உலவும் அமைப்புகளாயின.*

*'என் வீடு சகல சாதியாருக்கும் செப வீடு எனப் படும் என்று எழுதியிருக்கவில்லையா? நீங்களோ அதைக் கள்ளர் குகைகளாக்கினீர்களே என்று சொன்னார்' என்று மார்க்கிலுள்ள (11:17) நன்மொழியை நோக்குக."[2]*

1. 'சித்த மார்க்கம்', பக்கம் 36–37.
2. 'ஆலமும் அமுதமும்', பக்கம் 23.

என மனம் நொந்து பேசுகிறார்.

திருக்கோயில்கள் இறைவன் உறையும் இடமாக இருந்த வரை, ஆன்மா லயிப்பதற்கும் வழிபாடு செய்வதற்கும் ஏற்ற இடமாய் அமைந்தன. இத்தகைய திருக்கோயில்களிலும், இயற்கைச் சூழல்களிலும் அன்பர்கள் வழிபாடு செய்தனர். வழிபாட்டிற்குக் கிரியைகள் வைத்தது மிகப் பிற்பட்ட காலத்திலேயேயாகும். உள்ளத் துறவைத் தவிர வேறு எதனையும் வழிபாட்டிற்கு வேண்டிற்றிலர் நம்மவர்.

## அக வழிபாடும் துறவும்

புற வழிபாடு இறைவனைத் தனியாகவும் தன்னைத் தனியாகவும் நிறுத்திக் கொண்டு செய்வதாகும். அகவழிபாடு கடவுளைத் தன்னுட்கொண்டு தியானஞ் செய்வதாகும். இறைவனை வழிபட்டு அவனருள் வழி நின்று அவனை உணர்த்துவதற்கு மனைவி, மக்கள், வீடு முதலியவற்றைத் துறந்து செல்லவேண்டிய தேவை இல்லை. காட்டிற் சென்று கன சடை வைத்து, மூச்சைப் பிடித்துத் தான் இறையை உணரவேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. மனைவி, மக்கள், வீடு, வாசல் ஆகிய அனைத்துமே இறைவனுடைய உடைமை. தானும் அவனுடைய உடைமை என்ற எண்ணம் ஆழ்ந்து பதிந்துவிட்டால் போதுமானது. அனைத்தும் இறைவன் உடைமை என்பதே அறிந்து விட்ட பிறகு யார் யாரை அல்லது எதைத் துறப்பது?

## உருவ வழிபாடு

புறவழிபாட்டில் இறைவனுக்கு ஒரு திருவுருவைச் சமைத்துக்கொண்டு வழிபாடு செய்கின்றனர் பெரியோர். அத் திருவுருவில் அன்பர்கள் வைத்திருக்கும் அன்புக்கு ஓர் எல்லையே இல்லை எனலாம். அத் திருவுருவை நினையுந் தோறும் அவர்கள் நெஞ்சம் பாகாய் உருகியது. அன்பின் பெருக்கால் அத் திருவுருவிற்கு அபிஷேகஞ் செய்து, மலரிட்டுப் பணிகின்றனர். இன்னுங் கூற வேண்டுமாயின்

அத் திருவுருவை தம் தாயாய், தந்தையாய், ஏன்? தோழனாகவும் கருதி வழிபட்டனர்; அன்பு செய்தனர். முழு வல்லமையும், எங்கும் நிறை தன்மையுங் கொண்ட அப் பரம்பொருளைக் குழந்தையாக்கித் தொட்டிலிலிட்டு விளையாடவும் அடியார்கள் தயங்கியதில்லை. இவை அனைத்தும் அன்பின் முதிர்ச்சியில் ஏற்படும் செயல்களாகலின் யாரும் அதனைத் தவறாகக் கருதுவதில்லை. இவ்வாறு செய்தமையின் இறைவனுடைய பெருமையை அவர்கள் அறியவில்லை என்று யாரும் குறை கூறினதுமில்லை.

### புறவழிபாட்டின் பிரிவு

இத் திருவுருவ வழிபாடு நாளாவட்டத்தில் இன்னும் விரிவடைந்து மண், நீர், தீ, வளி ஆகிய பூதங்கள் முதல் அனைத்திலும் இறைவனைக் காணும் பெருவாய்ப்பாக மாறிற்று. ஆழ்வார்கள் நாயன்மார்கள் ஆகிய பெரு மக்கள் அனைவரும் ஊர் ஊராகச் சென்று சகுண வழிபாடு செய்து பாடல்கள் இயற்றினாலும் குறுகிய இந்த நிலையைக் கடந்தவர்கள் அவர்கள் என்பதை மறத்தலாகாது.

### பல கற்றும் பயனில்லை

இப் பெருமக்களுடைய வரலாறுகளை இவர்கள் மாட்டு அன்பு கொண்ட பிறரும் படித்தனர். திரு.வி.க.வும் படித்தார். இவர்கள் வாழ்விலிருந்து ஏனையோர் கற்றுக் கொண்ட பாடம் வேறு. திரு.வி.க. கற்றுக்கொண்ட பாடம் வேறு. நால்வர் வரலாற்றையும் அறுபத்துமூவர் வரலாறுகளையும் அறிந்துகொண்டு அன்றாடம் பாராயணம் செய்யும் மெய்யன்பர்கள் கூடச் சாதிப் பேய்க்கு அடிமையாகி உழன்றனர்.

"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர்"*

* நாவுக்கரசர் தேவாரம், 5ஆம் திருமுறை, 604

என்ற அப்பர் பெருமானின் அருள் வாக்கையும்,

'...........................................................

ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவு ளாரே'

என்ற அவருடைய அரிய பாடலையும் படித்து அன்றாடம் பாராயணம் செய்கின்றவர்களும் மற்றொரு சைவருடன் உடன் இருந்து உண்ணக்கூட ஒருப்படுவ தில்லை.

சைவர்கள் மட்டும் இக்குற்றம் செய்கிறார்கள் என்று கூறுவதற்கில்லை.

'குலந்தாங்கு சாதிகள் நாலினும் கீழ் இழிந்து எத்தனை
நலந்தான் இலாத சண்டாள, சண்டாளர்கள் ஆகிலும்
வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு
ஆள் என்று உள
கலந்தார், அடியார்தம் அடியார்எம் அடிகளே.*

என்ற ஆழ்வாரின் அருள்வாக்கைப் பாராயணம் செய்கின்றவர்களும் இக் குற்றத்தினின்று தவிர்ந்தார் களில்லை. இராமாநுஜர் போன்ற ஒரு மாபெரும் சீர்திருத்தவாதியைத் தம்முடைய குருவென்று கொண்டாடி 'உடையவர்' என்று பட்டம் சூட்டி மகிழும் மக்களும் சாதிப் பேய் பிடித்து அலைகின்றனரென்றால் இக்கொடுமையை யாரிடம் முறையிடுவது?

## திரு.வி.க. கற்ற பாடம்

இப்பெரியார்களின் வரலாறுகளையும் அவர்களுடைய அருட்பாடல்களையும் கற்ற திரு.வி.க. முன்னர்க் கூறப் பெற்றவர்கள் கனவிலும் கருதாத சமரச ஞானத்தைப் பெற்றார். திருஞான சம்பந்தராகிய அந்தணர் பெரு நட்புக்

* நாலாயிரம், 2971

கொண்டு தம்முடனேயே இருக்குமாறு செய்த பெரியவர் மற்றோர் அந்தணரல்லர்; திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்ற அரிஜனாவார். ஏனைய ஆழ்வார்கள் அனைவரும் அங்க மென்றும் நம்மாழ்வாரே அங்கி என்றும் போற்றப்பெறும் சடகோபர் வேளாளராவார்.

இப்பெருமக்கள் சாதி எனும் கட்டில் ஒருநாளும் அகப் பட்டதில்லை. உலக மக்கள் அறியாமையால் செய்த இக் கட்டை நீக்க முடியாதவர்கள் பிறவிக் கட்டாகிய அஞ்ஞானத்தை எவ்வாறு களைதல் கூடும்?

திரு.வி.க. அவர்கள் இப்பெரியார்களின் வாழ்விலும் பாடலிலும் சமரசங் கண்டார். சமரசத்தைப்பற்றி அவருடைய நூல்கள் அனைத்திலும் பேசியுள்ளார். சமயத் தொடர்பான நூல்களில் மட்டுமல்லாமல் அரசியல், சமுதாயம் பற்றிய நூல்கள் ஆகிய அனைத்திலும் பேசியுள் ளார். இத்துணை நீண்ட சொற்பொழிவும் சமயத்தைப் பற்றித் திரு.வி.க. கொண்டிருந்த கருத்து யாது என்பதையே குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது.

## அவர் கண்ட சமரசம்

சமயத்தைப்பற்றியும், இயற்கை பற்றியும், கடவுள் பற்றியும், வழிபாடு பற்றியும் சுருங்கிய முறையில் அவருடைய கருத்து யாது என்பதை ஒருவாறு கூறி வந்தேன். இனி இவை அனைத்துக்கும் மணிமகுடமாய் இலங்குவது அவரது சமரச சன்மார்க்கம். 1927இல் 'இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்' என்ற நூலில் சமரச சன்மார்க்கம் பற்றிப் பேசிய திரு.வி.க. அவர்கள் 1953இல் இவ்வுலக வாழ்வை நீப்பதற்குச் சிலநாள் முன்னர்க் கண்பார்வை முற்றும் இழந்த நிலையில் பிறரிடம் சொல்லி எழுதச் செய்த 'வளர்ச்சியும் வாழ்வும் அல்லது படுக்கைப் பிதற்றல்' என்ற நூல்வரை அனைத்திலும் சமரச சன்மார்க்கத்தையே போதித்தார். 'இராமலிங்க சுவாமிகள்

திருவுள்ளம்' என்ற நூலில் 1927ஆம் ஆண்டில் சமரச சன்மார்க்கம் பற்றி இப்பெரியார் கீழ்வருமாறு எழுதுகிறார்:

> "சமரச சன்மார்க்க சங்கத்தின் தலைவர் எல்லாம் வல்ல கடவுள்; அமைச்சர் இயற்கை அன்னையார்; நிருவாக அங்கத்தவர் மெய்யறிவு பெற்று அருள் நெறி ஓம்பிய அடியவர்; சந்தா, தயை என்னும் அருள். இச் சந்தா செலுத்துவோர் அனைவரும் உறுப்பினராவர். சமரச சன்மார்க்க சங்கம் நண்ண விரும்புவோர் இவ்வமைப்பு முறையைக் கருத்திலிருத்தி வாழ்வு நடாததுவாராக."*

**வள்ளலார் கருத்துப்படி சமரசப் பகை யாது?**

இதைவிடச் சிறந்த முறையில் சமரச சன்மார்க்கம் பற்றி யாரும் கூறமுடியாது. திரு.வி.க,விற்கு இக்கருத்துத் தோன்றுதற்கு உறுதுணையாக இருந்த இராமலிங்க வள்ளலார் சமரச சன்மார்க்கத்திற்கும் பகையாய் இருப்பவை எவை எவை என்று இதோ பேசுகிறார்:

> "எல்லாமுடைய அருட்பெருஞ்சோதி அற்புதக் கடவுளே! இது 'தொடங்கி,. எக்காலத்துக்கும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம், ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும், எங்கள் மனத்தில் பற்றா வண்ணம் அருள் செய்தல் வேண்டும். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப் பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும், எவ்விடத்தும் எவ்விதத்தும், எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும். எல்லாமாகிய தனிப்பெருந் தலைமை அருட்பெருஞ்சோதி ஆண்ட

* 'இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்', பக்கம் 1.

*வரே! தேவரீர் திருவருட்பெருங் கருணைக்கு வந்தனம்! வந்தனம்!"**

## திரு.வி.க. கருத்துப்படி அப்பகை யாவை?

இதனை எடுத்துக்கூறிய திரு.வி.க. அவர்கள் உலகிடைச் சமரசம் ஏன் பரவவில்லை என்பதற்குரிய காரணங்களைத் தம் கூர்த்த மதிகொண்டு ஆராய்கின்றார். நாடு, மொழி, சமய வெறி, சாதிவெறி முதலியனவே அவை என்று கூறுகிறார்கள்:

"இத்துணை நாள் உலகிடைச் சமரசம் பரவா திருந்ததற்குக் காரணம் யாது? காரணம் பலபடக் கூற லாம். மனிதன் பாலுள்ள அழுக்காறு அவா வெகுளி முதலியன அவனைச் சமரச ஞானியாக்குவதில்லை என்று சுருங்கச் சொல்லலாம். மனிதன் அழுக்காறு முதலிய பேய்களான் தொடக்குண்டு இடர்ப்படும் வரை அவன் சமரச ஞானியாதல் அரிது; அரிது.

சமரசத்தைப்பற்றிப் பேசுதல் எளிது; எழுதுதல் எளிது. அதை நடையில் கொணர்வதோ அரிது. மனிதன் சமரசத்தைப்பற்றிப் பேசுவதினும், எழுது வதினும் அதை நடையில் கொணர முயல்வதே அறிவுடைமை. அதற்கு மனிதன் என் செய்தல் வேண்டும்?

மனிதன், அழுக்காறு முதலியவற்றைப் போக்க வல்ல வாழ்வில் தலைப்படல் வேண்டும். அவ்வாழ் விற்கு இடையூறாக உள்ள கொடுமைகளைக் களைய முயலல் வேண்டும். அக்கொடுமைகள் யாவை? அவை பலப்பல. ஈண்டுப் புற உலகியல்வழி நின்று சிலவற்றைக் குறிப்பிடுகிறேன். இச் சிலவற்றைக் களையும் ஆண்மையை மனிதன் பெறுவனாயின், அவன் அழுக்காறு முதலியவற்றைப் படிப்படியாக

* 'இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்', பக்கம் 37.

நாளடைவில் களையும் ஆற்றலுடையவனாவன். அச் சில யாவை? நாடு, மொழி, சமயவெறி, சாதி முதலியன."*

நாட்டுப் பற்றும் சமயப் பற்றும் மனிதனை நல்வாழ் வுக்கு உய்க்கும் என்று பிறர் எல்லாம் பேசத் திரு.வி.க. அவர்கள், தேசத் தொண்டில் வாணாள் முழுதையும் கழித்த திரு.வி.க. அவர்கள், மனிதன் களையவேண்டியவை சில என்று கூறி அவற்றுள் ஒன்றாக நாட்டுப்பற்றையும் சமயப் பற்றையுங் கூறுகிறாரே இது வியப்புக்குரியதன்றோ என்று சிலர் ஐயுறலாம். அவருடைய நூல்கள் முழுவதையும் கற்றவர்கட்கு இவ்வையம் தோன்றாது. ஒரு நேரத்தில் தேவைப்படும் ஒரு பழக்கம் அது இருக்க வேண்டிய காலம் கடந்த பிறகும் நிற்குமாயின் தீமையே விளைக்கும். இளமையில் குழந்தை அழாமல் இருக்க விரல் சூப்பும் பழக்கத்தை மேற்கொள்ளுகிறது. ஆனால், வயது வந்த பிறகும் அப்பழக்கம் இருக்குமாயின் அது வெறுக்கத்தக்கதேயாகும்.

## சமரசவாதிக்கு இப்பற்றுகள் வேண்டா

நாட்டுப்பற்று என்பது தன்னுடைய தாய்நாட்டின் மேல் பற்றுக் கொள்வதாகும். ஆனால், அப்பற்று வெறியாக மாறிப் பிற நாடுகட்கு ஊறுவிளைக்கும் நிலையை அடைந்தால் அது களையப்பட வேண்டிய ஒன்றேயாகும். சமயப் பற்றும் அது போன்றதேயாகும். அன்றியும், சமரச சன்மார்க்கம் என்பது இவற்றையெல்லாங் கடந்த ஒன்று. 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்ற நிலையில் சமரசத்தில் ஊறி நிற்கும் ஒருவனுக்குத் தன்னுடைய நாடு, சமயம் என்று பிரித்து அறிய ஒன்றுமில்லை. எல்லா நாட்டையும் தம் நாடுபோல் நேசிக்கும் ஒருவனுக்கு நாட்டுப்பற்று ஓரளவு இருக்கலாம். ஆனால், வெறியாக அது முகிழ்த்தற்கு வழியே

* 'இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்', பக்கம் 29.

இல்லை. முழுமுதற் பொருளின் அகண்டாகாரமான நிலையை அறிந்து கொண்டு அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதை நம்பும் சமரசவாதி, தன் சமயம் மட்டுமே உண்மை கூறுகிறது. பிற சமயங்கள் பொய் கூறுகின்றன என்று கூற எவ்வாறு அவனுடைய நா எழும்? பெரியார் ஒருவரால் ஒரு காலத்தில் தோற்றுவிக்கப் பெற்ற ஒரு சமயம் அகண்டாகாரமான இறைவனுடைய ஆணை யின்றி எவ்வாறு நிறுவப்பெற முடியும்? அவ்வாறு ஒரு சமயம் நிறுவப் பெற்று, நிலைத்தும் நிற்கின்றது எனின் அது இறைவன் திருவருள் வலுவால்தானே இருத்தல் கூடும். அவ்வாறு இருக்க, அச் சமயம் தவறானது, தாழ்ந்தது, இருக்கத் தகுதியற்றது என்று கூறச் சிற்றறிவுடைய இம் மனிதனுக்கு என்ன உரிமை இருக்கிறது?

## பழித்துரைப்பது சமயிகளையே

அவ்வாறானால் ஆழ்வார்களும் நாயன்மார்களும் கூட ஓரோ வழி பிற சமயங்களை இழித்து பாடியதன் காரண மென்ன என்ற வினா எழலாம். அவர்கள், இழித்தும் பழித்தும் பாடியது பிற சமயங்களையோ அவற்றின் கொள்கை களையோ அன்று. அத்தகைய சமயங்களை மேற்கொள் வதாகக் கூறிக்கொண்டு அச் சமயங்கட்கு மாறான செயல்களைச் செய்த சமயிகளையே பழித்துப் பேசினர் நாயன்மார்கள். அதேபோன்று இந் நாயன்மார்கள் தங்களுடைய சமயிகளையும் தவறிழைக்கும் பொழுது இடித்துக் கூறத் தயங்கவே இல்லை. 'சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்' என்றும் 'அறிவிலீர்! என் சொல்?' என்றும் சைவ சமயிகளையே இடித்துரைத்திருக்கின்றனர்.

## மக்கள் தொண்டு புரிந்தனர்

சமரச நோக்குடையார் எல்லா் உயிர்களையும் தம் உயிர்போல் எண்ணி உள்ளே ஒத்து உரிமையுடையவராய் வாழ்வராகலின், இறைவனுக்குத் தொண்டு செய்வதைவிட

மக்களுக்குத் தொண்டு செய்வதையே பெரும் பேறாகக் கருதினர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் போன்ற பெருமக்கள் இறைவனைப் புறக்கண்ணாலும் கண்டு வழிபடும் பேறு பெற்ற சீவன் முத்தர்கள்தாம். என்றாலும், மக்கள் துயரைக் கண்டு அவர்கள் வாளா இருந்து விடவில்லை. இது இறைவனுடைய திருவருள் என்று கூறி அப்பாற் சென்று விடவில்லை.

திருமருகல் என்ற ஊரில் ஒரு வணிகப் பெண் தன் காதலனை அரவு தீண்டிவிட்டமையின் அழுது புலம்புகிறாள். அவள் புலம்பலைக் காதாற் கேட்ட ஆளுடைய பிள்ளையார் அவள் துயர் துடைத்தற்பொருட்டு அவ்வணிகனை உயிர் பிழைக்கச் செய்கின்றார். ஆளுடைய பிள்ளையும், அரசும் திருவீழிமழலையில் தங்கியிருந்தபொழுது அவ்வூரில் பஞ்சம் தலைவிரித்தாடிற்று. அப்பெருமக்கள் இருவரும் ஊர்ஊராகச் சென்று இறைவன் புகழ் பாடும் பணியை விட்டுவிட்டு அங்கேயே தங்கித் தத்தம் மடத்தில் பஞ்சத்தால் அவதியுற்றவர்கட்குச் சோறு போடும் தொண்டை மேற்கொண்டனர். பஞ்சந் தீர்ந்த பிறகே தம் யாத்திரையை மேற்கொண்டனர். இவற்றை யெல்லாம் மனத்துட் கொண்டே திருமூலர்,

“படமாடுங் கோயில் பரமற்குஒன்று ஈயின்
நடமாடுங் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா”

என்று கூறிப்போனார். அடியவர்கட்குச் செய்யுந் தொண்டே ஆண்டவனுக்குச் செய்யுந் தொண்டாகும் என்று சைவர்களும், பாகவதர்கட்குச் செய்யுந் தொண்டே பகவானுக்குச் செய்யுந் தொண்டாகும் என்று வைணவர்களும் கூறியுள்ளார்கள். ஆதலின், இப் பெருமக்கள் மக்கள் தொண்டை எத்துணைத் தூரம் போற்றினர் எந்பது வெளிப்படை. இதுபற்றிப் பேசவந்த பெரியார் திரு.வி.க. ‘என் கடன் பணி செய்து கிடப்பதே’ என்ற நூலில் கீழ்வருமாறு பேசுகிறார்:

"சிலர் தேசப்பணியை நாத்திகப் பணி என்றும், தெய்வப் பணியை ஆத்திகப் பணி என்றும் நினைந்து இதுபோழ்தும் வாழ்ந்து வருகின்றனர். இவர்தம் அறியாமைக்கு இரங்காது வேறென் செய்வது? இவர் தேசப்பணி என்பது மண்பணி என்று நினைக்கின்றனர் போலும்!

மண்ணிலுள்ள மனிதர்க்கே நாம் செய்யும் பணி பயன்படுகிறது. மனிதர்க்குச் செய்யும் பணி அவர் தம் உள்ளத்துள்ள ஆண்டவனையே சாரும். ஆதலின், தேசப்பணி என்பது தெய்வப் பணியே என்க. உயிர்களை வழிபடுவதும், ஆண்டவனை வழிபடுவதும் ஒன்றே. இதைக் குறித்து யான் பல முறை எழுதியும் பேசியுமிருக்கிறேன். ஆதலால், அதைப்பற்றி ஈண்டு விரித்தெழுதாது செல்கிறேன். தேசத்தில் உலவும் (நடமாடும்) கோயில்களுக்குப் பணி செய்யாது, ஓரே இடத்திலுள்ள விக்கிரகங்களுக்குப் பணி செய்வது, அறியாமையேயாகும். அண்டை வீட்டு ஏழை பசியால் வருந்துவதைக் கண்டும் கேட்டும் அவனை நோக்காது, பாலும் பழமும் தேனுங் கொண்டுபோய் விக்கிரகத்தின் தலையில் பொழிந்து இன்புறுவோன் பூசையைக் கடவுள் ஏற்றுக் கொள்வரோ? ஒருபோதும் ஏற்றுக் கொள்ளார். இயற்கைக் கோயிலை வழிபடாது. செயற்கைக் கோயிலை மட்டும் வழிபடுவோர், கடவுள் அன்பு வடிவாக உயிர்களில் எழுந்தருளியுள்ள உண்மையறியாத பேதை மாக்களேயாவர். தேசத்திலுள்ள மக்கள் பட்டினி கிடந்து வருந்துங்காலை, செல்வர் பயனற்ற காரியங்களுக்குப் பணத்தைக் கொடுப்பதும், கற்றவர் பயனற்ற பொருள்களில் தமது அறிவைச் செலுத்துவதும் வெறுக்கத் தக்கனவே. தேசத்தில் மக்கள்-உயிர்கள்-தெய்வக் கூறுகள்-வருந்தி உழலும் காலத்து, பல்லாயிரக் கணக்கான பணத்தைக்

கோயில் கட்டடத்துக்கும், வாகனத்துக்கும், தேருக்கும், மடமைக்கும், வக்கீலுக்கும், தாசிக்ககும், பொன்னுக்கும், பிணத்துக்கும், வேறு பல களியாடல்களுக்கும் சொரிவது அன்பர் செயலாகாது. இத்தகைய மூடச் செயல்கள் நமது நாட்டை விடுத்து அறவே அகலல் வேண்டும். நான் இவ்வாறு கூறுவது சிலருடைய மனத்தைப் புண் படுத்தலாம். இக்கால அறத்தை வலியுறுத்த வேண்டுமென்று என்னுள்ளத்துள்ள தெய்வ ஆணை (மனச்சான்று) என்னைப் பிடர் பிடித்து உந்துகிறது. அது வழியே யான் நடக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். அத் தெய்வ ஆணைக்கு மாறுபட்டு நடப்பேனாயின், யான் மனிதப்பிறவி எடுத்தவனாகேன். எனது கடமையை யான் செய்வேன். எவர் என்ன கூறினும், என்ன நினைப்பினும் என்ன செய்யினும், எனது மனச்சான்று வழியே யான் எழுதுவேன்; பேசுவேன்; நடப்பேன். என் உரைகளால் சிலர் உள்ளம் புண்படுமாயின், அதனால் விளையும் பாவத்தை என்னுள்ளத்திலுள்ள தெய்வம் தாங்கிக் கொள்ளும் என்னும் உறுதி எனக்குண்டு".*

சமரச சன்மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள் மக்கட் பணியையே இறைவன் பணியாகக் கருதுவார்கள். மனிதர்கள் செய்ய வேண்டிய பணிகுறித்துப் பெரியார் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"மனிதர்பால் அருமையாக அரும்பியுள்ள பகுத்தறிவினின்றும் முகிழ்க்கும் பணி பலதிறப்பட்டு நிற்கிறது. சிலர் துறவொழுக்கம் பூண்டு தமக்கேற்ற பணியை ஆற்றுகின்றனர்; சிலர் ஆட்சி புரிகின்றனர்; சிலர் உழுது பயிரிடல் முதலிய தொழில்களை

* 'என் கடன் பணிசெய்து கிடப்பதே', பக்கம் 56–58

நிகழ்த்துகின்றனர்; சிலர் திருடுகின்றனர்; சிலர் கொள்ளையிடுகின்றனர்; சிலர் கொலை செய்கின்றனர். எனவே, உலகில் நற்செயல்களும், தீச்செயல்களும் நடந்து வருகின்றன. ஆதலால், மனிதர் செய்யும் பணிகளுள் எதைக் கொள்ளுவது, எதைத் தள்ளுவது என்னும் ஐயம் உலகில் அடிக்கடி நிகழ்கிறது.

மனிதர் செய்யும் பணியை இரண்டு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று பயன் கருதும் பணி, அதாவது, காமியப் பணி; மற்றொன்று பயன் கருதாப் பணி, அதாவது நிஷ்காமியப் பணி, பின்னதைச் செய்வோர் கடவுட்டன்மை பெற்றவராவர். அவர் செழுமையுற்று ஓங்கி வளர்ந்து கடவுள்நிலை எய்துவர். அவரைக் கடவுளாகவும் வழிபடலாம். முன்னதை - அதாவது காமியப் பணியை - செய்வோர் பல துன்பங்கட்கு ஆளாகி வருந்துவர். அவர் தம் நிலைகுலைந்து, கீழ்ப்பட்டுள்ள விலங்கு புள் முதலிய அஃறிணைப் பொருள் நிலையை அடையினும் அடைவர். பகுத்தறிவைப் பண்படுத்த இயலாத அஃறிணை உடலங்களைத் தாங்கிய பின்னர், அரிய மனித உடல் தாங்கப் பெறுவோர். தம் பகுத்தறிவை நற்றுறையில் நிறுத்தி வினையாற்றாது, அதைக் காமியப் பணியாம் தீத்துறையிலாட விடுவது எத்தகைய அறியாமை? மனிதப் பிறவி தாங்கிய பகுத்தறிவு பெற்றுள்ள செல்வரே! எச்சரிக்கை! எச்சரிக்கை!! இன்னும் உலகில் நிட்காமியப் பணி நிகழ்த்துவோர் தொகை மிகக் குறுகியே நிற்கிறது; காமிய பணி செய்வோர் தொகை பெருகியே நிற்கிறது! என்ன அறியாமை!

நம் முன்னோர் உலகப் போக்கை உணர்ந்தே உலகத்தை நிட்காமியப் பணிவழி நிறுத்தப் பல முறைகளைக் கோலிச் சென்றனர். அவற்றுள் சிறந்தது தெய்வ வழிபாடு. நிட்காமியப் பணி மக்களிடைக்

கனிவதற்கு நம்மவர் தெய்வ வழிபாட்டையே கொண்டனர். காரணம் யாது?

அருள் வடிவாக உள்ள கடவுட் பணிகளெல்லாம் கைம்மாறு கருதாதன. அவ்வியல்புடைய ஒன்றை ஒருவர் இடையறாது எண்ணுவாராயின் அதன் இயல்பு அவரிடத்திலும் படியும். அவர் கடவுளைப் போலக் கைம்மாறு கருதாப் பணிசெய்து நின் மலராவர்.

இன்னோரன்ன காரணம் பல பற்றியே நம் முன்னோர் இறைபணியை முதலாவதாக வைத்தனர். விடுதலை விரும்பும் அனைவரும் நிட்காமியப் பணி செய்தே தீரல்வேண்டும். காமியப் பணி செய்வோருக்கு அடிக்கடி மனக்கலக்கமும் பிற துன்பங்களும் நேர்ந்து கொண்டே போகும். ஆதலால் உலகில் பிறந்த மக்கள் அனைவரும் நிட்காமியப் பணி ஆற்றக் கடமைப் பட்டிருக்கின்றனர்.

நிட்காமியப் பணி வளர்ச்சிக்கென ஏற்பட்ட தெய்வ வழிபாடுகள், பிற்றை ஞான்று காமியப் பணிக்கும், பிற பணிகளுக்கும் நிலைக்களமாகி விட்டன. நம் முன்னோர், நிட்காமியப் பணியை வளர்க்கும் தெய்வ வழிபாட்டை மூர்த்தி வழியாகவும் தலவழியாகவும், தீர்த்த வழியாகவும் நிகழ்த்தி வந்தனர். இந்தியாவில் தேவாலயங்கள் நிரம்பியிருப்பதன் காரணத்தை அறிஞர் ஓர்தல் வேண்டும். 'எல்லாம் கடவுள் வடிவம்' என்னும் ஞானம் பிறந்த இந்தியாவில், உருவ வழிபாட்டிற்குரிய கோயில்கள் மல்கியிருப்பது ஆராயத்தக்கது. உபநிடதங்களை ஓதிய முனிவரர்-அவற்றுக்குப் பாடியங்கள் வரைந்த அறிஞர்-ஆலயப் பணி செய்திருக்கின்றனர். இந்திய ரல்லாத மற்ற நாட்டவரும் ஆண்டவன் கோயிலென

ஒரு தனியிடம் வகுத்தே கடவுளை வழிபட்டு வருகின்றனர்.

கடவுள் நீக்கமற யாண்டும் நிறைந்து நிற்பவர். அவரை வழிபடுவதற்கு ஓரிடம் வகுக்கப்படுவதன் நோக்கம் யாது? அந் நோக்கம் மக்கள் மனத்திடை நிட்காமிய கருமத்தை - பணியை-பதியச் செய்ய வேண்டுமென்பதே.யாகும்.

உலகில் பெரும்பான்மையோர் இலௌகிகத் தொழில்களைச் செய்வோரேயாவர். அன்னார் என்றும் எங்கும் நிறைந்துள்ள கடவுளை மனமொழி மெய்களால் போற்றப் போதிய ஓய்வு பெறமாட்டார். அவர் பொருட்டு ஆலய வழிபாடு ஏற்பட்டிருக்கலாம்."*

## முடிவுரை

இதுகாறுங் கண்டவற்றுள்ளிருந்து சமயவாதியாகிய திரு.வி.க. வைப்பற்றி ஒருவாறு அறிந்து கொள்ளலாம். சமயவாதி என்பவர்கள் காவியுடுத்திக் கனசடை வைத்துக் காடுபுக்குத் துறவை மேற்கொண்டவர்களாகவோ, அன்றி மணிக்கணக்கில் ஆயிரக்கணக்கில் பூக்களை அருச்சனை செய்து மணியடித்து வழிபடுவர்களாகவோ இருக்க வேண்டிய இன்றியமையாமை இல்லை. சமயம் வாழ்க்கையோடு ஒன்றியதாய், குருதியுடன் கலந்ததாய் இருத்தல் வேண்டும். திரு.வி.க. இளம்பிராயம் முதல் இறுதிவரை சமய வாழ்வு வாழ்ந்த ஒரு தவப் பெரியார், இளமையில் அவரே ஒப்புக் கொள்கின்றபடி சமயவெறி கொண்டவராகவே வாழ்ந்தார். நாளாவட்டத்தில் அந்த வெறி மேன்மைத் தன்மையடைந்து சமயப் பண்பாக மாறிவிட்டது. ஏனையோர் சமயத்தை மேற்கொண்டனர். குறிகளாலும்

* 'என் கடன் பணிசெய்து கிடப்பதே', பக்கம் 36–37.

அடையாளங்களாலும் தாம் மேற்கொண்ட சமயத்தை உலகத்தார்க்கு அறிவிப்பதுடன், தாம் செய்யும் கிரியை களாலும் சமய வாழ்வு வாழ்வதாக நினைத்து இறுமாந்திருக் கின்றனர். ஆனால், திரு.வி.க.வோ எனில், சமயத்தை அங்கி போல் மேற்கொள்ளாமல் அதனைக் குருதியாகக்கொண்டு வாழத் தொடங்கினார். இயற்கையில் இறைவனைக் காணும் இயல்பு பெற்றவராகிய அவர், மக்களுள்ளும் இறைவனைக் கண்டார். மக்கள் தம்முள் எவ்வித வேறுபாட்டையும் காணாமல் அனைவரையும் இறைவனுடைய கோயில் களாகவே போற்றினார். இந்த ஒப்பற்ற பண்பாட்டின் காரணமாகத்தான் அப் பெருந்துறவியார் 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை நலம்' என்ற ஒப்புயர்வற்ற நூலை எழுத இயன்றது.

## இருவகையர்

பெண்ணின்பத்தை மறைந்து நின்று பெற விரும்பும் போலித் துறவிகள், பெண் என்பவள் தன் முன்னேற்றத்தைத் தடை செய்யும் கொடியவள் என்று வாயினால் கூறிப்பறை அறைந்து சென்றனர். ஆனால், உள்ளத் துறவோடு உடல் துறவும் கொண்டு வாழ்ந்த இந்தப் பெரியார் பெண்மின் பெருமைபற்றி எழுதலாயினர். உலகிடை வாழும் பெண் களைச் சோதரியாகவும் தாய்மாராகவும் காண்டல் வேண்டும் என்று வாய்கிழியப் பேசும் பேச்சாளர்கள் நிரம்ப உண்டு. ஆனால், அதனை வாழ்க்கையில் வாழ்ந்து காட்டிய பெருமை திரு. வி. க. அவர்கட்கே உண்டு.

சமரசம் என்றும் சன்மார்க்கம் என்றும் பேசுபவர் கூட இத் தமிழ்நாட்டில் அருமையாகிவிட்டனர். இராமலிங்க வள்ளலாருங்கூடக் 'கடையை விரித்தோம்; வாங்குவா ரில்லை' என்று மன உளைவுடன் கூறிச் சென்றார். ஆனால், மற்றோர் கோணத்திலிருந்து விஞ்ஞான உலகையும் சமய உலகையுங் கண்ட இப் பேரறிஞர் இவை இரண்டினிடையே

முரண்பாடே இல்லை என்ற முடிவுக்கு வந்துள்ளார். அதன் அடிப்படையில் காணப்பெற்ற இவருடைய சமரச சன்மார்க்கம் இன்னும் வலுப்பெற்று நிற்கக் காண்கிறோம். சமய சம்பந்தமாக அவருடைய வாழ்வின் முற்பகுதியில் முப்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் எழுதியுள்ளார் பெரியார். அவை அனைத்தும் விரிவான முறையில் உரைநடையில் அமைந்துள்ளன.

ஆனால், வாழ்வின் பிற்பகுதியில் இதே கருத்துகளைப் பாடல்களாக வரைந்துள்ளார். பழைய உரைநடையில் காணப்பெறும் மிடுக்கும் நாட்டின் நிலைகண்டு கொதித்தெழும் இயல்பும் பிற்காலத்தே எழுந்த கவிதைகளில் இல்லை. அங்கே பண்பட்டுப் பழுத்த ஒரு சமரச ஞானியின் உளப்பாங்கைப் பார்க்க முடிகின்றது. உலகம் தவறான வழியில் செல்வதைக் கண்டு முற்பகுதியில், அதாவது உரை நடை நூல்கள் எழுதிய காலத்தில் சினந்து சாடும் திரு.வி.க. வைக் காண்கிறோம். ஆனால், பிற்பகுதியில் உலகின் அதே நிலையைக் கண்டு உளம் நொந்து கண்ணீர்விடும் திரு.வி.க. வைக் காண்கிறோம். உலகத்தின் துயர்துடைப்பது சமரச சன்மார்க்கம் ஒன்றுதான் என்ற முடிவுக்கு வந்துள்ள திரு.வி.க.வை இறுதிக் காலத்தில் அவர் எழுதிய நூல்களி லிருந்து காண்கிறோம்.

# 2

# அரசியல்

## நாட்டுப் பற்று

மனிதனை மாக்கட் கூட்டத்திலிருந்து பிரித்து மனிதனாக வாழச் செய்து அவ்வாழ்விலேயே அவனை மகாத்மாவாகவும் செய்வது சமரச சன்மார்க்கமாகிய சமய வாழ்க்கை என்பதைத் திரு. வி. க. உறுதியாக நம்பினார். எனவே, அவர் வாழ்வு முழுவதும் சமயம் ஊடுருவி நின்றது. சமயத்திற்கு அடுத்தபடியாக அவரிடம் குடிகொண்டிருந்தது நாட்டுப்பற்று. நாட்டுப்பற்று என்று கூறியவுடன் இக்காலத்தில் சிலர் மிகக் குறுகிய நோக்குடன் தம்முடைய மாவட்டப்பற்று என்ற அளவில் நின்றுவிடுகின்றனர். இத்துணைக் குறுகிய ஒன்றை நாட்டுப் பற்று என்ற சொல்லால் குறிப்பதும் பிழையாகும். இனப்பற்று, சாதிப்பற்று என்பவற்றுடன் வைத்து எண்ணத் தகுந்ததே மாவட்டப் பற்றும். நாட்டுப் பற்று அல்லது தேசபக்தி என்பது, தான் பிறந்து வளர்ந்த ஊர். அது இடம் பெற்றுள்ள மாவட்டம், அம்மாவட்டம், நிலைபெற்றுள்ள மாநிலம். அம்மாநிலம் இருக்கும் தேசம் என்ற விரிந்த முறையில் அமைவதேயாகும்.

## தமிழறிஞராம் தேசபக்தர்

தேசப்பற்றுக் கொண்டு தொண்டு செய்தவர்கள் இந்த நூற்றாண்டில் பலருண்டு. ஆனால், அம்மாபெரும் வீரர் திருக்கூட்டத்தில் தமிழறிஞர்களாகவும் இருந்தவர்கள் விரல் விட்டு எண்ணத் தகுந்தவரேயாவார். வ.வே.சு. ஐயர், கவிச்சக்கரவர்த்தி பாரதியார், வ.உ. சிதம்பரனார், திரு.வி.க. என்பவர்கள் இச்சிலருள் முக்கியமானவர்கள். இவருள்ளும் வ.வே.சு. ஐயரவர்கள் திருக்குறள், கம்பராமாயணம் என்ற இரு நூல்களிலுமே முழுக் கவனத்தையும் செலுத்திவிட்டார். வ.உ.சிதம்பரனார் தொல்காப்பியம் முதலிய நூல்களைப் பதிப்பிக்கும் முயற்சியில் அதிகக் கவனம் செலுத்திவிட்டார். கவிச்சக்கரவர்த்தி பாரதியாரும் திரு.வி.கவுமே பல்வேறு துறைகளில் தமிழ்த்தொண்டு புரிந்தனர். கவிஞர், தம்முடைய ஒப்பற்ற கவிதைகளின்மூலம் உறங்கிக் கிடந்த தமிழகத்தைத் தட்டி எழுப்பினார். நாட்டுப் பாடல்கள் எழுதுவதுடன் அவர் நின்றுவிடவில்லை. திரு.வி.க.வைப் போலவே சமயத்தை அனைத்துடனும் கலந்து கவிதை இயற்றினார். திரு.வி.க. சமரசம் என்ற பெயரை மிகுதியும் ஆண்டு எழுதினார். ஆனால், பாரதியாரும் இவரைப் போலவே சமய வெறிக்குட்படாது முழுமுதலைக் கருத்தில் இருத்திச் சமரச நோக்குடன் தம் கவிதைகளை யாத்தார். பாரதநாட்டையே சக்தி தேவியாக உருவகஞ் செய்து தம் கவிதைகளில் பாடினார்.

## பாரதியாரும் திரு. வி.க.வும்

பாரதியார் முதலாவதாகக் கவிதை, இரண்டாவதாக உரைநடை என்பனவற்றின்மூலம் செய்த தொண்டைத் திரு.வி.க முதலாவதாக உரைநடை, இரண்டாவதாகக் கவிதை என்பவற்றின் மூலம் செய்தார். தமிழ் மனப்பான்மையுடன் அரசியலைக் கண்ட பெருமை திரு.வி.க. வையே சாரும்

சமரசம், சமய வாழ்வு, பழந்தமிழர் பண்பாடு இற்றின் அடிப்படையில் நின்று அரசியலைக் கண்டார் நம் பெரியார்.

## வரலாற்றறிவின் இன்றியமையாமை

அரசியலில் ஈடுபடும் ஒவ்வொருவரும் வரலாற்றறிவு பெற்றிருக்க வேண்டியது இன்றியமையாதது. தாம் வாழும் பகுதியின் வரலாற்றைச் சிறப்பாகவும், தம்முடைய நாட்டின் வரலாற்றைப் பொதுவாகவும் அறிந்திருக்க வேண்டியது ஒவ்வோர் அரசியல்வாதியின் முதற் கடமையாகும். சரித்திரம் மீட்டும் மீட்டும் திரும்புகிறது என்பது பழைய பழமொழி. எனவே, தம்முடைய நாட்டில் முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மட்டும் அறிவது போதாது. அந்நிகழ்ச்சிகளை இத்துணைக் காலம் கழிந்து நின்று பார்ப்பவர்கள் அதனால் விளைந்த பயனையும் அதுதரும் படிப்பினையையும் அறிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது.

## வேண்டுவார் வேண்டுவதை ஈவதே வரலாறு

ஒரு நாட்டின் வரலாறு என்பது விரிந்தும் பரந்தும் கிடக்கின்ற ஒன்றாகும். எனவே அதனைப் படிக்கின்ற ஒருவர் எந்தக் கண்ணோட்டத்துடன் படிக்கின்றாரோ அதற்கேற்ற படிப்பினையையே அந்த வரலாறு நல்கும். போர்புரிந்து நாட்டைப் பெருக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் வரலாற்றைப் படிக்கின்றவர்கள் அதற்கேற்ற சூழ்நிலையை மட்டும் அறிந்து அமைதி பெறுவர். முன்னர்ப் போரிட்டவர்கள் வெற்றி பெற்றிருப்பின் அதற்குரிய காரணங்கள், தோற்றிருப்பின் அதற்குரிய காரணங்கள் ஆகியவற்றை ஆய்வர். போர் வேண்டாவென்று அதனை வெறுக்கின்றவர்களும் வரலாற்றைக் கற்கின்றனர். முன்னர் நிகழ்ந்த போர்கள் எக்காரணத்தால் நிகழ்ந்தன. எந்தச் சூழ்நிலையில் நிகழ்ந்தன என்பவற்றை ஆய்ந்து அத்தகைய காரணங்களும் சூழ்நிலைகளும் உருவாகாதவாறு தடை செய்ய முயல்வர்.

எனவே, வரலாற்றறிவு பொதுவாக அனைவர்க்கும் சிறப்பாக அரசியல் தொண்டு செய்பவர்க்கும் தேவையாகின்றது.

## அவர் அறிந்த வரலாறு

இந்த அடிப்படையில் தமிழக வரலாற்றையும் இந்திய வரலாற்றையும் திரு.வி.க. நன்கு அறிந்திருந்தார். தமிழக வரலாற்றை நன்கு அறிந்தார் என்பதை அவருடைய 'தமிழ்த் தென்றல் அல்லது தலைமைப் பொழிவு' என்ற நூலிலும் இந்திய வராற்றை நன்கு அறிந்திருந்தார் என்பதை அவருடைய 'இந்தியாவும் விடுதலையும்' என்ற நூலிலும் நன்கு காணலாம்.

## கூர்த்த மதி

'இந்தியாவும் விடுதலையும்' என்ற நூலின்கண் அவருடைய கூர்த்த மதியையும் இந்திய வரலாற்றை ஒரு தமிழ் மகன் என்ன கண்ணோட்டத்துடன் காண்கிறான்? என்பதையும் அறிய முடிகிறது. நூலின் முற்பகுதியாகிய இந்தியா என்ற பகுதியில் முற்கால இந்தியா, இடைக்கால இந்தியா, தற்கால இந்தியா என்ற மூன்று பிரிவுகள் உள்ளன. அவருடைய காலத்தே கிடைத்த சான்றுகள், ஆராய்ச்சி முடிவுகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இக்கண்ணோட்டம் அமைந்திருக்கிறது.

## நூலின் உட்கிடக்கை

'இந்திய நாடு தென்மையிற் சிறந்தது; வளர்ப்ப முடையது; வாழ்வுக்குரியது; அற வளர்ச்சிக்குத் தகுதி வாய்ந்தது. பின்னையது இந்தியாவின் சிறப்பியல்புகளுள் ஒன்று' என்ற முறையில் நூல் தொடங்குகிறது. அற வளர்ச்சிக்குத் தகுதியானது என்று தொடங்கியதை விளக்கத் தொடங்கிக் கீழ் வருமாறு கூறுகின்றார்:

"இந்தியாவின் இயற்கை ஒரு நோக்குவழியே அறத்தை வளர்க்குந் தன்மையது. அறவளர்ச்சிக்கு இந்தியா தகுதி வாய்ந்ததென்க.

அறத்திற் சிறந்தது, எது? அஹிம்ஸை. இஃதொன்றுள்ள இடத்தில் மற்ற அறக் கூறுகளெல்லாம் தாமே விளங்கும். அஹிம்ஸைக்கு அடிப்படை தயை. 'அஹிம்சா பரமோ தர்ம' என்னுந் திருமொழியும் முன்னாளில் எந்நாட்டில் பிறந்தன? வளர்ந்தன? சரித்திர உலகை நோக்குக.

இந்தியாவின் இயற்கை வளம், அஹிம்ஸா தருமத்தை ஓம்பும் பண்பு வாய்ந்தது. அஹிம்ஸை வளர்ச்சிக்குப் போதனையுடன் - சாதனையுடன் - இயற்கை வளமுந் தேவை.

மற்ற நாடுகளில் அஹிம்ஸா தர்மம் தோன்றுவதில்லையோ? வளர்வதில்லையோ? போதனையினாலும் சாதனையினாலும் பிற நாடுகளிலும் அஹிம்சா தர்மம் தோன்றும்; வளரும். ஆனால், அவ்விடங்களில் அத்தருமம் நிலைத்து நிற்பதில்லை. காரணம் அவ்விடங்களில் இயற்கை வளமெனும் ஒளியை அஹிம்ஸா தர்மம் பெறுவதில்லை. அதனால் அஃது அவ்விடங்களில் ஓரோவழி வளர்ந்து வீழ்ந்துபடுவதாகிறது.

இந்தியாவின் இயற்கை, அஹிம்ஸா தர்மம் வளர்தற்குரிய ஒளியைக் கால்கிறது. அதனால் அஹிம்ஸா தர்ம வளர்ச்சிக்கு இந்தியா ஒரு சக்தி பீடமாக (Power House) விளங்குகிறது. பிற நாடுகளினின்றும் இந்தியா போன்று இந்தியாவைத் தாய் நாடாகக் கொண்டவரும் நாளடைவில் அஹிம்ஸையில் பற்றுள்ளங் கொள்வோராவர். இந்தியாவின் இயற்கை, மனோநிலையையும் மாற்றவல்லதென்க."*

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 10, 11.

இம்முறையில் தொடங்கும் நூல் எத்தகைய நோக்குடன் செல்கின்றது என்பதை எளிதில் அறிய முடியும், இதனையடுத்து அவர் காலத்தில் விரிவாக நடைபெற்ற ஆரிய திராவிடச் சண்டைபற்றிப் பேசுகிறார்.

"ஆரியர் ஒரே இடத்தில் வாழ்ந்தவரென்பதும், பின்னே அவர் பல்வேறு நாடுகளுக்குப் போந்தன ரென்பதும் பல சரித்திர ஆசிரியர் உள்ளக்கிடக்கை. ஆரியர் ஒரே இடத்தில் வாழ்ந்தபோது அவர் பெரிதும் ஆடுமாடுகளை வளர்த்து அவற்றைக் கொன்று தின்று வந்தனர். இந்திய நாடு நோக்கிய ஆரிய மக்கள் ஆடுமாடுகளைக் கொன்று தின்பதை நிறுத்தி விட்டார்கள். மற்ற நாடுகள் நோக்கியவர் இன்னும் பழைய வழக்கத்திலேயே மூழ்கிக் கிடக்கின்றனர். இந்தியாவின் இயற்கை தன்னை அடைந்தவரையும் தன் வண்ணமாக்குவதென்க.

ஆரியர் இந்தியாவுள் நுழைந்தபோது புலால் தின்பவராகவேயிருந்தனர்; விலங்குகளை வேள்வித் தீயிலிட்டுச் சுட்டு அவியுண்டு வந்தனர். அந் நாளில் விருஷபதேவர் என்ற அறவோர் தோன்றி மக்களுக்கு அஹிம்ஸா தர்மத்தை அறிவுறுத்தினர். மக்கள் படிப்படியே கொலையையும், கொலை வேள்வியையும் விடுத்தார்கள். கொலை கொல்லாமையாக மாறிற்று; கொலை வேள்வி, கொல்லா வேள்வியாய்-ஆத்மஞான வேள்வியாய்—தியாக வேள்வியாய் மாறிற்று. இம் மாறுதல்களை வேதத்திற் காணலாம்.

வேதத்தில் சில பகுதிகள் கொலையையும்-கொலைவேள்வியையுங் கூறுகின்றன. சில பகுதிகள் கொல்லாமையையும்-ஞானவேள்வியையும் கூறுகின்றன. கொலையையும்-கொலைவேள்வியையுங் கூறும் பகுதிகள் வேதத்தின் முன்னேயிருப்பன; கொல்லாமையையும்-ஞான வேள்வியையுங் கூறும் பகுதிகள் வேதத்தின் பின்னேயிருப்பன. இரண்டையுங்

கொண்டு என்ன ஊகிக்கலாம்? ஆரிய மக்கள் இந்தியாவிற் புகப்புக-இந்தியாவின் இயற்கை நலத்தை நுகர நுகர-அவர்கள் அஹிம்ஸா மூர்த்திகளானார்கள் என்று ஊகிக்கலாம்.

இந்திய ஆரிய மக்களும், மற்ற நாட்டு ஆரிய மக்களும் பல வழியிலும் மாறுதலடைந்துவிட்டார்கள். **இருவரும் ஓரினத்தவர் என்று நம்புவதற்கும் இடமில்லாமற் போயிற்று.** இந்திய ஆரியர் பலர் அறவோராய்-செந்தண்மையினராய் மாறினர். மற்ற நாட்டாரியர் மிலேச்சராய்ப் பிறரை வதைப்பவராயினர். இந்திய ஆரிய மக்கள் எழுதியுள்ள நூல்களை யும், மற்றவர் எழுதியுள்ள நூல்களையும் ஆராய்ந்தால் உண்மை விளங்கும். முன்னவை ஆத்ம சக்தியை வளர்ப்பனவாக வும், பின்னவை தேக சக்தியை வளர்ப்பனவாகவு மிருத்தல் வெள்ளிடை மலை.

உலகம் ஹிம்ஸைக்கு இரையாகிவரும் இந் நாளிலும்-சேர்க்கை காரணமாக இந்தியா தனது அறநெறியினின்றும் வழுக்கி வீழ்ந்துள்ள இவ் வேளையிலும்-அஹிம்ஸையை அறிவுறுத்தும் பெரியோர் யாண்டுள்ளனர்? இந்தியாவிலன்றோ? இந்தியாவை, எத்தகை இருள் சூழிலும் அதன் நெஞ்சில் எம் மூலையிலாதல் அஹிம்ஸா தர்ம தெய்வம் உறங்கியேனும் கிடக்கும். அஹிம்ஸை, இந்தியாவின் உயிர்-உயிர் நாடி."*

**மார்க்கிஸம்**

இவற்றையடுத்து மார்க்ஸியம்பற்றிப் பேசுகிறார் பெரியார். இந் நூல் எழுதிய காலத்தில் மார்க்ஸியம் புதுமையாய் யாண்டும் பேசப்பெற்ற காலம். திரு.வி.க. அவர்கள் மார்க்ஸத்தில் பெரும் பற்றுடையவர் என்று

* 'இந்தியாவும் விடுதலையும்' பக்கம் 1–13.

முன்னரும் குறிப்பிட்டுள்ளேன். ஆனால், அவர் நடு நிலையுடனிருந்து உண்மை காண்பவரேயன்றி வெறி காரணமாக ஒருபாற் கோடுதலுற்றுப் பேசுபவரல்லர். மார்க்கிஸத்தில் எத்துணைப் பற்று வைத்திருப்பினும் இந்த நாட்டின் ஆதாரமான கொள்கைகட்கு அவை எடுபடுமா என்பதை நடுநிலையுடன் ஆய்ந்துள்ளார். அது கடவுளை ஒத்துக் கொள்ளாதது என்ற காரணத்தால் பெரியார் அதனை ஒதுக்கவில்லை. பிரகஸ்பதியின் சார்வாக மதம் வேதத்தாலும் ஏற்றுக்கொள்ளப்பெற்ற ஒன்று. அப்படியானால் சார் வாகத்தை இக்கால முறையில் கூறும் மார்க்கிஸத்தை யாரும் வெறுக்கவேண்டிய தேவை இல்லை. அந்தந்த நாட்டிற்கேற்ப மார்க்கிஸம் வளரும் இயல்புடையது என்பதே பெரியார் கொள்கை. ரஷ்யாவிலுங்கூட மார்க்கிஸம் உள்ளபடியே வளரவில்லை என்றும் முன்னர் லெனினிசமாகவும், பின்னர் ஸ்டாலினிசமாகவுமே வளர்ந்து வருகிறது என்று 1947-லேயே பெரியார் கூறினார்.

## தீர்க்கதரிசனம்

இக் கடைசிச் சொற்றொடர் எத்துணை தீர்க்க தரிசனத்துடன் கூறப்பெற்றுள்ளது என்பதை இன்று நாம் அறிய முடிகிறது. தாம் தாம் கூறுவதே உண்மையான மார்க்கிஸம் என்று ரஷ்யாவும் சீனாவும் தம்முள் போரிடுகின்றன. மார்க்கிஸத்தையே மாற்றியமைத்து விட்டனர் என ரஷ்யரை சீனர் குறை கூறித் தூற்றவும் செய்கின்றனர். மார்க்கிஸத்தைத் தலைகீழாகப் புரட்டி விட்டனர் என சீனரை ரஷ்யர் குறை கூறுகின்றனர். ரஷ்யாவைப் பொறுத்தமட்டிலுங்கூடப் பெரியார் கூறும் முறையில், லெனின் காலத்தில் ஒருவிதமாகவும், ஸ்டாலின் காலத்தில் ஒருவிதமாகவும், குருஷேவ் காலத்தில் ஒரு விதமாகவும், இன்று ஒருவிதமாகவும் மார்க்கிஸம் பொருள்

செய்யப்படுகிறது. எனவே, இதுதான் மார்க்கிஸம் என்ற முடிந்த முடிவாக இதுவரை யாருங் கூறுவாரிலர்.

## நலத்தை ஏற்கலாம்

எனவே, மார்க்கிஸத்திலுள்ள நல்ல கருத்துக்களை இந்தியா ஏற்றுக் கொள்ளலாம் என்பதே பெரியாரின் கருத்தாகும். எந்தெந்த நாட்டில் மார்க்கிஸம் பரவுகிறதோ அந்தந்த நாட்டின் சூழ்நிலைக்கேற்ப அது மாறுதலடைந்து வளரும் என்பதே பெரியார் கொள்கை. அதுபற்றி அவருடைய கருத்தை இதோ காணலாம்:

"மார்க்கிஸம் ஒருவிதத் தத்துவம். அது நடைமுறையில் அதன் தத்துவப்படியே வளராது; நாடுகளின் இயற்கை நோக்குக்கும் போக்குக்கும் ஏற்ற முறையிலேயே வளர்வ தாகும். நமது இந்தியா-பழமையில் பேர்பெற்ற இந்தியா - மார்க்கிஸத்தை அப்படியே ஏற்று நடத்தல் அரிது. எத்துணையோ தத்துவ இயல்களை உண்டு, ஜீரணிஞ் செய்து, சத்தை ஏற்று, அசத்தைத் தள்ளிய இந்தியா-மார்க்கிஸத்தை மட்டும் உள்ளவாறு ஏற்குமா? அதை உள்ளவாறே ஏற்க இந்தியாவின் இயற்கை இடந்தாராது. ஆதலின், 'மார்க்கிஸம்' என்றதும், 'அந்தோ! சார்வாகம்-உலகாயதம்-நாஸ்திகம்' என்று மருட்சியடைந்து, 'அதைத் தீண்டலுமாகாது' என்று பிடிவாதஞ் செய்வது அறிவுக்கழகன்று. தார்க்கீகத்தையும் மீமாஞ்சகத்தையும் ஈன்ற இந்தியா-வியாச சூத்திரத்தை ஈன்ற இந்தியா-திருவள்ளுவரையும் இளங்கோவையும் ஈன்ற இந்தியா-மார்க்கிஸத்தை ஏற்க அஞ்சுமோ? அதை ஆராய்ந்து உண்மை காணப் பின்னிடுமோ? ஒருபோதும் அஞ்சாது; பின்னிடாது. எதையும் ஆராய்ந்து பார்க்கும் உரிமை மனபதைக்கிருத்தல் வேண்டும். அவ்வுரிமையற்ற இடம் நாகரிகம் செறிந்ததாகாது.

மார்க்கிஸம் ஹிம்சையைப் போதிப்பதென்று சில இடங்களில் கருதப்படுகிறது. இஃது உலகை ஹிம்ஸிக்கும்

கூட்டத்தாரின் பொய்ப் பிரச்சாரம். பொய்ப் பிரசாரத்துக்குச் செவிசாய்க்கும் அளவில் நின்றுவிடுவது தவறு. மார்க்கிஸத்தைத் துருவி ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். பார்த்தால் அதன் முடிவு ஹிம்சையை அறிவுறுத்துகிறதா அல்லது அஹிம்சையை அறிவுறுத்துகிறதா என்பது புலனாகும். மார்க்ஸியத்தில் ஆங்காங்கே ஹிம்ஸை இருத்தல் உண்மை. அது தனி மனிதனை உளங்கொண்டதன்று; அஹிம்ஸை முடிவைக் குறிக்கொண்டது. நமது இந்தியாவின் பண்டை அஹிம்ஸா தர்மத்தைப் புதுக்கவல்லது மார்க்ஸியம் என்பது எனது கொள்கை. மார்க்ஸியம், சுக்கிர நீதி-சாணக்கியம்-உபநிறஷதம்-திருக்குறள் முதலியவற்றின் சாரம் படியப்பெற்று, இந்திய இயற்கைக்கேற்ற வண்ணம் இந்தியாவில் பரவினால், இந்தியா அஹிம்ஸா மயமாகும் என்பது எனது உறுதியான நம்பிக்கை."*

### பல்வேறு சமயம்

இந்த இந்திய நாடு அறம்வளர்தற்கு ஏற்ற சூழ்நிலை யுடையது என்பதைப் பெரியார் முன்னரே குறிப்பிட்டார். உலகிடைத் தோன்றிய பெருஞ் சமயங்களுள், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய இரண்டு மட்டுமே இந்திய எல்லைக்கு அப்பால் தோன்றின. ஏனைய, பௌத்த. சமணம் முதலான சமயங்களும் இந்து சமயமும் இம்மண்ணிடையேதான் தோன்றின. ஒவ்வொரு சமயமும் ஒவ்வோர் அறத்தை அடிப்படையாகக் கொண்டு பேசுபவை. எனவே, பல்வேறு பெருஞ் சமயங்கள் பல்வேறு காலத்தில் தோன்ற இந்திய மண் இடந்தந்தாகலின் மார்க்கிஸமும் ஏற்கக்கூடியதே எனப் பெரியார் கூறினார் என்க.

### ஆரிய திராவிடக் கலப்பு

முற்கால இந்தியா என்ற பகுதியின் தொடக்கத்தில் இந்தியாவில் வாழ்ந்து ஆதிக்குடிகள்பற்றி ஆய்கிறார். ஆரியர்

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 15,16

பற்றி அவர் காலத்தில் நிலவிய பல்வேறு கருத்துகளையும் ஆரியர் நாலாயிரம் ஆண்டுகளின் முன்னர் இந்தியாவிற் குடிபுகுந்தனர் என்னுங் கருத்தையும் ஏற்றுக் கொள்கிறார். எனினும், நாளாவட்டத்தில் ஆரியர் திராவிடராகிய இவ்விரு இனத்தவரும் ஒன்று கலந்து விட்டனராகலின் பிரித்தறிதல் இயலாது என்னுங் கருத்தை வலியுறுத்துகிறார். நாடுகளுள் பிரிவு எவ்வாறு உண்டாயிற்று என்ற வினாவை அடுத்து எழுப்பித் தமக்கேயுரிய முறையில் விடை இறுக்கின்றார். மனிதன்பால் இயல்பாக அமைந்துள்ள ஆசையும் வெறியுமே ஒருவர் நாட்டில் மற்றவர் புகுந்து சூறையாடவும் சுரண்டவும் இடந்தந்துள்ளன என்பதே அவர் கண்ட விடையாகும்.

## குடியேற்றம்

ஒரு நாட்டில் பிற நாட்டவர் சென்று குடிபுகுதல் என்றுமே நடைபெற்றுவரும் ஒரு வழக்காகும். அது தவறுடையதென்று பெரியார் கருதவில்லை. இற்றை நாளில் கூடக் கடல்கடந்து சென்று பிற நாடுகளில் தங்கியுள்ள தமிழர்கள் இன்று அவதியுறுவதன் காரணம் விரிவாகப் பேசப்பெறுகிறது. இவர்கள் எங்குச் சென்றாலும் அந் நாட்டவரோடு ஒட்டி உறவாடி அந்நாட்டினருடன் கலந்து விடுவதில்லை. இக்காலத்தார் சிலர் தமிழர் மாட்டுக் காணப்பெறும் பெருமைக்குரிய செய்தியாக இதனைக் கருதவும் பேசவும் செய்கின்றனர். உண்மை வேறுவிதமாக உள்ளது. தமிழரையல்லாத பிற பகுதி இந்தியர்கள், சீனர்கள் முதலாயினோர் எந்த நாட்டில் குடியேறினாலும் நாளா வட்டத்தில் அந்நாட்டைத் தம் தாய்நாடாகவே ஏற்றுக் கொள்கின்றனர்.

## ஒட்டாத் தமிழர்

தமிழர் மட்டும் எத்தனை நூறாண்டுகளாயினும் தாம் சென்று வாணிகம் செய்யும் நாட்டுடன் ஒட்டுவதே இல்லை. ஒட்டவேண்டும் என்று கூறினவுடன் தம் தனித் தன்மையை

இழந்துவிட வேண்டும் என்ற கருத்தில் யாரும் கூறவில்லை. தமிழர் என்ற தனித்தன்மையையும் பண்பாட்டையும் விடாமல் போற்றுவதில் தவறில்லை. ஆனால், வாழும் நாட்டைத் தாய்நாடாகக் கருதவேண்டும். அவர்கள் பழக்க வழக்கங்களை ஏற்றுக்கொண்டால் ஒழிய ஒட்டி உறவாடும் இயல்பு படியாது. அந்த இயல்பு ஏற்படாமையின் அந்த நாட்டார் இவர்களை வேற்றவர்களாகவே கருதி வெறுப்புப் பாராட்டுகின்றனர். பர்மாவிலும், மலாய்நாடு, இலங்கை முதலிய இடங்களிலும் நிகழ்வது இதுதான். ஆனால், பிஜித் தீவுகள், மேற்கிந்தியத் தீவுகள் ஆகிய இடங்கட்குச் சென்றவர்கள் அடிக்கடி தாய்நாடு நோக்க முடியாமையின் அந்த அந்த நாடுகளையே தம் தாய்நாடாக ஏற்றுக் கொண்டனர். இதுபற்றிப் பல்லாண்டுகளின் முன்பே திரு.வி.க. அவர்கள் கீழ்வருமாறு எழுதுகிறார்கள்:

"உடலில் அந்நியம் (Foreign Matter) கலந்தால் அது பிணிபட்டு நோய்வாய்ப்படுகிறது. நாட்டிலும் அந்நியம் நுழைந்தால் அது பிணிபட்டு நோய்வாய்ப் படுவதாகும்.

ஒரு நாட்டில் அயலவர் புகாமலிருத்தல் இயலுமோ? இயலாது. ஒரு நாட்டில் அயலவர் புக நேர்ந்தால் அவர் தமது வழக்க ஒழுக்கங்களைக் கொணர்ந்து அந் நாட்டில் நுழைக்க முயலுதல் கூடாது. அயலவர் நாளடைவில் தாம் புகுந்த நாட்டைத் தாய்நாடாகக் கொண்டு, அதன் இயற்கை வழிவாழ்வு நடத்த உறுதி கொள்வது அறம். அதனால் நாட்டின் வாழ்க்கை, அரசு, கலை, பழக்க ஒழுக்கம் முதலியன கேடுறா. நாடு பிணியுடையதாகாது என்று சுருங்கச் சொல்லலாம்.

நாடு என்பது ஓர் எல்லைக்கு உட்பட்ட வெறும் நிலப்பரப்பு மட்டுமன்று. நிலத்தின் இயற்கைத்

தன்மையினின்றும் முகிழ்த்த வாழ்க்கை, அரசு, கல்வி, தொழில், நாகரிகம் முதலியனவுஞ் சேர்ந்த ஒன்றே நாடு என்பது."*

பிற நாடுகளில் குடியேறிய தமிழர்கள் பற்றிய பிரச்சினை இன்றுபோல் எழாத அந்த நாளிலேயே திரு.வி.க. அவர்கள் தீர்க்க தரிசனத்துடன் இவ்வாறு எழுதியது அவருடைய கூர்மையான வரலாற்று அறிவுக்கு எடுத்துக்காட்டு.

## ஆதி மநு பற்றிய குறிப்பு

இந்தியர்களின் முற்கால வாழ்க்கை ஆதி மநு என்பவருடைய தத்துவங்களை ஒட்டியே எழுந்தது என்று பெரியார் குறித்துச் செல்கிறார். மேல்நாட்டு வாழ்க்கை 'பிளேட்டோ' 'அரிஸ்டாட்டில்' போன்றவர்களுடைய தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றியது என்றும் கூறுகிறார். ஆனால், பிளேட்டோவும் அரிஸ் டாட்டிலும் தோன்றுதற்குப் பன்னூறு ஆண்டுகளின் முன்னரேயே எகிப்திய, சுமேரிய நாகரிகங்கள் நன்கு வளர்ச்சியடைந்திருந்தன. கிழக்கே சீனாவில் கன்பூஷியஸ் வகுத்த வாழ்க்கை நெறி நடைமுறையில் இருந்து வந்தது. ஆனால், திரு.வி.க. அவர்கள் இவை பற்றி ஒன்றுங் குறிப்பிடவில்லை. ஆதி மநுவைப்பற்றி அவர் கூறுவதும் ஏற்புடையதாகத் தெரியவில்லை. 'முற்கால இந்தியர் வாழ்க்கையினடியில் தர்மம் நிலவிக் கொண்டிருந்தது' (பக்கம் 37) என்றும், அதன் அடிக் குறிப்பில் ஜைனம் தன் கொள்கையைத் 'தர்மம்' என்றே கூறுகிறது என்றும் பெரியாரவர்கள் எழுதிச் செல்வது பற்றி இன்னும் நன்கு ஆராய வேண்டும்.

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 35.

## கிராமமும் வாழ்வும்

பழங்காலக் கிராம அமைப்பைப்பற்றி எழுதிச் செல்லும் பெரியாரவர்கள் ஒரு சிறந்த பகுதியை மறவாமல் எடுத்துக் கூறுகிறார்.

> "அது கிராமம், கிராமத்தார் சொத்தாகவே பாவிக்கப்பட்டதென்பது. கிராமம் கிராமத்தாரின் பொதுவுடமையாயிருந்தது. அவ்வத் தொழிலாளர் தத்தம் தொழிலைக் குறைவறச் செய்து கிராமத்தை நன்முறையில் ஓம்புவர்.
>
> பொது வேலைகட்கென்று கூலியாள் அமைக்கும் முறையே அந்நாளில் கிடையாது. பொது வேலைகளை எவ்வித ஊதியமுமின்றிக் கிராமத்தாரே செய்வர். காடளிக்கும் பொருளெல்லாம் பொதுமையி லேயே பயன்பட்டு வந்தன. கால்நடைகள் காடுகளில் மேய்ந்து வரும். எவ்விதக் கட்டுப்பாடுங் கிடையாது. கூடிவாழும் அறமே கிராமமாகக் காட்சியளித்தது."*

பழங்காலத் தமிழகத்தில் இத்தகைய கிராம வாழ்க்கை இருந்ததை அறிந்த அறிஞர் அவர்கள் தனி உடைமையை உதறித்தள்ளி உடைமைகளனைத்தையும் சமுதாயப் பொதுவாக்கும் மார்க்கிஸத்தையும் விரும்பி ஏற்றுக் கொண்டதில் தவறில்லை. அன்றியும் மார்க்கிஸத்திலுள்ள குறைபாட்டை நீக்கிவிட்டால் அது இந்திய நாட்டிற்கு ஏற்றதாகும் என்றே கருதினார் பெரியார்.

## அவர் கண்ட பொதுவுடமை

ஆனால், மார்க்கிஸத்தின் ஆணிவேராக அமைந்தி ருப்பவை நிரீஸ்வர வாதமும் வன்முறை ஆதரிப்புமாகும். அவை இரண்டையும் நீக்கிவிட்டால் அது 'கிறிஸ்தவ சோஷலிஸம்' என்று பிற்காலத்தார் அழைத்த ஒரு

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 41.

கொள்கைதானே என்று பலர் கருத இடமுண்டு. கிறிஸ்டியன் சோஷலிசத்திற்கும் திரு. வி. க.வின் சமதர்மத்திற்கும் ஓரளவு வேறுபாடுண்டு. கிறிஸ்டியன் சோஷலிசத்தில் தனி உடைமை முற்றிலும் தவிர்க்கப்படவில்லை. உடைமைக்காரன் அவ் வுடைமைக்குத் தர்மகர்த்தாவாகத் தன்னைப் பாவித்து வரவேண்டும் என்பதே அதன் அடிப்படை. இத்தகைய கொள்கை பழந்தமிழ் நாட்டிலும் இருந்ததுண்டு. 'செல்வத்துப் பயனே ஈதல் துய்ப்போம் எனினே தப்புந பலவே' என்பது புறநானூறு.

திரு.வி.க. அவர்கள் பொதுவுடைமையில் தனிச் சொத்துரிமை இல்லை. ஆனால், அதனை இல்லாமல் செய்வதற்கு வன்முறையை அவர் விரும்பவில்லை. அவர் கருத்தின்படி மனிதன் சமரச சன்மார்க்கத்தில் வாழத் தொடங்கினால் புளியம்பழத்தின் ஓடுவிட்டுப் போவதைப் போல அவனுடைய உடைமை ஆசை அவனைவிட்டு நீங்கும். இம்முறை நடைபெறக்கூடியதா அன்றா என்பது வினாவன்று.

## சன்மார்க்க வாழ்வில் ஆசை நீக்கம்

மனிதன் சமயத்தைப் போர்வையாக அணியாமல் சமய வாழ்வை மேற்கொண்டால், இயற்கையிலும் உயிர் களிடத்திலும் இறைவனைக் கண்டு அன்பு செலுத்தக் கூடுமானால், எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே ஒத்து அன்புரிமை உடையவராய் வாழக் கூடுமானால், தனக்கென வாழாமல் பிறர்க்குரியாளனாக வாழக் கூடுமானால், சுருங்கச் சொல்ல வேண்டுமாயின் திரு.வி.க. அவர்கள் கண்ட சமரச சன்மார்க்கியாக அவன் வாழக் கூடுமானால் அந்த நிலையில் அவனிடம் தனி உடைமை உணர்வு நீங்கும். இத்தகைய மனப்பான்மை பெறுதற்காகவே அன்பு வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்று பெரியார் அறிவுறுத்தினார். அடியார்கள், நாயன்மார்கள்,

ஆழ்வார்கள் என்பவர்களுடைய வாழ்க்கையிலிருந்து திரு.வி.க. கற்ற பாடம் இதுதான்.

## கைவந்த விதம்

தன்னலத்தைச் சுட்டெரித்துச் சமரச சன்மார்க்க வாழ்க்கை வாழ்ந்தவர்களே இந்த அடியார்களும், நாயன்மார் களும், ஆழ்வார்களும். இவர்கட்கு இப் பெரிய நிலை எவ்வாறு கைவந்தது? இறைவனிடம் கொண்ட எல்லையற்ற அன்பினால்தான் இந்நிலை கைவந்தது. எனவே, நம் பெரியார் அதே முறையை நாமும் கையாள வேண்டும் என்று கூறுகிறார். சமய வாழ்க்கையையும் அரசியல் வாழ்க்கையை யும் பிரிக்க வேண்டாவென்று மகாத்மா கூறிச் சென்றார். திரு.வி.க.வுக்கும் அக்கருத்து முழு உடன்பாடுதான். 'நாயன்மார் திறம்' என்ற நூலில் நாயன்மார்களில் யாரும் எதையும் துறந்து விட்டு ஓடவில்லை. இந்த உலகில் இருந்துகொண்டே அத்தகைய வாழ்க்கை வாழ முடிந்தது அவர்களால் என்று கூறுகிறார். இந்த அடியார்களுள் அரசர் உண்டு, வணிகர் உண்டு, அமைச்சர் உண்டு, படைத்தலைவர் உண்டு, சாதாரண மக்களும் உண்டு. பல்வேறு துறைகளிற் பணிபுரிந்த இவர்கள் எவ்வாறு இந்நிலையை அதாவது ஆசையை அறவே அகற்றிய நிலையை அடைய முடிந்தது? புறத்தே எத்தகைய வாழ்க்கையை மேற்கொண்டாலும் அகத்தே அன்பு வாழ்க்கையை மேற்கொண்டிருந்ததனா லேயே சன்மார்க்க வாழ்க்கையை அடைய முடிந்தது.

## அன்றைய நிலை

பண்டைய நாளில் மக்கள் ஓரளவு சமதர்ம வாழ்க்கையைப் பெற்றிருக்கக் காரணம் அவர்கள் ஆசையும் அதிகமில்லை. ஆசைப்படக்கூடிய பொருள்களும் அதிக மில்லை. ஆடம்பர வாழ்க்கை என்பது மிகவும் குறைவாக இருந்த காலம். அதைவிட மேலாக 'நீர்வழிப்படூஉம்' என்பதை உணர்ந்திருந்தனராகலின் பிறரைக் கண்டு அழுக்காறு

கொள்ளாமல் வாழ்ந்தனர். அழுக்காறு, அவா என்ற இரண்டு குறைவாக உள்ள இடத்தில் தனி உடைமை அத்துணை விரும்பப்படுவதில்லை. இதுவே பண்டைய கிராமங்களின் நிலை. வரலாற்றைப் படிப்பவர் பலராயினும் திரு.வி.க வைப்போல் வரலாற்றிலிருந்து உயிரான பகுதியைத் தேடி எடுத்துத் தருபவர்கள் மிகமிகக் குறைவே.

## இந்தியா ஒரு நாடா?

இதனையடுத்து அந்நாளில் பெரு வழக்காயிருந்த ஒரு பிரச்சினையில் பெரியாரின் ஆராய்ச்சி சென்றது. அந்நாளில் மட்டுமல்லாமல் இன்றுங்கூடச் சில இடங்களில் இது ஒரு பிரச்சினையாகவேதான் இருந்து வருகிறது. இந்தியா என்றாவது ஒரு நாடாக இருந்ததுண்டா? இன்றேல் சிறுசிறு நாடுகளின் தொகுப்பாக இருந்து வந்ததா? என்பதே அப்பிரச்சினை. இதுபற்றி அறிஞர் கூற்றை அப்படியே இங்குத் தர விரும்புகிறேன்.

> “இமயம் முதல் கன்னிவரை நீண்டிருப்பது பரதம். ‘இமசேது பரியந்தம்’ என்னும் வழக்கையும் நோக்குக. இமயவாடையும் பொதிகைத் தென்றலும் பரதத்தில் மண்டி இயற்கை ஒருமைப்பாட்டை வளர்த்து வருகின்றன.
>
> ‘பரதகண்டம் ஒரு பெரிய நாடாயின் நாட்டுக் குரிய இயல்புகள் பல அதன்கண் இருத்தல் வேண்டு மன்றோ? எப்பொழுதேனும் பரதம் ஒருமைப் பாடுடையதாயிருந்ததா?’ என்று சிலர் வினவ முற்படலாம். முற்காலப் பரதம் ஒருமைப்பாடுடையதா யிருந்தது என்பதற்குச் சான்றுகளிருக்கின்றன. முதலாவது–‘பரதகண்டம்’ என்ற பெயரை உன்னுக. பரதன் என்னும் ஒருவனால் கண்டம் முழுவதும் ஆளப்பெற்றமை விளங்குதல் காண்க. வேறு சில

சக்கரவர்த்திகளின் பெயர்களைப் புராணங்களிற் காணலாம்.

பழம்பாரதம் ஐம்பத்தாறு நாடுகளாகப் பிரிந்திருந்த காலமுண்டு. ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு மன்னரால் ஆளப்பட்டு வந்தது. அம் மன்னர்க் கெல்லாம் மன்னர் மன்னர் என்று (சக்கரவர்த்தி என்று) ஒருவர் வீற்றிருந்தனர். பழைய காலச் சக்கரவர்த்திகளின் பெயர்களைப் புராணங்களிற் பார்க்கலாம். சரித்திர காலத்திலும் சிலர் சக்கரவர்த்தி களாக நின்று முற்கால இந்தியாவை ஆண்டனர் என்று தெரிகிறது. அவருள் சிறப்பாகக் குறிக்கத் தக்கவர். அசோக சக்கரவர்த்தி (272-232 கி.மு).

அசோகர் ஆட்சியில் சேர, சோழ, பாண்டி நாடுகள் அகப்படவில்லை என்று சிலர் கூறுப. அது தவறு. சேர சோழ, பாண்டியர், அசோகர் அறத்தை எதிர்க்கவில்லை. அவ்வறம் தம் நாடுகளில் வளர அவர் இடந்தந்தனர். அசோகர் விரும்பியவாறு அறவுரைகள் பொறிக்கப் பெற்ற தூண்களைத் தம் நாடுகளில் ஆங்காங்கே நாட்ட மூவேந்தரும் ஒருப்பட்டதைச் சரித்திரஞ் சொல்கிறது. இதனால் அசோகர் அறஆட்சி இந்தியா முழுவதும் நிலவியதென்றே கொள்ளுதல் வேண்டும்.

'முற்கால இந்தியாவின் ஆட்சியில் ஒருமைப் பாடு பொலிந்திருக்கலாம். மக்களுள் ஒருமைப்பாடி ருந்ததா? அவர்களுக்கென்று மொழி இருந்ததா? ஒரேவித தர்மம் இருந்த்தா? ஒரேவித நாகரிகம் இருந்ததா?' என்னும் வினாக்கள் இந்நாளில் பொறிக்கப்படுகின்றன. முற்கால இந்தியா நீண்ட காலந்தொட்டு அசோகர் ஆட்சிவரை நிலவியது என்று மேலே குறிக்கப்பட்டது. இப்பெருங்கால எல்லையை

உளத்திருத்தி, முற்கால இந்தியாவை ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்கினால், அக்கால இந்தியாவின் ஒருமைப்பாடு புலனாகும்.

ஒரு நாட்டின் ஒருமைப்பாட்டை அறிவிக்குங் குறிகள் சில உண்டு. அவற்றுள் ஒன்று மொழி. முற்கால இந்தியா ஒரு மொழியைப் பெற்றிருந்ததா? இல்லையா? முற்கால இந்தியா தொடக்கத்தில் ஒரு மொழியைப் பெற்றிருந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், அம் மொழி எது என்னும் ஆராய்ச்சி இன்னும் நிகழ்ந்து வருகிறது. இதுகாறும் நிகழ்ந்த ஆராய்ச்சி, முற்கால இந்தியாவின் தொடக்கத்தில் 'திராவிடம்' நாட்டின் ஒரு மொழியாயிருந்தது என்றும், அதன் பெருக்குக் குறைந்த பின்னை அதனிடத்தில் 'சமஸ்கிருதம்' ஆட்சி பெற்றது என்றும் உணர்த்துகிறது. திராவிடமும் சமஸ்கிருதமும் தனித்தனி வேறுபட்ட மொழிகளா அல்லது ஒன்றன் சிதைவுகளா என்று ஒலிநூல் வல்ல அறிஞர் அவற்றை ஆராய்ந்து வருகின்றனர். இருமொழியும் பிராகிருதத்தின் சிதைவுகள் என்று சிலரால் கருதப்படுகின்றன. அஃது உறுதிப்படின், முற்கால இந்தியாவின் பொது மொழி பிராகிருதம் என்றே கோடல் வேண்டும். இப்பொழுது வட இந்தியாவில் பேசப்படும் பல மொழிகள் பிராகிருதத்தின் சிதைவுகள் என்று தெரிகிறது.

திராவிடத்தின் பழைய பெயர் தமிழ். தமிழ் ஒரு பகுதியில் தனித்து நின்றும்-மற்றப் பகுதிகளில் ஏராளமான வடமொழிக் கலப்பால் தெலுங்கு கன்னடம் மலையாளமாகத் திரிந்தும் போனபின்னரே அது பொதுவாகத் திராவிடம் என்ற பெயர் பெறலாயிற்று. திராவிடம் என்ற ஆட்சி பழந்தமிழ் நூல்களில் இல்லை. பிற்காலத் தமிழ் நூல்களிலேயே

அவ்வாட்சி நுழைந்தது. திராவிடப் பெயர் வடமொழி நூல்களிற் காணப்படுகிறது. தமிழ் ஒரு தனிமொழி. தமிழ், தமிழம், தமிளம், திரமிளம், திரவிடம், திரவினியம், துரனியம் எனப் பலவாறு மருவலாயிற்று. விரிவு ஈண்டைக்கு வேண்டுவதில்லை.

'சம்ஸ்கிருதம்' என்பது, செம்மையாக-நன்றாகச் செய்யப்பட்டது என்னும் பொருளையுடையது. அஃது எதனின்றும் செம்மை செய்யப்பட்டது? அது பிராகிருதத்தினின்றும் செம்மை செய்யப்பட்ட தென்பது பல அறிஞர் ஒப்பமுடிந்த உண்மை."[1]

## எது ஒரே நாடு?

இடையீடில்லாத நிலமாக இருப்பதனால் மட்டும் ஒன்றை ஒரே நாடு என்று கூறிவிட முடியாது. இன்றுள்ள ஆஃப்ரிக்காவை எடுத்துக்கொள்வோம். எகிப்தியர், காங்கோ பிரதேசத்தில் உள்ளவர், தென்னாஃப்ரிக்காவில் உள்ளவர் அனைவரும் இடையீடுபடாத ஒரு நிலப்பரப்பில் வாழ்ந்தாலும், இவர்களை ஓர் இனத்தவர் என்றோ ஒரு நாட்டார் என்றோ கூறல் இயலாது. இவர்களை ஓர் இனத்தார் என்று எக் காலத்திலும் யாரும் கருதியதுமில்லை. ஆனால், இந்தியாவைப் பொறுத்தமட்டில் நிலைமை இதற்கு நேர்மாறானதாகவே இருந்துவந்தது. பழைய புறநானூற்றுள்ளும் ஆகப் பழைய பாடல் என்று கருதப்பெறும் இரண்டாம் புறப்பாடல் கீழ்வருமாறு பேசுகிறது!

"அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே"[2]

1. 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 45–47.
2. புறம், 2

## வடக்கும் தெற்கும்

கிறிஸ்துநாதர் பிறப்பதற்குப் பன்னூறு ஆண்டுகளின் முன்னரே தோன்றிய இப் பாடலில் இந்தியாவின் வட கோடியிலுள்ள மலைமுகட்டையும் தென் கோடியிலுள்ள மலைமுகட்டையும் சேர்த்துக் கவிதை புனைகின்றான் கவிஞன். தெற்கே அதிகம் பரவியிருந்த சைவ சமயத்தின் முழுமுதற் பொருளாகக் கருதப்பெறும் சிவபெருமான் விரும்பிச் சூடும் கங்கையும் மகிழ்ந்து உறையும் மலையும் வடக்கே உள்ளன. ஆனால், அவனுக்கே உரிய சிறப்புப் பெற்ற கொன்றைப்பூ தென்னாட்டுப் பூக்களுள் ஒன்று.

இதன் எதிராக வடநாட்டில் அதிகம் பரவியுள்ள வைணவ சமயக் கடவுளாகிய திருமால் விரும்பி உறைகின்ற இடம் தென்னாட்டுத் திருப்பதிகள் என்றும் நம் முன்னோர் கூறினர். 'கங்கையிற் புனித மாய காவிரி நடுவுபாட்டு' என்று ஆழ்வார் பாடிச் செல்கிறார். எனவே இமயத்தையும் குமரியையும் ஒன்றாக இணைத்து ஒரு நாடாகக் கருதும் பழக்கம் இந் நாட்டில் மிகப் பண்டுதொட்டு வந்த ஒரு பழக்கமாகும். இவற்றையெல்லாம் இன்று நினைத்துப் பார்க்கின்றோம். உணர்ச்சி ஒருமைப்பாடு என்றெல்லாம் இன்று பேசுவது இயற்கை. அதுதான் நாகரிகமும் கற்றவர்க்கு அழகுமாகும் என்றும் கருதுகிறோம். ஆனால், திரு.வி.க. இவற்றை அரை நூற்றாண்டிற்கும் முன்னரே கண்டு எழுதியுமுள்ளார் எனில், அவரைப் போற்றி வணங்குவது தவிர நாம் செய்யத்தகுந்தது ஒன்றுமில்லை.

## நாம் கற்ற அசோகன் வரலாறு

இந்திய வரலாறு கற்கும் ஒவ்வொருவரும் அசோகரைப் பற்றிக் கற்காமலில்லை. அவருடைய கலிங்கப் போர், பின்னர் அவர் போரை வெறுத்து ஒதுக்கியது, அறக்கட்டளைகளைத் தூண்களிற் பொறித்தது ஆகிய இவையே இன்றைய வரலாற்று நூல்கள் அசோகரைப்பற்றிக் கூறும் தகவல்கள்.

ஆனால், அதே அசோகருடைய வரலாறு திரு.வி.க. அவர்கட்கு எத்தகைய நினைவை உண்டாக்கியிருக்கின்றது என்பது அறியப்பட வேண்டிய ஒன்று. இந்த நாட்டில் தோன்றிய மாபெரும் புரட்சி ஒன்றின் மணிமகுடமாக விளங்குகிறார் அசோகர். புத்தபிரான் தோன்றுவதற்கு முன்னர் இந் நாட்டில் வைதீக சமயம்தான் பரவியிருந்த தென்றும், கொலை, வேள்வி முதலியவற்றை ஆதரிக்கும் அந்தச் சமயத்தின் எதிரான வேதங்களை ஏற்காத புத்த சமயம் தோன்றிற்று என்றும் இதுவரை படித்துள்ளோம். வைதீகச் சமயத்தின் எதிராகத் தோன்றிய பௌத்த சமயத்தை அசோகர் ஆதரித்துப் பரப்பினார் என்றும் வரலாற்றில் படித்துள்ளோம்.

## அவர் கண்ட அசோகன்

இந்தக் கருத்தின் எதிரே அசோகனுடைய வாழ்க்கை, திரு.வி.க.விற்கு எத்தகைய காட்சி நல்கிற்று என்பதை அவருடைய மொழிகளிலேயே காணலாம்:

> "அசோக சக்கரவர்த்தி நாற்பதாண்டு ஆட்சி புரிந்தவர். அவர் சந்திரகுப்தர் பேரர். அவர் காலத்தி லேயே பரம்பரை தர்மம், பௌத்தப் போர்வையில் முழு உருக்கொண்டு, முற்கால இந்தியாவிலும் வேறிடங்களிலும் தாண்டவம் புரிந்தது.
>
> அசோகர் நினைவெழும்போதே வேறிரண்டு வடிவம் உள்ளத்தில் உடன் தோன்றுகின்றன. ஒன்று ஆதி மநுவின் வடிவம்; மற்றொன்று புத்தரது வடிவம். இரண்டுக்கும் இடையில் சிங்க நோக்காக நிற்பது அசோகர் வடிவம். இம் மூன்றுஞ் சேர்ந்த ஒன்று பழங்காலப் பாரத தர்ம ஆட்சிக்கு ஓர் அறிகுறியாய் இலங்கியதென்க.
>
> இக்கருத்தை இக் காலச் சரித்திர உலகம் ஏற்குமோ? ஏலாது. பின்னே வரப்போகுஞ் சரித்திர

உலகமாதல் ஏற்குமோ அறிகிலேன். யான் கற்ற அளவில்-கேட்ட அளவில்-இரண்டுஞ் சேர்ந்த ஆழ்ந்த சிந்தனையில் திரண்ட அநுபவத்தில்-ஆதி மநு நெறியில் உற்ற இழுக்கைத் தர்மத்தால் போக்கி அந்நெறியைச் செம்மை செய்யப் போந்தவர் புத்தர் என்ற தோன்றுகிறது. எனக்கு இக் கருத்துத் தோன்றுமாறு துணை செய்த நூல்கள் சில, அவற்றுள் ஒன்று, பாபு பகவான்தாஸ் மநுதர்மத்தை ஆராய்ச்சி செய்து வெளியிட்ட நூலாகும். என்னுடைய ஊகம் தவறாகவுமிருக்கலாம், யான் அகக்கண் திறக்கப் பெற்றவனல்லன்.

மநுவின் பெயரால் பின்னை எத்துணையோ பேர் தோன்றியிருப்பர்; அவரால் எத்துணையோ சாஸ்திரங்கள் எழுதப்பட்டிருக்கும். சிலர் திரு வள்ளுவர் பெயராலும் திருமூலர் பெயராலும் நூல்கள் எழுதியுள்ளனர். இவர்கள் நூல்களும் ஆதி திரு வள்ளுவராலும் ஆதி திருமூலராலுமே எழுதப்பட்டன, என்று பொல்லாத உலகம் கொண்டொழுகுகிறது. இஃது உலக இயல்புபோலும்! பழைய உண்மைகள் யாவும் உள்ளவாறே சரித்திர உலகில் படிகின்றன என்று கொள்ளுதலுங் கூடாது. சரித்திர காலத்தில் நடந்ததென்று சொல்லப்படும் கல்கத்தா இருட்டறை நிகழ்ச்சி இப்பொழுது சிலரால் மறுக்கப்படுகிறது; இன்னும் பல நிகழ்ச்சிகள் மறுக்கப்படுகின்றன. உண்மை ஆண்டவனுக்கும் அகக் கண்ணர்க்குமே தெரியும்.

ஆதிமநு நெறியில் இரண்டு இயல் இருக்கின்றன. ஒன்று அறம்; மற்றொன்று அரசியல். இரண்டுஞ் சேர்ந்த ஒன்று மநுநெறி (மநுதத்துவம்) என்பது. சில சமயம் அரசியலினின்றும் அறம் ஒதுங்கி விடும். அச்

சமயம் பெரியோர் ஒருவர் தோன்றிக் காலத்துக்கேற்ற முறையில் அறத்தை நிலைபெறுத்துவர்.

புத்தர் காலத்துக்கு முன்னரே அறம் அரசியலி னின்றும் ஒதுங்கியிருக்கும். அறமற்ற அரசு உயிரற்ற உடல் போன்றது. புத்தர் பெருமான் தோன்றி அறத்தை நிலைபெறுத்திச் சென்றனர். அறம் மீண்டும் அரசியலில் நுழைந்து மநுநெறியை விளங்கச் செய்தது. இந்நுட்பம் அசோகர்க்கு விளங்கியிருக்கும். அதனால் அவர் அரசாட்சியில் பௌத்த தர்மத்தைப் புகுத்த முயன்று செந்நெறியை ஓம்பியிருப்பர். ஆகவே, அசோகர் மநுவை பௌத்தக் கண்ணாடியில் கண்டு, உண்மை விளங்கப் பெற்றிருப்பரென்று எனக்குத் தோன்றுகிறது. **ஆதி மநுவும் புத்தருஞ் சேர்ந்த ஒருவர் அசோகரென்று கொள்வது நலம்.** அசோகர் எந்நெறியில் நின்றனரோ எவ்வறத்தைக் கடைப்பிடித்தொழு கினரோ அதைப்பற்றிய கவலை மக்களுக்கு வேண்டுவ தில்லை. அவர் ஆட்சியில் மக்கள் அறவொழுக்கத்தில் நின்று, நல்வாழ்க்கை நடாத்தி, இன்பம் துய்த்தது உண்மை. ஆதலின், அசோகர் ஆட்சி இன்றும் போற்றப்படுகிறது.

அசோகரைப் போன்ற மன்னர் மீண்டும் எந்நாளில் தோன்றுவரோ தெரியவில்லை. இக் காலத்துக்கு ஓர் அசோகர் தேவை. இந் நாளில் காரல்மார்க்ஸைத் தந்த தெய்வம் இன்னும் ஏன் அசோகரை அளியாமலிருக்கிறது? அசோகர் வரலாற்றை இளைஞர் பன்முறை படித்துப் படித்துப் பண்பட்டு நாட்டுக்குச் சேவை செய்ய முற்படுவாராக."*

---

'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 55, 57.

இந்த முறையில் அசோகன் வரலாற்றில் காணப்பெறும் சிறப்பான உண்மைகளை எடுத்துக்காட்டிய பிறகு வைதிக சமயத்திற்கும் பௌத்த சமயத்திற்கும் உள்ள தொடர்பையும், அச் சமயம் பரவிய சிறப்பையும், அசோகன் வெற்றிகள் என்று கூறப்பெறுவனவற்றையும் தமக்கே உரிய முறையில் இதோ பேசுகிறார்:

"அசோகர் எதையும் வலியுறுத்தலால் நிகழ்த்துவதில்லை; அன்பால்-அறவுரையால் நிகழ்த்துவர். அவரிடம் அஹிம்ஸை மனமொழிமெய்களில் வளர்ந்தது என்று சுருங்கச் சொல்லலாம்.

அந் நாளில் பொருளற்ற கிரியைகள் பல ஆக்கம் பெற்றிருந்தன. கிரியைகளுக்கு அடிமைப்பட்ட மக்கள் மனம் தர்ம பிரசாரத்தால் மாறுதல் அடைந்தது. கிரியைகளைவிட அறவொழுக்கமே விழுமியது என்னுங் கொள்கை மக்களிடைப் பரவலாயிற்று.

தமது நாடு பெற்ற இன்பத்தை மற்ற நாடுகளும் பெறுதல் வேண்டுமென்றெண்ணி, அசோகர் தர்ம பிரசாரத்துக்கென்று, அறவோரைப் பல நாடுகளுக் கனுப்பினர். இலங்கை, பர்மா, சீனம், எகிப்து, சிரியா, மாஸிடோனியா முதலிய இடங்களில் அறவோர் வாயிலாகத் தர்மம் பரவலாயிற்று.

தர்மப் பிரசாரம் எங்கெங்கே சென்றதோ அங்கங்கெல்லாம் அதற்கு வரவேற்பு நடந்தது. தர்மம் எங்கெங்கே பரவிற்றோ அங்கங்கெல்லாம் அசோக ராஜ்யமும் பரவியதாகக் கொள்க. அசோகர் ஆட்சிக்கு எங்கும் எதிர்ப்பு நேரவில்லை. கொள்கைக்கு எதிர்ப்பிருக்கும்; கொலைக்கு எதிர்ப்பிருக்கும்; தர்மத்துக்கு எதிர்ப்பிருக்குமோ?

பழம் பாரத தர்மத்துக்கு அசோகர் ஆட்சி ஓர் எடுத்துக்காட்டு."*

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 59, 60.

## சமூகவியல்

இவற்றையடுத்து அந்நாளைய கல்வி நிலை, குடும்ப வாழ்க்கை, சமுதாய நிலை ஆகியவைபற்றிப் பேசிச் செல்கிறார். அடுத்து சமயநிலை பற்றிப் பேசும்போது கீழ்வருமாறு கூறுகிறார்:

"அக்கால இந்தியர் பெரிதும் சமயத் தத்துவ உலகில் உழைத்து உழைத்துப் பலவகைத் தத்துவ நுட்பங்களை எற்றுக்கு உதவினர் என்று சிலர் கருதலாம். இந்திய முனிவரர் முக்கால ஞானிகள். கால தேச வர்த்தமானங்கள் என்றும் ஒரு தன்மை யானவாயிரா என்பதும் அவை மாறிமாறிச் சுழன்று கொண்டே போகும் இயல்பின என்பதும் பழங்கால முனிவரர்க்குத் தெரியும். கால தேச வர்த்தமானப் புயலில் அகப்பட்டுச் சுழலும் மக்கள் கூட்டத்துக்கு ஒவ்வொருபோது ஒவ்வொரு தத்துவம் உண்மைய தாகவும் பொருந்தியதாகவும் தோன்றும். மக்களின் அவ்வக் கால உணர்வுக்கு உணவாகும் முறையில் பழைய முனிவரரால் பலவகைத் தத்துவங்கள் சமைத்து வைக்கப்பட்டன. சார்வாகம் உள்ளிட்ட எல்லாக் கொள்கைகளும் உலகில் நிலவிக் கொண்டிருத்தல் வேண்டுமென்பது இறைவன் திருவுள்ளம். அத்திருவுள்ளக் குறிப்பையுணர்ந்து நடந்தவர் பழங்கால முனிவரர்.

முற்கால இந்தியர் சமய வாழ்வை வேறாகவும் உலக வாழ்வை வேறாகவும் தனித்தனியே பிரித்துக் கொண்டாரில்லை. அவர், இன்பப் பேற்றுக்கென்று உலகம் ஆண்டவனால் அளிக்கப்பெற்ற அருட் கொடை என்றே கருதி வாழ்வு நடாத்தினர். அற வழியில் நின்று, அறவழியில் பொருளீட்டி, அறவழியில் இன்பம் நுகர்ந்தால் விடுதலை தானே உண்டாகும்

என்பது அவர்தங் கொள்கை. அவர்தங் கருத்துத் தனியே வீட்டின்மீது சென்றதில்லை; அறவொழுக்கத் தின்மீதே சென்றது. பெண் ஆணை வெறுத்தும், ஆண் பெண்ணை வெறுத்தும் தனித்து வாழ்வது இயற்கைக்கு மாறுபட்டு நடப்பது என்னும் உண்மை பழைய மக்களுக்கு நன்கு விளங்கியிருந்தது. அந்நாளில் முனிவரும், 'மனைவி மக்களை நீத்தோடுவது துறவு' என்று கருதினாரில்லை; 'மனமாசென்னும் தன்னலத்தை நீப்பதே துறவு' என்று அவர் கருதினர். பண்டை முனிவரர் பலரும் மனமாசென்னும் தன்னலத்தை அகற்ற மனைவிமக்களுடன் வாழ்ந்தே உயிர்கட்குச் சேவை செய்தமை உலகறிந்ததொன்று.

அக்கால இந்தியர், இயற்கை வாயிலாகவே இறையுண்மையை உணர முயன்றவர்; அவர் தனித்த வாழ்விற் புகாது, பெண் ஆண் சேர்க்கையென்னும் இயற்கை வாழ்வில் ஈடுபட்டவர்; இயற்கையின்பம் நுகர்ந்தவர்; அவர் இயற்கையை வழிபட்டவர் என்று சுருங்கச் சொல்லலாம்.

இயற்கை வழிபாடென்பது இயற்கையைக் கைகூப்பித் தொழுது வாளா கிடப்பதன்று. பின்னை என்னை? 'இயற்கை இறை வடிவம்' என்று, அதைச் சிந்தித்தல், கற்றல், கேட்டல், தொழில் செய்தல், தனித்து வாழாது இல்வாழ்க்கையில் நின்றொழுகல், மக்களை ஈன்று உலக வளர்ச்சிக்குத் துணைபுரிதல், விருந்தோம்பி அன்பையும் தியாகத்தையும் பெருக்கல், அன்பாலும் தியாகத்தாலும் மனமாசென்னும் தன்னலத்தை அகற்றல், எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகல் முதலியன இயற்கை வழிபாட்டின் பாற்பட்டன.

முற்கால இந்தியாவில் உருவ வழிபாடு இருந்ததா இல்லையா என்பது உன்னற்பாலது. உருவ

வழி பாட்டைப் பற்றி பலதிறக் கருத்துக்கள் தோன்றி யுள்ளன. உருவ வழிபாடு புராண காலத்தில் ஏற்பட்டதென்று ஒரு சாரார் சொல்லுப. புராணத்தில் உருவ வழிபாடிருத்தல் வெள்ளிடை மலை. இதி காசத்தில் உருவ வழிபாடு சொல்லப்படாமலா இருக்கிறது? இதிகாசத்திலும் உருவ வழிபாடு சொல்லப்பட்டே இருக்கிறது. வேதத்தில் 'லிங்கம்' பேசப்படுகிறது. அதனால் வேத காலத்திலும் உருவ வழிபாடிருந்த தென்றே கொள்ளுதல் வேண்டும். காலத்தால் இவை யெல்லாவற்றிற்கும் முற்பட்ட 'மொஹேஞ்சோதாரோ ஹரப்பா' ஆராய்ச்சியால் உருவ வழிபாடு இருந்ததென்றே தெரிகிறது. அப்பழம் பதிகளின் நாகரிகத்தை உணர்த்தும் வடிவங்களும் பொருள்களும் சில கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று மோனமூர்த்தி வடிவம். அஃது அந்நாளில் உருவ வழி பாடிருந்தமையை வலியுறுத்துவதாகும். 'மொஹெஞ் சோதாரோ-ஹரப்பா' நாகரிகம் பண்பட்டது. அந் நாகரிகத்தில் உருவ வழிபாடு நிகழ்ச்சியிலிருந்தெனில், அதற்கு முன்னரும் அவ்வழிபாடு நிகழ்ச்சியிலிருந்து வளர்ந்திருத்தல் வேண்டுமென்பதற்கு விளக்கந் தேவை இல்லை. உருவ வழிபாடு எக்காலத்தில் தோன்றிற்றோ தெரியவில்லை. அக்காலத்தை அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. முற்கால இந்தியாவில் உருவ வழிபாடு இருந்தது உண்மை. அதை மறுப்போர் சரித்திர உலகில் வாழாதவராவர்.

முதலில் உருவ வழிபாடு மரத்தடியிலே தோன்றி யிருத்தல் வேண்டும். இதற்குத் தல விருட்சங்'களின் சான்றே சாலும். பின்னே ஒவியத் துறை வளரவளரத் திருமாளிகைகள் கட்டப்பட்டன. அந்நாள் தொட்டு உருவ வழிபாடு, திருக்கோயில் வழிபாடு என்ற பெயர் பெற்றது. திருக்கோயில் பழைய இந்தியரின்

ஒருமைப்பாட்டுக்கும் எடுத்துக்காட்டாக நிற்கிறது. சமய மூலதர்மத்தில் ஒருமைப்பாடிருந்தமையால் வழிபாட்டிலும் ஒருமைப்பாடிருந்தது.

கயிலைமுதல் கன்னியாகுமரிவரை திருப்பதிகள் உள்ளன. அத்திருப்பதிகளிற் போந்து இறைவனை வழிபடுவதில் பண்டை மக்கள் தலைசிறந்து விளங்கினார்கள். திருப்பதிகள் சென்று திரும்புவதால் உடலுக்கும் நலன் உண்டாகும்; உயிருக்கும் நலன் உண்டாகும். பழைய கால க்ஷேத்திர யாத்திரையால் விளைந்த நலன்கள் பல. அந்நலன்கள் இப்பொழுது விளைவதில்லை. க்ஷேத்திர யாத்திரையின் நோக்கமும் நுட்பமும் இந்நாளில் மறைந்தே போயின. இந்நாளைய நினைவு இங்கே வேண்டுவதில்லை. அதற்குரிய இடம் நூலின் பிற்பகுதியே.

கயிலையைத் தொழுவோர் பத்திரியை வணங்குவர்; பத்திரியை வணங்குவோர் காசியைப் பணிவர்; காசியைப் பணிவோர் துவாரகையைப் போற்றுவர்; துவாரகையைப் போற்றுவோர் ஜகந் நாதத்தை ஏத்துவர்; ஜகந்நாதத்தை ஏத்துவோர் காஞ்சியை இறைஞ்சுவர்; காஞ்சியை இறைஞ்சுவோர் இராமேசுரத்தை வழுத்துவர்; இராமேசுரத்தை வழுத்துவோர் கன்னியை வழிபடுவர். இவ்வழிபாடு களினூடே ஒருமைப்பாட்டை நோக்குக. பழைய இந்தியா பலவழியிலும் ஒருமைப்பட்டே வாழ்ந்தது."*

## இரு பெரு விளக்கங்கள்

முற்கால இந்திய வரலாற்றைச் சமரச சன்மார்க்கத் தமிழறிஞர் என்ற முறையில் ஆய்ந்த திரு.வி.க., இடைக்கால இந்திய வரலாற்றில் அக்பரைக் கலங்கரை விளக்கமாகக்

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 73–76.

காண்கிறார். பௌத்த சமயத்தைப் பரப்புவதில் கண்ணுங் கருத்துமாக இருந்த அசோகர், இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு வழிகோலிய அக்பர் என்ற இருவரும் முறையே முற்கால, இடைக்கால இந்தியாவின் கலங்கரை விளக்கங்களாகக் காட்சி நல்குகின்றனர்.

அக்பருடைய ஆட்சியின் சிறப்புகள் பல இருப்பினும், அவருடைய சமய சமரசம், மக்கட்காகவே ஆட்சி செய்த மாண்பு ஆகியவையே திரு.வி.க.வைக் கவர்ந்தன. அதனை அப்படியே தர விழைகின்றேன்.

> "அசோகர் பௌத்தரைமட்டும் நேசித்து மற்றவரைத் துன்புறுத்தினாரில்லை. அவர் பௌத்தரையும் குடிமக்களாகவே கருதினர்; மற்றவரையுங் குடிமக்களாகவே கருதினர்; இருவருக்கும் ஒரே நீதி வழங்கினர். அக்பரும் முஸ்லிம்களையும் மற்றவரையும் குடிமக்களாகவே கருதி எல்லோருக்கும் ஒரே நியாயம் வழங்கினர். இருவர் அரசும் உலகிற்கு எடுத்துக் காட்டுக்களாக நிற்கும் மாண்பு வாய்ந்தன...
>
> அக்பர் ஆட்சிமுறை திறமை வாய்ந்ததாகவே இருந்தது. அதன்கண் அன்பும் நீதியும் விரவியே நின்றன. நல்லமைச்சும் வீரப் படைத்தலைமையும் அக்பர் ஆட்சிக்குத் தூண்களாக நின்றன. அவர்தம் ஆட்சியில் அரசுக்குரிய அங்கங்களெல்லாம் ஒழுங்குபட அமைந்திருந்தன. அவ்வமைப்புகளின் வகைகளை ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை. அக்பர் ஆட்சியில் கோலப்பெற்ற சீர்திருத்த முறைகளே பெரிதும் கருதற்பாலன.
>
> அக்பர் முஸ்லிம். அவர் ஆண்ட நாடோ ஹிந்துக்களாலும் முஸ்லிம்களாலும் ஆக்கப்பட்டது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பலதிற வேற்றுமைகளுண்டு. அவ்விருவர்க்குள் ஒற்றுமைகாண்டல்

அருமையினும் அருமை என்று சொல்லப்படுவது வழக்கம். அருமையினும் அருமையை அக்பர் எளிமை யினும் எளிமையாக்கினர். அரசர் மனம் ஒரு பக்கம் சாராது நேரிய நடுமையில் நின்றால் அருமைகளெல் லாம் எளியனவாகும். வேற்றுமை ஒற்றுமை என்பன மனத்திலிருப்பன. மனத்தில் வேற்றுமை விளைந்தால் உலகிலும் வேற்றுமை விளையும் அதில் ஒற்றுமை நிலவினால் உலகிலும் ஒற்றுமை நிலவும்.

அக்பர் முஸ்லிம் வயிற்றில் பிறக்க நேர்ந்தமை யால், அவர் ஹிந்துக்களை அடக்கவோ தம் கொள்கை யில் ஈர்க்கவோ முயன்றிருத்தல் வேண்டுமோ? அது மூர்க்கர் செயலாகும். அக்பர் அறிஞர்; அன்பர்; பரந்த நோக்குடையவர். அவருக்கு ஹிந்துக்களும் நாட்டவ ராகவே காணப்பட்டனர்; முஸ்லிம்களும் நாட்ட வராகவே காணப்பட்டனர். இருவரிடத்திலும் அவருக்கு வேற்றுமை தோன்றவில்லை.

அக்பர் அரசாங்கத்திலும் சேனையிலும் பிற வற்றிலும் ஹிந்துக்களையும் அமர்த்தினர்; முஸ்லிம் களையும் அமர்த்தினர். அவர் ஹிந்து என்றோ முஸ்லிம் என்றோ கருதி எவரையும் வேலையில் அமர்த்துவதில்லை. அவர் தம் மனம் எல்லாரையும் மனிதரென்றே கருதிற்று. அக்பர் மனம் வேற்றுமையில் நிற்கவில்லை. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை அக்பர் ஆட்சியில் உரம் பெற்றே நின்றது.

ஆட்சிக்குத் தூண் போன்றவர் அமைச்சரும் படைத்தலைவருமாவர். அக்பர் ஆட்சித் தூண்கள் ஹிந்து-முஸ்லிம் கலப்புற்றனவாகவே இருந்தன. அக்பரின் அமைச்சர் ராஜாதோடர்மாலும் அபுல்பாஜி லும்; படைத்தலைவர் ராஜாமான்சிங்கும் ராஜாபீர் பாலும்.

அக்பர், முஸ்லிம் பெண்ணையும் மணஞ் செய்தனர்; ஹிந்து ராஜபுத்திரப் பெண்ணையும் மணஞ் செய்தனர்; ஒரு கிறிஸ்துவப் பெண்ணையும் மணஞ் செய்தனரென்று சில சரித்திராசிரியர் சொல்லு கின்றனர்.

ஒற்றுமைக்குரிய கலப்பு மணத்தை அக்பர் தாமே செய்துகாட்டினர். கலப்பு மணம் அந்நாளில் காட்டுத்தீப்போல் நாட்டிடைப் பரவியிருந்தால் இந்தியா அடிமை நாடாகியிராது. ஹிந்துக்களின் சாதிக்கட்டும், சம்பிரதாயக் கட்டும், பிற கட்டுக்களும் கலப்பு மணத்தைப் பெருக விடவில்லை. ஒற்றுமைக் குரிய நல்ல நல்ல வாய்ப்புகளை யெல்லாம் இந்தியா நெகிழவிட்டது.

முஸ்லிம் அல்லாதார்க்கென்று பிறப்பிக்கப் பெற்ற சட்டங்களெல்லாம் அக்பரால் ஒழிக்கப் பட்டன. அவரால் குழந்தை மணம் விலக்கப்பட்டது; கைம்மையவர் கொடுமை ஒருவாறு அகற்றப்பட்டது; கட்டாய உடன்கட்டை யேறுதல் நிறுத்தப்பட்டது; அடிமைமுறை அழிக்கப்பட்டது.

அக்பர் மாட்டிறைச்சி தின்பதை விடுத்ததும், பசுக்கொலையையும் பலியையும் நிறுத்த முயன்றதும் குறிக்கத்தக்கன.

அக்பர் ஆட்சியில் நிலவரி தவிர மற்றெல்லா வரிகளும் தொலைக்கப்பட்டன; வேறு பல சீர்திருத்தங்களும் செய்யப்பட்டன.

அக்பர் இஸ்லாமானவர்; வேறு பல சமயங்களை யும் ஆராய்ச்சி செய்தவர்; எல்லாச் சமயங்களிலும் உண்மையிருத்தல் விளங்கப்பெற்றவர். அவரைச் சமரச சன்மார்க்கர் என்றே கூறுதல் வேண்டும். அவர் கிறிஸ்துவப் பாதிரிமாரை அன்புடன் வரவேற்றது

கருதற்பாலது. அக்பர் காலத்திலேயே இங்கிலீஷ் கிழக்கிந்திய வாணிபக் கூட்டமும், டச்சுக் கிழக்கிந்திய வாணிபக் குழுவும் தன்தன் அரசர் கட்டளை பெற்று இந்தியா போந்தன. அக் குழுவினர் உரிமையுடன் வாணிபஞ் செய்ய அக்பர் கருணை ஆட்சி இடந் தந்தது.

அக்பர் ஆட்சியில் தமிழ்நாடு கலவாமலே இருந்ததென்று சரித்திரங் கூறுகிறது. ஆனால், தமிழ்த் தென்றல் அவர் ஆட்சியில் வீசாமலில்லை. குமர குருபரர் என்ற தமிழர் அக்பர் காலத்திலேயே காசியம் பதி சேர்ந்து தமிழ் மடமொன்று அமைத்துத் தமிழ் வளர்த்தது தமிழ் மக்களுக்குத் தெரிந்ததொன்று. குமரகுருபரர் அக்பரை நேரிற் கண்டு பேசினர் என்றுஞ் சொல்லப்படுகிறது. குமரர், காசியில் கம்ப இராமாயணத்தை ஹிந்தியில் பிரசங்கஞ் செய்தனராம். அப்பிரசங்கத்தைக் கேட்டுக் கேட்டுத் துளஸிதாஸ் ஹிந்தி இராமாயணம் எழுதினரென்று டாக்டர் சாமிநாத ஐயர் கூறுகிறார். அக்பர் ஆட்சியில் தமிழ்க் கம்பர் கருத்துக்கள் ஹிந்தியில் அமரவும் நேர்ந்தது போற்றுந் தகையதே."*

## அசோகர், அக்பர், ஔரங்கசீப்

இந்திய ஒருமைப்பாட்டிற்கு அசோகர் அடி கோலினார். அக்பர் மாபெருங் கட்டம் சமைத்தார். ஆனால், ஔரங்கசீப் அக் கட்டடத்தை இடித்துத் தரைமட்டமாக் கினார் என்பதுதான் திரு.வி.க.வின் வரலாற்று முடிபு.

"அதிகாரஞ் சிறந்ததன்று; சேனா பலமும் சிறந்ததன்று; குடிமக்களின் மகிழ்ச்சியே சிறந்தது. அதிகாரமும், சேனாபலமும் எற்றுக்கு? குடிமக்களின்

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 104, 107.

மகிழ்ச்சிக்கே. அதற்கென்று அதிகாரமும் சேனா பலமும் பயன்படல் வேண்டும். தமது எண்ணங்களை நிறைவேற்றுவதற்கென்று அதிகாரத்தையும் சேனா பலத்தையும் பயன்படுத்தும் அரசுகள் வீழ்ந்துபடுதல் ஒருதலை.

ஔரங்கசீப்பின் அதிகாரமும் சேனாபலமும் பெரியனவாகவே இருந்தன. அவை தீய வழியில் பயன்படுத்தப்பட்டன. பெரிய அதிகாரமும் பெரிய சேனாபலமும் என்னவாயின?

பாபர் நாளிலிருந்து செவ்வனே வளர்ந்து வளர்ந்து, அக்பர் காலத்தில் ஓங்கியுயர்ந்த மொகலாய முஸ்லிம் ராஜ்யம், ஓர் ஔரங்கசீப்பின் மதவெறியால் வீழலாயிற்று. கோனாட்சியில் மன்னர் நல்லவராக வாய்க்கப் பெற்றால் குடிமக்கட்கு நல்லன விளையும்; மன்னர் தீயவரானால்....? அவர் அழிவதுடன் இராஜ்யமும் அழிவதாகும்.

ஔரங்கசீப் மதவெறியால் மங்காது அக்பரைப் போலப் பொது நோக்குடன் ஆட்சிபுரிந்திருந்தால் இந்தியாவில் சுதேச ஆட்சி நிலைத்திருக்கும்; பரதேச ஆட்சி நுழைதற்கே இடம் நேர்ந்திராது. ஔரங்கசீப்பின் மதவெறி அவரை வீழ்த்தியது; இராஜ்யத்தை வீழ்த்தியது; நாட்டையும் அடிமைக் குழியில் வீழ்த்தியது. ஆகவே, அரசு எப்பொழுதும் சாதி மத நிறமொழி முதலிய வெறிகளைக் கடந்த ஜனநாயக முறையைக் கொண்டதாயிருத்தல் வேண்டும்.

ஔரங்கசீப்புக்குப் பின்னே டெல்லியில் சக்கரவர்த்திகள் என்ற பெயரால் பொம்மைகளைப் போலச் சிலர் சிம்மாசனத்தில் கொலுவீற்றிருந்தனர். அவரனைவரும் இடிந்து வீழ்ந்த அக்பர் கோட்டையின்

*சிதைவுகளாகிய கற்குவியல்களில் நிழலில் நின்று காலங் கழித்தவர். ஆகவே, அவரைக் கணக்கில் சேர்க்க வேண்டுவதில்லை. ஔரங்கசீப்புடன் முஸ்லிம் ராஜ்ய ஆக்கமே முடிந்தது என்று கொள்க.*

*ஔரங்கசீப் ஆட்சியில் கருக்கொண்ட உள் நாட்டுக் குழப்பங்கள் பலதிற உருவந் தாங்கித் தாங்கிப் பெருகின. அவை மத்திய அரசாங்கத்தின் கால்களை முரித்தன; அதனை இயங்க ஒட்டாமல் செய்தன. குழப்பங்களின் இடையிடையே மஹாராஷ்டிரம், இராஜபுதனம் முதலியன எழுந்தும் விழுந்தும் மறைந்தன. ஓர் இந்தியா, ஹிந்து இந்தியா-முஸ்லிம் இந்தியா-போர்ச்சுகீசிய இந்தியா-பிரெஞ்ச் இந்தியா-இங்கிலீஷ் இந்தியா என்று பலவகையாகப் பிரியத் தொடங்கிற்று. இப் பிரிவுகளால் நேர்ந்த பிணக்குகளும் போர்களும் பலப்பல. அவற்றை ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை.''**

*இந்திய வரலாற்றின் சாரமாக உள்ள இதனை அழகுற எடுத்துக்கூறிய ஆசிரியர்.* **'இடைக்கால இந்தியாவின் தோற்றுவாய் நன்றாயிருந்தது; இறுவாய் இரங்கத்தக்கதாயிற்று.** *இடைக்கால இந்தியாவின் முற்பகுதியின் இறுதி, இந்து ராஜ்யத்துக்கு முடிவுதேடிற்று. அதனால் சாதிப் பாகுபாடுகளும், சம்பிர தாயக் கட்டுகளும், பிறவும் அயலவரைக் கூறி அழைப்பன வாயின. அவ்விந்தியா முஸ்லிம் ராஜ்ய எழுச்சிக்கு நல்வரவு கூறிற்று என்று பொதுப்படக் கூறலாம்' (பக்கம் 115) என்று கூறுகிறார்.*

## ஒப்பு நோக்கம்

*முஸ்லிம் ஆட்சி அந்நியர் ஆட்சிதான் என்றாலும் தைமூர் போன்ற சில கயவர்களை நீக்கிப் பார்த்தால்.*

* இந்தியாவும் விடுதலையும் பக்கம் 111, 115.

பிற்காலத்தில் முகிழ்ந்த ஆங்கிலர் ஆட்சியுடன் ஒப்பிடும் போது சிறந்ததென்றே கூறலாம். முஸ்லிம் மன்னர்கள் இந்தியாவைத் தாய்நாடாகவே கொண்டமையால் இந் நாட்டு வளம் இங்கேயே தங்கிற்று; பயன்பட்டும் வந்தது. முஸ்லிம் அரசில் இந்தியா வறுமையாலும் பஞ்சத்தாலும் அவதியுறவில்லை. கலைகள் வளர்ந்தன; உலகம் வியக்கும் கட்டடங்களும் எழுந்தன. பன்னெடு நாள் சோதர நேயம் பெருகியே நின்றது.

"வெம்மையுற்ற இடைக்கால இந்தியா இந்து-முஸ்லிம் வேற்றுமையை-பிணக்கை-பகைமையைக் கண்டு கண்டு கண்ணீர் உகுத்துக் கொம்டே மறைந்தது. அதனின்றும் தற்கால இந்தியா பிறந்தது" என்ற வாக்கியத்துடன் இடைக்கால இந்தியா பற்றிய வரலாற்றை முடிக்கிறார் ஆசிரியர்.

## தற்கால இந்தியா

தற்கால இந்தியா என்ற பகுதியில் பிரிட்டிஷார் இந்நாட்டில் புகுந்த நாள் தொடங்கி அவரால் செய்யப் பெற்ற கொடுமைகள் இடம் பெறுகின்றன. டிக்பி முதலிய ஆங்கிலேயர் எழுதியவற்றைக் கொண்டே ஆசிரியர் அந்த ஆட்சியின் கொடுமையையும் அந் நாளில் ஏற்பட்ட பஞ்சங்கள் பற்றியும் வரைந்துள்ளார். இறுதியாக உள்ள ஒரு பத்தி நம் நெஞ்சை உருக்குவதாகும். எவ்வளவு ஆறாத் துயரத்துடன் தமிழ் முனிவர் இதனை எழுதியிருப்பார் என்பதை உங்கள் கற்பனைக்கே விட்டு விடுகின்றேன். அப் பத்தி வருமாறு:

> "இமயத்தடியில் ஒரு மாபெரும் பாரதக் கழகம் கூடியிருந்தது. அக் கழகத்தின் கிளைகள் ஒவ்வொரு கிராமத்திலும் நிலவியிருந்தன. அப் பெருங் கழகத்தில் உமை, திரு, வாணி, காளி, துர்க்கை. சூர் முதலியோர் வீற்றிருந்தனர். இக் கால இந்தியாவில் அப்பெருந்

தெய்வக் கழகம் குலைந்துபோயிற்று; கிளைகளும் முரிந்தன. உமை ஓடிய இடந் தெரியவில்லை. திரு. வாமி, காளி முதலியோர் அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யா, ஜெர்மனி, பிரான்ஸ், ஜப்பான் முதலிய இடங்களுக்குச் சென்று விட்டனர். பாரதத்தில் அவர்தம் உருவங்கள் மட்டும் படமாய்-கல்லாய் செம்பாய்ப் போயின. அவற்றுக்கு வந்தனை வழிபாடுகள் செய்யப்படுகின்றன. வெறும் வந்தனை வழிபாடுகளால் ஞானம், செல்வம், கல்வி, தொழில், வீரம், அறப்போர் முதலியன ஓங்கி வளருமோ? அவை மீண்டும் பழையபடி ஓங்கி வளரல் வேண்டும். இதற்கு நாடு இப்பொழுது அடைந்துள்ள விடுதலை போதாது; முழு விடுதலை அடைதல் வேண்டும். பலதிற இடுக்கண்கள் நானாபக்கமுஞ் சூழ்ந்துள்ள இவ் வேளையில் நாடு எப்படி முழு விடுதலை அடையும்?"*

## நம்மிடமுள்ள குறை

காந்தியடிகளின் தத்துவங்களில் ஊறியிருந்த திரு.வி.க. அவர்கள் நாட்டுக்கு விடுதலை அளிக்க வேண்டியவர்கள் பொறுப்பை நன்கு அறிந்திருந்தார். பிரிட்டிஷார் செய்ய வேண்டிய கடமை ஒன்றே ஒன்றுதான். அதுதான் மூட்டை முடிச்சுகளுடன் கப்பல் ஏறவேண்டிய கடமை. ஆனால், அவர்களை அவ்வாறு போகாமல் தடுக்கும் சக்திகள் நம்மிடந்தான் உள்ளன என்பதே அவருடைய அரசியல் வாதம். நம்மிடையே உள்ள ஒற்றுமையின்மை, சாதி வெறி முதலியனவே வெள்ளையரை இங்கே பிடித்திழுத்து வைத்திருக்கும் சக்தி என்று 'இந்தியாவின் தலையெழுத்து'† என்ற கட்டுரையில் கூறுகிறார்.

* 'இந்தியாவும் விடுதலையும்', பக்கம் 202.

† 'தமிழ்ச் சோலை-1', பக்கம் 108.

## வன்முறை மறுப்பு

இந்த நம்பிக்கையினால்தான் வன்முறையை அவர் ஆதரிக்கவில்லை. பகத்சிங் போன்ற மாபெருந் தியாகிகள் தூக்குக் கயிற்றை முத்தமிடுவது கண்டு அரற்றியுள்ளார்; கண்ணீர் வடித்துள்ளார்; தமிழரையுங் கண்ணீர் வடிக்குமாறு செய்துள்ளார்; தம் பேனாவைக் கண்ணீரில் தோய்த்துத்தான் பகத்சிங்பற்றியும் யதீந்திரதாஸர் பற்றியும்* எழுதினார் என்பது உண்மைதான். ஆனால், அதே நேரத்தில் பகத்சிங் போன்றவர்கள் கைக்கொண்ட வழியை அவர் ஆதரிக்கவே இல்லை. தொழிலாளர் இயக்கம் தோற்றுவித்துப் பல வேலை நிறுத்தங்களை முன்னின்று நடத்திய ஒரு வீரர் வன் முறையைக் கண்டித்தது வியப்பாய் இருக்கலாம். ஆனால், திரு.வி.க.வுடன் பழகியவர்கள். அவருடைய நூல்களைக் கற்றவர்கள் இதில் வியப்பெய்த ஒன்றும் இல்லை.

## அஞ்சா நெஞ்சர்

மில்லில் வேலைநிறுத்தம் நடத்துவதும் ஒருவகைப் போராட்டந்தான்; நாட்டு விடுதலையைக் கோரி வெள்ளையர்களைச் சுட்டு தள்ளுவதும் ஒருவகைப் போராட்டந்தான். ஒன்றை நலம் என்று ஏற்றுக்கொண்டு மற்றதை மறுக்க வேண்டிய இன்றியமையாமை என்ன என்று சிந்திக்க வேண்டும். மில்லில் பணிபுரிவோர் தம் நியாயமான கோரிக்கைகளை முதலாளிகளிடம் தெரிவித்துத் தீர்வுகாண முற்படுகின்றனர்; பேசிப் பார்க்கின்றனர்; முன் அறிவிப்புச் செய்கின்றனர். இவை ஒன்றிலும் வழி பிறக்காதபொழுது வேலை நிறுத்தஞ் செய்கின்றனர். வேலை நிறுத்தத்தால் ஏதேனும் கேடு வரும் என்றஞ்சிய மில் அதிபர்கள் கதவடைப்புச் செய்கின்றனர். ஆனால், வேலைநிறுத்தம் செய்கிறவர்களிடம் வன்முறை யாதும் இல்லை என்பதை

* 'தமிழ்ச் சோலை-1', பக்கம் 389.

அறிதல் வேண்டும். பொது வேலைநிறுத்தம் நடைபெறும் பொழுது இரண்டொரு கருங்காலிகளால், முதலாளிகளால் விலைக்கு வாங்கப்பெற்ற கூலிப் பட்டாளங்கள் வேலை நிறுத்தத்தை ஒழிக்க முயல்வர். இதனால் மனக் கொதிப்படைந்த தொழிலாளரிற் சிலர் வன்முறையைக் கையாள்வதும் உண்டு. முதலாளிமார்களும் தொழிலாளரிற் சிலரேனும் இத்தகைய வன்முறையில் இறங்கவேண்டும் என்பதையே விரும்புகின்றனர். ஏனெனில், ஆள்வோரின் படைபலம் அவர்களிடந்தான் உள்ளது. தொழிலாளர் வன்முறையில் இறங்கினால்தான் படை பலத்தைப் பயன் படுத்த முடியும். எனவே, துப்பாக்கிச் சூடு முதலியவை நிகழத் தொழிலாளர் நேரிடையாகவோ மறைமுகமாகவோ காரணர் அல்லர். அவர்களையும் மீறி அநியாய வழியில் நடைபெறும் துப்பாக்கிச் சூட்டிற்கோ, நாடுகடத்தல் போன்றவற்றிற்கோ திரு.வி.க. அஞ்சவே இல்லை. மாபெரும் வீரராய் முன்னின்று இவ்வேலை நிறுத்தங்களை நடத்தினார்.

**நமது குறைகள்**

ஆனால், பிரிட்டிஷாரை ஓட்ட எங்கோ ஒன்றிரண்டு வெள்ளையரைச் சுடுவதை அவர் விரும்பவில்லை. காரணம் இரண்டு வகைப்படும். தனி மனிதரைச் சுடுவதால் அதிகார வர்க்கத்தை ஒன்றுஞ் செய்துவிட முடியாது. இது வரலாறு கண்ட உண்மை. இரண்டாவது, நம்மிடம் குற்றங்களை வைத்துக்கொண்டு, 'வெள்ளையனே வெளியேறு' என்று கூப்பாடு போடுவதால் பயனில்லை. இந்த இரண்டும் திரு.வி.க.வின் ஆழ்ந்த முடிவுகள். அவருடைய அரசியல் ஞானமும் கூர்த்த மதியும் இவற்றை நன்கு அறிந்து கொண்டன. நம்மிடம் சாதி வேறுபாடு, அந்நிய நாகரிக மோகம் முதலிய குற்றங்கள் இருக்கும்வரை அந்நியன் வெளியேறவும் மாட்டான்; வெளியேறினாலும் அதனால் ஒன்றும் பயன் விளையப் போவதில்லை. இந் நிலையில்

தீண்டாமை ஒழிப்பு, சுதேசியம், அஞ்சாமையை அறிவுறுத்தும் ஒத்துழையாமை ஆகியவற்றில் நம்மவர்கள் நன்கு பழகிக் கொண்டால் ஒழிய சுயராச்சியம் பெறத் தகுதியுடைய வர்களாக மாட்டோம். இந்த ஆக்க வேலைகளைச் செய்ய முற்படாமல் வெள்ளையரைச் சுட்டு தள்ளுவதால் எவ்விதப் பயனும் ஏற்படாது என்ற கருத்துடையவர் நம் பெரியார். அன்றியும், வன்முறையால் பெறப்படும் ஒன்றும் வன்முறை களாலேயே அழிவுறும் என்றும் அவர் திடமாக நம்பினார். மகாத்மாவும் இதே கொள்கையைக் கடைப்பிடித்தார். ஆகவேதான், நம் பெரியார் வன்முறைகளைக் கையாண்டு விடுதலை பெற விரும்பவில்லை. இக்கருத்தைப் பெரியாரின் 'தமிழ்ச் சோலை' என்ற நூலில் 'அணித்தோ சேய்த்தோ' என்ற கட்டுரையில் காணலாம் (பக்கம் 134)

## வினைத்தூய்மையுடையார்

திரு.வி.க.வின் அரசியற் கொள்கைகள் மகாத்மாவைப் பின்பற்றியதுடன் திருக்குறளையும் அடியொற்றி எழுந்தன. வள்ளுவப் பெருந்தகை 'வினைத்தூய்மை' என்றே ஓர் அதிகாரம் வகுத்துள்ளார் அல்லரோ? எத்தகைய செயலாயி னும் சரி, அதனைச் செய்து முடிக்க மேற்கொள்ளப்பெறும் வழிதுறைகளும் தூய்மையானவையாய் இருத்தல் வேண்டும் என வற்புறுத்தினார். இக் காலத்தில் எவ்வாறாயினும் தாம் விரும்பியதைப் பெறவேண்டும் என்று நினைப்பவர்கள் தாம் நிரம்ப உள்ளனர். விரும்பியதைப் பெறுதற்குக் கையாளும் வழிதுறைகளைப்பற்றி அநேகர் கவலைப்படுவதே இல்லை. ஆனால், தவறான வழிகளில் பெறுபவை எவையாயினும் அவை அழிந்துவிடும் என்று தமிழ் மறை பேசுகிறது. 'முடிபு சிறந்திருப்பின் வழிதுறைகளைப் பற்றிய கவலை இல்லை' என்ற கருத்தில் உள்ள 'End justfies the means' என்ற மேனாட்டுக் கொள்கை இவண் ஏற்றுக்கொள்ளப்படாத ஒன்று. அதுவும் அரசியலில் வழியைப் பற்றிக் கவலை

கொள்ளாதவர்களே வெற்றி பெறுவர் என்ற நம்பிக்கை திடமாக ஊன்றிவிட்டுள்ளது. அரசியல் தந்திரம் என்ற சிறப்புப் பெயர் சூட்டப்பட்டவுடன் எத்தகைய தவறான வழிகளும் தவறில்லாதவை என்று கருத இடம் ஏற்படுகிறது. ஆனால், தனி மனிதன் வாழ்க்கையாயினும் சரி, ஒரு நாட்டின் முன்னேற்றமாயினும் சரி தவறான வழிகளில் சென்றால் நற்பயன் அடைய முடியாது. என்றும் பயன் கிடைப்பதுபோலக் காணப்பெறினும் அப்பயன் நிலைத்து நில்லாததுடன் முன்னரே இருந்த ஒன்றிரண்டு நன்மைகளையும் சேர்த்து அடித்துக்கொண்டு போய்விடும் என்றும் நம்மவர்கள் கருதினர்.

*"சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல்பசுமட்*
*கலத்துள் நீர்பெய்துஇரீஇ யற்று"**

என்று குறள் பேசுகிறது. இதன் அடிப்படையை உணர்ந்து தம் வாழ்வை அமைத்துக்கொண்ட திரு.வி.க. அவர்கள் பயனைக் காட்டிலும் அப் பயனை யடையும் வழியில் அதிக கவனம் செலுத்தினார். அதனாற்றான் அடிகளின் சாத்வீக சத்யாக்கிரகத்தை ஏற்றுக்கொண்டாரே தவிர அதன் எதிரான வன்முறைப் புரட்சியை ஏற்றுக்கொள்ளவில்லை.

## கொள்கையும் செயலும்

ஒழுங்கு முறை, கட்டுப்பாடு என்பவற்றிற்கு அதிக வணக்கஞ் செலுத்திக் கட்டுரைகள்‡ வரைந்த திரு.வி.க. போன்ற சமரச ஞானிகள் அரசினரின் சட்டத்தை வேண்டு மென்றே மீறுகின்ற ஒத்துழையாமையில் பங்கு பெறலாமா என்ற வினா நியாயமானதே. இதற்கு விடை இறுக்கும் முறையில் திரு.வி.க.பின் வருமாறு எழுதுகிறார்:

---

* 'திருக்குறள்', 660.
‡ 'தமிழ்ச் சோலை–2', பக்கம் 141 முதல் 143 வரை.

"இப் பெரிய இயக்கத்தைச் சட்ட வரம்பு கடந்த தென்று குறை கூறுவோர் இல்லாமற்போகவில்லை. சட்டவரம்பாவது மனித வாழ்விற்குரிய பல துறைகளுடன் ஒன்று. முதலில் அவ் வரம்பில் நின்று கிளர்ச்சி செய்தல் அறம். நியாயம் பிறந்தால் கிளர்ச்சி நிறுத்தப்படல் வேண்டும். நியாயம் பிறவாது, மேலும் மேலும் மறமும் தீமையும் கொடுமையும் மலியுமேல், சத்தியாக்கிரகப் போர் தொடங்குதலன்றி வேறு என் செய்வது? காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவிலும் மற்ற இடங்களிலும் போர் தொடங்குவதற்கு முன்னர் எத்துணை எத்துணை விண்ணப்பம் அதிகாரிகட்குச் செய்தனர்? எத்துணை முறை இங்கிலாந்து ஓடிக் குறைகளை முறையிட்டனர்? காந்தியடிகள் மாண் டேகு — செம்ஸ்பர்ட் முன்னிலையில் சான்று கூறி யதும், ஹண்டர் கூட்டம் முன்னிலையில் சான்று பகர்ந்ததும், பம்பாய் தில்லி இவ்விடங்களில் ஐரோப்பா யுத்தத்தைப் பற்றிக் கூடிய அரசாங்க மகா நாடுகளில் கலந்து கொண்டதும், போயர் சண்டையில் பிரிட்டிஷாருக்கு உதவி புரிந்ததும், ஐரோப்பாப் போருக்குக் (1914—1918) கெய்ரா ஜில்லாவில் சேனை திரட்டியதும், அமிர்தசரஸ் காங்கிரஸில் மாண்டேகு வுக்கு நன்றி கூறல் வேண்டுமென்று மன்றாடியதும் அவரது வாழ்வில் அரும்பிய செயல்களல்லவோ? மகாத்மா ஒத்துழையாமை துவங்குவதற்கு முன்னர், லார்ட் செம்ஸ்பர்டுக்கு விண்ணப்பஞ் செய்ததும், ஆங்கிலேயரை 'அன்பார்ந்த நண்பரே' என்று விளித்து இரு முறை கடிதம் விடுத்ததும், ஒத்துழையாக் காலத்தில் மாளவியா வேண்டுகோட்கிணங்கி லார்ட் ரீடிங்கைக் காண விரும்பியதும், மாளவியா மற்று மொரு முறை விழைந்தவண்ணம் ஸர் சங்கரன் நாயர் தலைமையின்கீழ் பம்பாயில் கூடிய மகாநாடு போந்து

பேசியதும், உள்ள சட்டங்களுக் கிணங்கித் தம்மைக் குற்றவாளியென்று சொல்லிக் கொள்வதும், இன்னோ ரன்ன பிறவும் என்ன காட்டுகின்றன?

சத்தியாக்கிரகப் போர் முதலியன, உலகச் செயற்கைக் கொடுஞ் சட்டங்கட்கு முரணாகத் தோன்றினும், அவை இயற்கை அறச் சட்டங்களை அரண்செய்யும் நியாய வரம்புடையனவேயாகும். காந்தியடிகளின் வாழ்வே நியாய வரம்புவழி நின்று இயங்குவதென்பது, அவரது வாழ்வின் நுட்பம் உணர் வோர்க்குப் புலப்படாமற் போகாது.

சத்தியாக்கிரக வக்கீல்களைப் பற்றிப் பிறந்த ஆமதாபாத் ஜில்லா நீதிபதியின் கடிதத்தை 'யங் இந்தியா'வில் அடிகள் வெளியிட்டதும், அதைப்பற்றி அவர் எழுதியதும் நியாயமன்று; அவமதிப்பாகும் என்ற குற்றம் அவர்மீது சாட்டப்பட்டபோது, பம்பாய் நீதி மன்றத்தில் மன்னிப்புக் கேட்குமாறு நண்பர் பலர் அவரை வேண்டினர். அவ்வேண்டுதலுக்கு மகாத்மா இணங்கினாரில்லை. அதைப்பற்றி மகாத்மா, 'மன்னிப்புக் கேட்டல் கூடாது என்னும் பிடிவாதம் எனக்கில்லை; மூலத்தில் ஒரு தர்மமிருக்கிறது' என்று கூறிப் பத்திராசிரியர் உரிமைக்கும் சட்டத்துக்கும் ஊறு நிகழாமுறையில் நடந்துகொள்ளல் வேண்டுமென்னுங் குறிப்போடு ஓர் அறிக்கை செலுத்தியதும் ஈண்டுக் கருதத்தக்கது."*

"ஒத்துழையாமை கோடல் மக்கள் தீதன்று; முறை மீதேயாகும். கவர்னர்கள் மீது அது செலுத்தப்படுவதன்று; ஆனால், அவர்கள் வயமுள்ள ஆட்சிமுறை மீதே அது செலுத்தப்படுகிறது."

* 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்', பக்கம் 445–447.

"தீமையை மூர்க்க சக்தி கொண்டு களைய நமக்கு உரிமை இல்லை. அத் தீமைக்கும் நமக்கும் தொடர்பின்றி ஒதுங்கி நிற்கவேண்டும்" (பக்கம்—431) மகாத்மாவின் ஒத்துழை யாமை இயக்கத்தின் உயிர்நாடிகள் மேலே கூறப்பெற்ற தொடர்கள். தமிழ்நாட்டில் பிறந்து, திருக்குறளில் வளர்ந்து, தேவார திருவாசகங்களில் ஊறி, சமரச சன்மார்க்கியாகப் பண்பட்ட திரு. வி. க. போன்ற ஒருவரை மேலே கூறிய சொற்றொடர்கள் கவர்வதில் வியப்பு ஒன்றுமில்லை. அன்றியும், மகாத்மாவின் ஒத்துழையாமை, அரசியல் என்ப வற்றின் அடிப்படையில் சமய வாழ்வு மலர்ந்திருந்தது. சமய வாழ்வில் மூழ்கிய திரு. வி. க. விற்கு மகாத்மாவின் கொள்கை முற்றிலும் ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு வேறு ஒன்றும் தேவை இல்லை.

## நலம் நாடுவார்

நலம் கண்டவிடத்தில் அதனைத் தேவையான அளவு ஏற்றுக்கொள்பவர் திரு.வி.க. கார்ல் மார்க்ஸின் தத்துவம் நிரீஸ்வர வாதத்தில் தோன்றியிருக்கலாம். ஆனால், ஒருவன் உண்டு கொழுத்திருக்க, அவன் கொழுப்பதற்குக் காரண மான உழைப்பை நல்கியவன் ஓய்ந்துபோதல் தவறு என்ற வாதம் திரு. வி. க. விற்கு ஏற்றமாய்ப்பட்டது. எனவே, சமயவாதியாகிய திரு.வி.க (அந்த அளவில்) மார்க்கிஸத்தை ஏற்றுக்கொண்டார். ஆனால், மார்க்கிஸம் மனித மனத்தைப் பற்றிக் கவலைப்படவில்லையே என்ற குறை இருந்துவந்தது. காந்தீயம் அந்தக் குறையைப் போக்கிற்று. எனவே, திரு.வி.க. வின் அரசியலில் மார்க்ஸும் காந்தியும் இடம் பெற்றனர். இதில் ஒரு வியப்பு என்னவெனில் இவை இரண்டு கொள்கை களும் இரு துருவங்களாகும். மார்க்கிஸத்தில் வழியைப்பற்றிக் கவலைப்படாமல், வன்முறையை ஏற்றாவது பொதுவுட மையை நிலைநாட்ட வேண்டும் என்ற கொள்கை வலி யுறுத்தப் பெற்றது. காந்தீயத்தில் பயனைவிட வழியே மிகமிக

முக்கியமானது. தவறான வழிகளை மேற்கொண்டு பெருநன்மையைப் பலருக்கும் செய்வதைக் காட்டிலும் அவ் வழியை மேற்கொள்ளாமல் இருப்பது சிறந்தது. இவ்வாறு அடிகள் கூறக் காரணம் நன்மை, தீமை என்று கூறப்பெறுபவை இரண்டும் ஒப்பு நோக்குச் சொற்கள். நன்மை என்பதையும் தீமை என்பதையும் முடிபு செய்வதற்கு நாம் யார்? எனவே, மேற்கொள்ளும் வழி தூய்மையானதாக இருத்தல் வேண்டும் என்றார் அடிகள். இவ் வாதம் சமயத்தின் அடிப்படையில் பிறந்தது.

## அவர் வேண்டும் அரசியல்

திரு.வி.க.வோ எனில் இவை இரண்டையும் கலந்தார். மார்க்கிஸம் கால் பங்கும், மகாத்மாவின் அரசியல் முக்காற் பங்குமாகக் கலந்ததே திரு.வி.க.வின் அரசியலாகும். அந்த இருபெரு மக்களும் காணாத ஓர் அரசியலை, அதாவது, சமரச சன்மார்க்க சமயத்துடன் கூடிய பொதுவுடைமை என்பதே பெரியார் கண்ட அரசியலாகும்.

இறைவழி நில்லாத அரசைத் திரு.வி.க. ஒப்ப மறுத்துவிடுகிறார். அத்தகைய அரசியல் எத்துணைச் சிறந்தது என்று கூறப்பெறினும், அவ் வரசியலில் வாழ்வோர் தேனும் பாலும் உண்டு தேக்கெறிகின்றனர் என்று கூறினாலும் தமிழ்ப் பெரியார் நம்ப மறுக்கின்றார். இவ்வாறு அரசை அமைப்பவர்கள் தாம் புத்துலகம் காணப் போவதாகவும், பழைய உலகிடைக் காணப்பெறும் கொடுமைகள், துயரங்கள், தீமைகள் ஆகியவை அப் புத்துலகில் இரா என்றும் கூறுகின்றனர். இவ்வாறு கூறுவோர் தாம் எல்லாம் அறிந்ததாக நினைத்துக்கொள்ளும் நினைவிலிருந்துதானே இக்கூற்றுப் பிறக்கின்றது? உண்மைச் சமய வாழ்க்கை இல்லாத மனிதன் வாழ்வு பூரணமாக மலராது என்று நம்பும் பெரியார் இக் கூற்றை எவ்வாறு ஏற்றுக்கொள்வார்? எனவே, இத்தகையவர்கள் அமைக்கும் அரசு இராவணன், கயிலாயம்

எடுக்கப் புகுந்த கதையாய் முடியும் எனக் கூறுகிறார். என்றாலும் இவர்கள் ஒருவேளை ஓர் அரசை நிர்மாணித்தாலும், அது புதிய உலகம் என்னும் பெயரால் அமையும் 'போலி'யாகவே இருக்கும் எனக் கூறுகிறார். இத்தகையோர் அமைக்கும் அரசுபற்றித் துறவு மனப்பான்மை யுடைய பெரியார் இதோ பேசுகிறார்:

"இறைவனை உளங்கொள்ளாமலும் அவனடியில் அடைக்கலம் புகாமலும் ஆணவத்தால் தருக்கிச் செருக்கித் திரியும் சிலர் கூடிப் புது உலகம் அமைக்கப் புகுவது இராவணன் கயிலாயமெடுக்கப் புகுந்த கதையாய் முடியும். ஆணவ எழுச்சியால் உண்மைப் புது உலகம் அமையுமா? அமைதல் அரிது. ஒருவேளை புது உலகம் என்னும் பெயரால் ஒரு 'போலி' தலை காட்டலாம். அது மீண்டும் ஆலத்தால் எரிவதாகும். ஆணவத்தினின்றும் ஆணவ உலகமே தோன்றும்.

ஆணவ அரசியலார் நாடுகள் ஆண்டது போதும்: அவர் கூட்டங்கள் கூடியது போதும்; சட்டங்கள் கோலியது போதும்; திட்டங்கள் வகுத்தது போதும். உலகம் அலுத்துவிட்டது; இப்பொழுது அலமருகிறது; பட்டினியால் துடிக்கிறது; நோயால் வதைகிறது; மரணக் குவியலைக் காண்கிறது; விடுதலை, விடுதலை என்று வீறிடுகிறது. இனி உலகம் பொறாது. ஆணவ அரசியலீர்! இறைவனை மறந்து இயற்கையை நீத்துச் செயற்கை ஆட்சி புரிந்தீர், அதனால் உலகம் துன்பக்கடலில் வீழலாயிற்று. இனி உம்மால் என் செய்தல் கூடும்? உமது கொட்டங் குலைக்க இயற்கை அன்னை முனைந்து நிற்கிறாள். அவள் முன்னே உமது ஆணவம் என் செய்யும்? இவ் வேளையில் உலகைப் புரட்சிக்கு— கொலைப் புரட்சிக்கு—இரத்தப் புரட்சிக்கு இரையாக்காதீர்;

விலகுமின்; ஒதுங்குமின்; ஆட்சியைச் சன்மார்க்கரிடம் ஒப்புவித்து ஒதுங்குமின். யுத்த ஆலம் ஒடுங்கும்; புது உலக அமுதம் எழும்."*

மார்க்கிஸத்தை ஆதரிக்கும் இப் பெரியார் உலகாயத வழி நின்று கண்ட அரசை வெறுக்கின்றார். சன்மார்க்கம் இல்லாத அரசியல் மக்கள் நல்வாழ்வுக்கு இடந்தாராது எனப் பேசுகிறார்:

"சமதர்மம் எற்றுக்கு? எல்லார்க்கும் பொதுவில் நடமிடுஞ் செம்பொருளை உணர்தற்கு என்று அறுதியிட்டுக் கூறலாம். அவ்வுணர்வுக்குப் பயன் படாத சமதர்மம் உலகாயதமாகும். இதுபற்றியே யான் சமதர்மத்தைச் சன்மார்க்முற்ற சமதர்மமென்றும், சன்மார்க்கமற்ற சமதர்மமென்றுஞ் சொல்வது வழக்கம்.

சன்மார்க்கமற்ற சமதர்மம் ஓரளவில் புற அமைதியைக் காப்பதாகும். வாழ்க்கைக்குப் புற அமைதி மட்டும் போதாது. அதற்கு அக அமைதியும் வேண்டும். அக அமைதிக்குச் சன்மார்க்கமுற்ற சமதர்மம் தேவை.

இயற்கை விடுத்துச் செயற்கையிற் செல்லும் அரசுகளால் சமயத்தின் சொரூபமே குன்றியது. சமயத்தின் பெயரால் பல அட்டூழியங்கள் செறிந்தன. அச்செறிவு பொருட் பொதுமையரையும் வேறு சிலரையும் சமயத்தை வெறுத்து மறுக்கச் செய்தது. பொருட் பொதுமையால் அட்டூழியம் அகன்றதும் சமய சொரூபம் தானே மிளிர்வதாகும். இயற்கை, மனித வாழ்க்கையைப் பொருட் பொதுமையளவில் நிறுத்திவிடாது; சமயத்தை வாழ்க்கையில் புணர்த்தியே

* 'ஆலமும் அமுதமும்', பக்கம் 16,17.

தீரும். மனிதனை விளங்கினின்றும் பிரிப்பது சமயம், அத்தகைய சமயத்தை மனிதனும் விடமாட்டான்; சமயமும் அவனை விடாது."*

இத்தகைய ஓர் அரசியலைக் காணவே அவர் முயன்றார். கம்பநாடன் கவிதையிற் காணும்.

'கள்வார் இலாமைப் பொருட்காவலும் இல்லை யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ'

என்ற பாடலையும்

'எல்லோரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லாலே
இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ'

என்ற பாடலையும் 'இந்தியாவும் விடுதலையும்' என்ற நூலில் (பக்கம் 52) எடுத்துக்காட்டிவிட்டு, 'இதனைக் காவிய வருணனை என்று யாரும் இகழ வேண்டா, சந்திர குப்த மௌரியர் காலத்தில் வாழ்ந்த மெகஸ்தனிஸ் 'மக்கள் கதவுகளைப் பூட்டுவதில்லை' என்று குறித்துள்ளதையும் எடுத்துக்காட்டுகிறார்.

எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தல் மார்க்கிஸம். கள்வார் இலாதிருத்தல், அதாவது பொறாமை தானே திருட்டுக்கு அடிப்படை? அந்தப் பொறாமை இல்லாதிருப்பது காந்தியம். வயிற்றுப் பாட்டில் சமன்பாடு செய்வது மார்க்கிஸம். மனப்பாங்கில் ஒருபாற்கோடாது சமன்பாடு எய்துவது காந்தியம். இவை இரண்டும் சேர்ந்ததே தமிழ் முனிவராம் திரு.வி.க. கண்ட அரசியல்.

* 'ஆலமும் அமுதமும்', பக்கம் 20,21.

# 3

# தமிழறிஞர்

## நடையில் மனிதன் வெளிப்பாடு

'ஒரு மனிதனை அறியவேண்டுமாயின் அவன் எழுதும் நடையிலிருந்தே அறிந்துகொள்ள முடியும்' என்பது மேனாட்டு முதுமொழிகளுள் ஒன்று. திரு.வி.க. அவர்களைப் பொறுத்தமட்டில் இம் முதுமொழி முற்றிலும் உண்மை யானதே. ஆனால், கல்வியறிவு பெறாதவர்களும் பேசுகிறார் களே. அந்தப் பேச்சு நடையிலிருந்தும் அவர்களுடைய பண்பாட்டை அறிதல் கூடுமோ என்ற ஐயம் எழலாம். ஓரளவுக்கு இதுவும் உண்மைதான். தாம் சொல்லவந்த கருத்து எத்துணை எளிமையுடையதாயினும் அதனைச் சொல்வதில் பல வகையுண்டு. ஒரு சிலர் எதிரே இருப்பவர்க்கு நன்கு புரியும் வண்ணம் எதனையும் எடுத்து விளக்கும் நடையில் பேசும் சிறப்பை அறிந்துள்ளோம். மற்றுஞ்சிலர் எத்துணைக் கற்றவர்களாயினும் தம் கருத்தைத் தெளிவாக எடுத்துக் கூறும் ஆற்றல் இன்றி இருப்பதையுங் காண்கிறோம். எனவே, ஒருவனுடைய நடையிலிருந்து மனிதரை அறிந்து கொள்ள முடியும் என்பது பொருத்தமான முதுமொழிதான்.

## உள்ளத் தெளிவும் நடையும்

'உள்ளத்தே ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்' என்று கூறினார் கவியரசர். ஒருவருடைய வாக்கு என்பது யாது? பேசும் அல்லது எழுதும் நடையைத் தானே அவ்வாறு குறிக்கிறோம். எனவே, ஒருவருடைய பேச்சு நடை அல்லது எழுத்து நடை என்பது அவர்களுடைய உள்ளத் தெளிவை வெளியிடும் கண்ணாடியாக அமைகிறது என்று அறிய முடிகிறது. எந்த ஒரு பொருளைப்பற்றியும் தெளிந்த அறிவுடையவன் விளக்கிக் கூறுவது போலக் குழப்பமான அறிவுடையவன் விளக்க முடியாது. எனவே, ஒருவன் ஒரு விஷயம் பற்றி விளக்கிக் கூறும் முறையிலிருந்தே அவனுடைய அறிவு அந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் தெளிவு பெற்றிருக்கிறதா, அன்றிக் குழம்பியிருக்கிறதா என்பதைக் காட்டிவிடும். இந்த அடிப்படையில் திரு.வி.க.வின் எழுத்தைக் கண்டால் அவருடைய அறிவின் தெளிவு எத்தகையது என்பதை அறிய முடியும். அரை நூற்றாண்டுக் காலம் தமிழகம் எங்கும் சுற்றித் திரிந்து எல்லாப் பொருள்கள் பற்றியும் பேசிய அப்பெரியார் சிறியவும் பெரியவுமான நூல்கள் ஏறத்தாழ ஐம்பது எழுதியுள்ளார். இவற்றிலிருந்து அவருடைய நடையை நன்கு அறிய முடியும்.

## எழுத்து, பேச்சு நடைகள்

சாதாரணமாக ஓர் அறிஞரைப்பற்றியும் அவருடைய நடையைப்பற்றியும் கூறவேண்டுமாயின், அவருடைய எழுத்து நடை, பேச்சு நடை என்ற இரண்டையும் குறிப்பிட வேண்டும். ஒருவருடைய பேச்செல்லாம் எழுத்தாகிவிடாது. காரணம், பேசும் பொழுது இருக்கும் சூழ்நிலை எழுதும்பொழுது அமைவதில்லை. பேசும்பொழுது மிக வேகமாக ஒரு கருத்தைச் சிந்திக்கவும் சொல்லவும் தேவை ஏற்படு கிறது. மேலும், எதிரே இருந்து கேட்பவர்களுடைய

முகபாவம் முதலியனவும் பேசுபவர்களின் கருத்தை வெளியிடும் முறையை மாற்றிக்கொள்ளத் தூண்டுகிறது. ஒரே விஷயத்தைப் பல வகையாக வெளியிடலாம். கேட்பவர் முகங்களாகிய கண்ணாடியின் வழிக் கூறுபவர்களுடைய சொற்கள் எத்துணை அளவு உட்செல்கிறது என்பதைப் பேசுபவர் அறிய முடிகிறது. புரியவைக்கும் நோக்கம் தலைமை இடத்தைப் பெறுகிறதாகலின், பேச்சு நடையை மாற்றிக் கொண்டாவது கேட்பவர்க்குப் புரியவைக்கும் கடப்பாட்டைப் பேசுபவர் மேற்கொள்கிறார். ஆனால், எழுதுபவர்க்கு, இத் தொல்லை இல்லை. அவசரமாக ஒன்றைச் சொல்லவேண்டிய தேவை அல்லது சூழ்நிலை இல்லை. எழுத்தில் பெரும்பாலும் எழுத்தாளனுடைய தெளிவை ஒட்டி நடை தோன்றும். யாருக்காக இதனை எழுதுகிறோம் என்ற எண்ணம் ஓரளவு இந்த நடையை மாற்றியமைக்கத் தூண்டுகோலாயிருப்பதும் உண்டு. என்றாலும் எழுத்தாளன் நாளாவட்டத்தில் தனக்கென ஒரு நடையை அமைத்துக் கொள்கிறான். எவ்வளவு மாற்றிக் கொள்ள வேண்டும் என்று அவன் நினைத்தாலும் அந்த நடை அவனையும் அறியாமல் வந்துவிடும்.

## எழுத்துநடை மாற்றம்

இவ்வாறு கூறுவதால் எழுத்தாளனுடைய நடையில் மாறுதலே இல்லையோ என்று நினைத்துவிட வேண்டா! எந்த எழுத்தாளனுடைய நடையிலும் மாறுதல் இருந்தே தீரும். அந்த மாறுதல் இரு வகைப்படும். **ஒன்று சொல்லும் விஷயத்திற்கு ஏற்பக் காணப்பெறும் மாற்றம் இது மேலாகக் காணப்பெறும் மாற்றம்.** அடிப்படையில் வேறுபாடு ஒன்றும் இன்றேனும் சொற்களைப் பெய்யுமுறையிலும், சாதாரணச் சொற்கள், அதிகம் பழக்கத்தில் இல்லாத ஆனால்

தேவையான சொற்கள் என்பவற்றைத் தேவைக்கு ஏற்பப் பயன்படுத்துவதால் உண்டாகும். மேற்போக்கான மாறுபாடு முதல் வகையைச் சேர்ந்தது. இரண்டாவது நடை மாறுபாடு மிகவும் ஆழமான முறையில் அமைவது. இந்த மாறுபாடு எழுத்தாளனுடைய வளர்ச்சியை அல்லது தேய்வைக் காட்டுவது. எத்தகைய எழுத்தாளனுக்கும் இவ்வியல்பு பொதுவானது. ஷேக்ஸ்பியர் எந்த நாடகங்களை முதலில் எழுதினார். எவற்றைப் பின்னர் எழுதினார் என்ற ஆராய்ச்சியை இந்த நடை வேறுபாடு ஒன்றைக் கொண்டே முடிவு செய்கிறார்கள் எனின், இதன் வலுவை யாரும் மறுக்க முடியாது. எனவே, ஆசிரியனின் வளர்ச்சியை அவனுடைய நடை காட்டிவிடும் என்பது துணிவு.

## இருவகை எழுத்தாளர்

திரு.வி.க. வெறும் எழுத்தாளரா? அன்றி இலக்கிய அடிப்படையில் விளைந்த எழுந்தாளரா? திரு.வி.க.வைப் பற்றிப் பேசும்போது இத்தகைய வினா பொருளற்றதும் தவறானதுமாக இருப்பினும் தற்கால எழுத்துவகை நோக்குகையில் இவ் வினா அத்துணைப் பொருளற்றது என்று யாரும் தள்ளிவிட முடியாது. இன்று தமிழுலகில் வாழும் எழுத்தாளருள் எத்துணைப் பேர் இலக்கியங் கற்ற எழுத்தாளர்? சராசரியாக இன்றையத் தமிழ் நாட்டில் நூறு எழுத்தாளரையும் மேலை நாடுகளில் ஏதாவதொன்றில் நூறு எழுத்தாளரையும் எடுத்துக்கொண்டு ஒப்புநோக்குவோம். அந் நாட்டில் காணப்பெறும் நூறு எழுத்தாளரில் குறைந்த அளவு எழுபத்தைந்து பேராவது அவர்களுடைய பண்டை இலக்கியங் களைக் கற்றிருப்பர். ஏனைய இருபத்தைந்து பேர் தத்தம் நாட்டில் இக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களை மட்டு மேனும் கற்றிருப்பர். அதிலும், தாம் எந்தத் துறையில் ஈடுபடு கின்றனரோ அத்துறை நூல்களை மிகுதியும் விரும்பிக் கற்றிருப்பர்.

## நம் நாட்டு நிலை

நம்முடைய நாட்டின் இன்றைய எழுத்தாளர்களை எடுத்துக்கொண்டால் முன்னர்க் கூறிய விகிதாசாரம் மாறி இருக்கும். பண்டைய இலக்கியங்களைப் பயிலாதவர்கள் எழுதவே முடியாது என்று யான் கூற வரவில்லை. ஆனால், பழைய இலக்கியங்களில் தோயாது எழுதுபவர்களின் எழுத்தில் ஆழம் இருத்தல் கடினம். நடைமுறையில் ஏற்படும் அனுபவம் ஒன்றைமட்டுமே கொண்டு எழுதும்பொழுது, அந்த எழுத்து, அந்த நேரத்தில் படிப்பவர் மனத்தைக் கவரலாம். காரணம், அந்த எழுத்தின் அடிப்படையிலுள்ள அனுபவத்தின் ஒரு பகுதி படிப்பவரிடமும் உண்டன்றோ? அதனாலேயே அவ்வெழுத்துக் கவர்கிறது. ஆனால் இன்று கிடைக்கின்ற இந்த அனுபவம், பழமை எய்தி அழிந்துவிட்ட பிற்காலத்தில் இந்த அனுபவத்தின் அடிப்படையில் பிறந்த எழுத்தும் வலி இழந்துவிடும். சுருங்கக் கூறினால் காலத்தை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இந்த எழுத்துக்கு இருக்க முடியாது.

## சாகா இலக்கியம்

சிலப்பதிகாரம், இராமாயணம் போன்ற நூல்கள் தோன்றி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகிவிட்டன. அவற்றில் காணப்பெறும் ஊர்களும், இடங்களும் இன்று இல்லை. அவை இருப்பினும் நூல்களிற் கூறப்பெற்ற நிலைக்கு முற்றிலும் மாறுபட்டே காணப்பெறுகின்றன. என்றாலும் மனித சமுதாயம் இன்னும் அவற்றில் இன்பங்காண முடிகிறது. பழமையாகிய இலக்கிய அனுபவத்தில் தோய்ந்து தம் புதிய அனுபவத்தை அதனுடன் குழைத்து ஆக்கப்பெறும் இலக்கியங்கள் காலத்தை வெல்லும் ஆற்றல் படைத்தவை.

## அவர் கற்ற முறை

திரு.வி.க. என்ற எழுத்தாளர் பழைய இலக்கியங்களில் தோய்ந்த எழுத்தாளர். அவருடைய கல்வி முறையே அலாதியானது. 'கற்றலில் கேட்டலே நன்று' என்ற முதுமொழி

அவரளவில் முற்றிலும் உண்மையானது. கதிரை வேலனாரிடம் தணிகைப் புராணமும், கந்தபுராணமும் தொடக்கத்தில் கேட்டதாக வாழ்க்கைக் குறிப்பில் (பக்கம் 96) குறிக்கிறார். இதனை ஏதோ புராணப் பிரசங்கம் என்று இக்காலத்தார் நினைப்பதுபோல் நினைத்துவிடக் கூடாதென்று கருதிய பெரியார் 'இரண்டும் வெறும் புராணப் பிரசங்க மேடைகளாயிரா. அவை கலைக் கழகங்களாகத் திகழும். கதிரைவேலரின் சொன்மாரி வெள்ளத்தில் இலக்கியம். இலக்கணம், தர்க்கம், சாத்திரம் முதலியன தேங்கும். அத் தேக்கம் மாணாக்கர்க்குக் கலை விருந்தாகும்' (பக்கம் 96) என்று எழுதுகிறார்.

## கல்வி போதனை இருவகை

பழங்காலத்தில் கல்வி இரு வகைகளில் போதிக்கப் பெற்றது. தொல்காப்பியத்தில் வல்லார் ஒருவர் இருப்பார். அவர் தம்மிடம் வரும் மாணாக்கர்க்கு அந்நூலை ஐயந்திரிபு அறக் கற்பிப்பார். ஆனால், இலக்கிய மணங்கமழாது அவருடைய போதனைகளில் உரையாசிரியர்கள் மேற்கோ ளாகக் காட்டியுள்ள பாடல்களை மட்டுமே அவ்வாசிரியர் கூறுவார். அதுவும் அங்குக் கூறப்பெற்ற இலக்கணத்திற்கு இந்த மேற்கோள் எம்முறையில் பொருந்துவதாகும் என்பதை மட்டும் அவர் குறித்துச் செல்வார். மற்றொரு வகைக் கல்வி கதிரைவேற்பிள்ளை போன்றவர்களிடம் சொற்பொழிவு கேட்பதாகும். இத்தகைய சொற்பொழிவுகளில் பெரியார வர்கள் கூறியபடி இலக்கணம், இலக்கியம், தருக்கம், சாத்திரம் ஆகியவை இடம் பெறும். ஆணவ மலத்தின் இலக்கணத்தை சிவஞானபோத சூத்திரங் கொண்டு மட்டும் விளக்கஞ் செய்யும்பொழுது அது சாத்திரப் பாடமாகிறது. ஆனால், அடியார்கள் வாழ்க்கையில் வைத்துப் பேசப்பெறும் பொழுது இரண்டையும் தெரிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது.

நம்முடைய பெரியார் இந்த இரண்டு வகைக் கல்வியையும் நிரம்பப்பெற்றார். மயிலை மகாவித்துவான் தணிகாசல முதலியாரிடம் தாம் பாடங்கேட்ட வரலாற்றை அவரே கூறியுள்ளது அறிய வேண்டுவது:

"அங்கே மயிலை மகாவித்வான் தணிகாசல முதலியார் வந்தார். அவர் என்னை நோக்கி, 'கதிரை வேற்பிள்ளை காலமான பின்னர் எவரிடத்தில் பாடங் கேட்டீர்?' என்று வினவினார். அங்கிருந்த பால சுந்தர முதலியார் அன்று நிகழ்ந்ததை விளக்கிக் கூறினர். மயிலைக் கிழவர் வெகுண்டு, 'சூரியனார் கோயில் சாமியார் எற்றுக்கு? இந்தப் பாவியினிடம் வரலா காதா?' என்று கூறினர், அக் கூவல் எய்ப்பினில் வைப்பாயிற்று 'அதிர்ஷ்டம் பிறந்தது' என்று எண்ணி, 'நாளை தங்கள் வீட்டுக்கு வருவேன்' என்று பதிலிறுத்த வீடு சேர்ந்தேன். மகிழ்ச்சி பொங்கிய வண்ணமிருந்தது. அடுத்தநாள் தணிகாசல முதலியார் வீட்டுக்குப் போனேன்; அவரைக் கண்டேன்; வணக்கஞ் செய்தேன். 'என்னிடத்தில் படித்தலாகாது என்ற எண்ணமா' என்று அவர் கேட்டார். 'கதிரைவேற் பிள்ளையின் பருவுடல் மறைந்த பின்னைத் தங்கள் நினைவே எனக்கு உற்றது. தங்களிடத்தில் அணுக முடியாதென்று கேள்விப்பட்டேன்; அதனால் தாங் களை யான் நாடவில்லை' என்றேன். கிழவர், 'அப்படியா! என்னைக் கோபி என்று சிலர் சொல்வ துண்டு. சிற்றிலக்கணமும் பயிலாது சித்தாந்த சாத்திரங் கேட்க வருவோரைக் கண்டதும் கோபம் பிறவாது என்ன பிறக்கும்? உம்மையுஞ் சோதனை செய்து, நிலைமையுணர்ந்து, எங்கிருந்து பாடந் தொடங்க வேண்டுமோ அங்கிருந்தே தொடங்குவேன், எவரை யும் திடீரென மேலே பறக்க யான் விடமாட்டேன்' என்றார்; பின்னே தாம் ஆறுமுக நாவலர்பால் தமிழ் பயின்ற விதங்களையெல்லாம் எடுத்துக் கூறி,

நன்னூலில் சில கேள்விகள் கேட்கப் புகுந்தார். எனக்குத் தெரிந்த அளவில் பதில் விடுத்தேன். திருவிளையாடல் நாட்டுப் படலத்தில் சில பாக்கட்கு உரை கேட்டார். உரை சொன்னேன். இலக்கிய இலக்கணங்களை யான் முறையாகப் பயில வேண்டுவ தில்லை என்றும், அவ்வப்போது ஆங்காங்கே உறும் ஐயப்பாடுகளைக் கேட்டுத் தெளிந்து கொள்வது நலன் என்றும், சாத்திரம் முறையாகப் பயிலுதல் வேண்டும் என்றும். இப்பொழுது 'திருவருட்பயன் தொடங்குதல் நலம்' என்றும் வாய்மலர்ந்தார்."*

## இதன் சிறப்பு

இதிலிருந்து பெறப்படுவது ஒன்றுண்டு. அக்கால நிலையில் முறையாகத் தமிழ் பயிலுவதற்கு இம்முறை கையாளப் பெற்றது என்பதேயாம். ஆனால், திரு.வி.க.வைப் போன்று கூர்மையும் நுண்மையும் பொருந்திய இயற்கை அறிவுடையாரை வீணாக எல்லாவற்றையும் படிக்கச் சொல்லும் பழக்கமும் இல்லை என்று தெரிகிறது. இந்த முறையில் பல்வேறு பெரியார்களிடம் முறையாகத் தமிழ்க் கல்வி பயின்றமையின், சிலர் அஞ்சுவதுபோலப் பரந்த நோக்கம் இல்லாமற் போய்விடவில்லை நம் பெரியாருக்கு. இன்னுங் கூறப்போனால் தற்காலத்தில் பலரைப் பற்றியது போல ஒருபாற்கோடிய பேதைமை இப் பெரியாரைத் தீண்டவில்லை. தமிழ் அன்புக்குப் பதிலாக வெறி கொண்டு அலையவும் இல்லை; தமிழை ஒதுக்கி ஆங்கில மோகம் கொண்டு அலையவுமில்லை.

## இவர் தனித்தன்மை

இத்துணை ஆசிரியர்களிடம் கற்றும் கேட்டும் பயின்ற நம் பெரியார் பலரும் செய்யாத ஒன்றையும் செய்தார்.

* 'வாழ்க்கைக் குறிப்புகள்', பக்கம் 99, 100.

முன்னர்க் கூறிய பெரியார்களிடம் திரு.வி.க. மட்டுமா கற்றார். இன்னும் பலரும் கற்றிருக்கலாமே; அவர்கள் யார் என்று அறியக்கூட வாய்ப்பில்லாமல் அவர்கள் பெயர்கள் மறைந்துவிட்டன. திரு.வி.க. இல்லையேல் மயிலை மகாவித்து வான் பெயர்கூட இன்று நம்மால் அறியப் படாமற் போயிருக் கலாம். எனவே, பலரும் கற்ற ஓர் ஆசிரியரிடம் இவருங் கற்றார் என்றால் இவரிடம் இருந்த தனித்தன்மை யாது? அதுவே சிந்திக்கும் பழக்கம்.

## சிந்திக்கும் பழக்கம்

திரு.வி.க.வின் உடன் கற்ற பலருக்கும் இல்லாத ஒரு பழக்கம் இது. அவர்கள் கற்றார்கள். கிளிப் பிள்ளைகளைப் போல. பின்னர் தாம் கற்றதைப் பிறருக்கு அப்படியே ஒப்பித்தார்கள். இந்த முறையில்தான் நம் நாட்டில் இன்றுங் கல்வி போதிக்கப் பெற்று வருகிறது. சிந்திக்கும் பழக்கத்தை மாணாக்கரிடம் தூண்டும் இயல்பு ஆசிரியர்களிடம் இல்லை; காரணம் அவர்கட்கும் அப் பழக்கம் இன்மையேயாகும். மயிலை மகாவித்துவானிடம் கற்ற திரு.வி.க.செவி வாயாக, நெஞ்சு களனாக, இருவென இருந்து, சொல் எனச் சொல்லித்தான் கற்றார். எனினும், அவரிடம் நேரே பயிலாத நேரத்தில் தாமே சிந்திக்கும் பழக்கத்தையும் ஆற்றலையும் பெற்றார். இதனால்தான் ஒரு தமிழறிஞர் நுழைய நினையாத துறைகளில் எல்லாம் அவர் நுழைந்தார்.

## அகிலம் ஒரு கழகம்

பெரியாரவர்கள் நூல்களின் மூலம் கற்றவற்றைக் காட்டிலும் இயற்கையின் மூலம் தாம் அதிகம் கற்றதாக அவரே கூறுகிறார். இயற்கை, காவியம், ஓவியம், இசை என்பன அவரைப் பொறுத்தமட்டில் மகிழ்ச்சியை மட்டும் ஊட்டாமல் மனத்தை விரிவடையச் செய்தன. கல்வியின் பயன் மன விரிவேயாகும். ஆனால், பெரும்பான்மை யானவர்கள் பெறும் கல்வி மனத்தில் அனுபவ விரிவை

உண்டாக்குவதில்லை. வெறும் ஏட்டுச் சுரைக்காயாகவே நின்று விடுகிறது. 'இயற்கை உலகே தொல்காப்பியமாகத் தோன்றுகிறது. அகிலம் ஒரு பெருங் கழகமாகக் காணப் படுகிறது' (பக்கம் 119) என்று அவரே குறிக்கிறார்.

## இயற்கைப் பள்ளியில்

இத்தகைய மன விரிவைப் பெறுவதுதான் புலமையே தவிரச் சொல்லதிகாரத்தை எழுத்தெண்ணிப் படித்தேன் என்று இறுமாந்து திரிவது புலமையன்று; புல்லறிவாண் மையே. வேண்டுமானபொழுது எடுத்துப் பார்த்துக் கொள் வதற்குத் தொல்காப்பியச் சொல்லதிகாரப் பிரதிகள் கிடைக்கும் இற்றை நாளில் எழுத்தெண்ணிப் படித்ததாகக் கூறுவது வியப்பே! ஆனால், இவ்வாறு படித்ததாகக் கூறுபவர்கள் அதிற் கூறப்பெற்றதை விளங்கிக் கொண்டார் களா என்றால் அதுதான் ஐயத்திற்குரியது. திரு.வி.க. அவர்கள் இயற்கைப் பள்ளியில் பயின்ற வரலாற்றை இதோ கூறுகிறார்:

> "ஞாயிற்றை நோக்குகிறேன். ஐயங்கள் எழுகின்றன. அவற்றை எப்படிக் களைந்து கொள்வது? ஞாயிற்றையே நோக்கி, 'ஞாயிற்றே! நீ எழுவதும் மறைவதும் உண்மையா? காலையிலும் மாலையிலுஞ் சிவந்தகோலம் தாங்குவதென்னை? மற்ற வேளைகளில் வேறு கோலம் தாங்குவதென்னை? உன்னிடத்தில் ஏழு நிறம் அமைவானேன்? எட்டு ஏன் அமையவில்லை? நீ எற்றுக்கு ஒளி கால்கிறாய்? ஒளி உன்னுடையதா? பிறருடையதா?' என்றே கேட்பேன். எளிதில் விடைகள் கிடைப்பதில்லை. ஞாயிற்றை உன்னி உன்னி அதில் மூழ்கி ஒன்றுவேன்; விடைகள் கிடைக்கும்."

## தாமே தமக்கு ஆசிரியர்

இந்தச் சிறிய பத்தியில் அவருடைய அறிவின் வளர்ச்சியை அறிய முடிகிறது. 'ஞாயிற்றே! எழுவதும் மறைவதும் உண்மையா? காலையிலும் மாலையிலும் சிவந்த

கோலம் தாங்குவதென்னை? உன்னிடத்தில் ஏழு நிறம் அமைவானேன்?' என்ற இந்த வினாக்களை எழுப்பிக் கொள் வதன்மூலம் புவியியல், வானியல், பௌதிகவியல் ஆகிய மூன்று துறைகளிலும் மனம் சிந்திக்கத்தக்க சூழ்நிலை ஏற்படுகிறது. ஏதோ ஒரு நூலை மாத்திரம் பிறர் கூறும் முறையில் கேட்டு அமைதியடைகின்ற மனமன்று திரு.வி.க.விற்கு, அவரையொத்த ஓர் அறிஞரை அன்றும் இன்றும் காண்டல் அரிது. இந்த வினாக்களை ஆசிரியர்கள் மூலமே அவர் அறிந்து கொள்ள வேண்டும் என்று நினைந்திருப்பின் மேலே கூறியாங்கு ஒரு புவி இயலாசிரியர், வானியலாசியர், பௌதிகவியலாசிரியர் ஆகிய மூவரிடம் சென்றிருக்க நேரிடும். இம் மூவரும் தத்தம் கலையறிவே உயர்ந்தது என்ற குருட்டு நம்பிக்கையுடன் தத்தங் கருத்துகளை மட்டும் கூறுவரேயன்றி இம் மூன்றியல்புகளும் கொண்டது ஒரு ஞாயிறுதானே என்பதை மறந்து விடுகின்றனர். தனி மரத்தைப் பெரிதென மதித்துக் காட்டை மறப்பதும், காட்டைப் பெரிதென மதித்துத் தனி மரத்தை மறப்பதும் தவறேயாகும். இவ்விரு வகைப் பிழையையும் செய்யவில்லை திரு.வி.க. இதனால்தான் அவருடைய அறிவும் வளர்ந்தது. மனமும் விரிந்தது.

இத்தகைய இயற்கைக் கல்வியால் தாம் பெற்ற பயனை இதோ பெரியார் குறிக்கிறார்:

> "இம் முறையில் இயற்கைக் கல்வி பெருகுகிறது. அக் கல்வி பெருகப் பெருக என்ன தெரிகிறது? இயற்கைக் கூறுகளெல்லாம் ஒன்றன் விரிவு என்பது தெரிகிறது. அதனால் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்னும் பொதுமை விளக்கமுறுகிறது பொதுமை—அறம்—அந்தண்மை—எல்லாம் ஒன்றே. பொதுமை இயற்கை நெறி. இயற்கை நெறியே தமிழ் நெறி. இந்நெறியில் நின்றொழுகும் பேறு ஓரளவிலாதல் யான்

அடைந்தமை குறித்து மகிழ்வெய்துகிறேன். அதைக் கூட்டியது எதுவோ அதை வாழ்த்துகிறேன்; வணங்கு கிறேன்.

தமிழ் நெறி என்பதைத் தமிழர்க்குரிய—தமிழ் நாட்டுக்குரிய நெறி என்று யான் கொள்கிறேனில்லை. அதை யான் பொதுநெறியாக—அறமாக— அந்தண் மையாகவே கொள்கிறேன்.

தமிழ் நாகரிகம் மிகவுந் தொன்மை வாய்ந்தது: அந் நாகரிகம் பண்பட்டது; தனது நிலைமையில் முழுமை எய்தியது. பண்பட்ட நாகரிகத்தின் அறிகுறி என்ன? அந்தண்மையே. அந்தண்மையற்ற நாகரிகம் நாகரிகமாகாது. திருவள்ளுவர் நாகரிகம் என்ற சொல்லைக் கண்ணோட்டத்தில் பெய்திருப்பது கருதற் பாலது. 'பெயக்கண்டு நஞ்சுண்டமைவர் நயத்தக்க— நாகரிகம் வேண்டுபவர்' என வரூஉம் அவர்தம் வாய்மொழியை உற்று நோக்க நோக்க நாகரிகத்தின் இயல் இனிது விளங்கும். முதிர்ந்த பண்பட்ட நாகரிகத் தினின்றும் பொதுமை அறமே முகிழ்க்கும். பொது மையே நாகரிகத்தின் அறிகுறி.

நாகரிகத்திற் சிறந்த பழந்தமிழ் அறிஞர் தாங்கண்ட பொதுமையைத் தமது தாய் மொழியில் வெளியிட்டனர். பொதுமை அறமாகிய அந்தண்மை தமிழ்மொழி வாயிலாக வெளிவந்தமையால் அதைத் தமிழர்க்கே உரியதென்றும், தமிழ் நாட்டுக்கே உரியதென்றுங் கொள்வது அறமாகாது.

இயற்கைத் தெய்வப் புலவர் யாண்டில்லை? எங்கும் இருக்கின்றனர். அவர்தம் உணர்வில் பொதுமை செறிவது இயல்பு. அவர் அவர், தாம் தாம் கண்ட பொதுமையைத் தம் தம் மொழியிலே இறக்குகின்றனர். அதனால் அவரவர் கண்ட

பொதுமை அவரவர் மொழி வழங்கும் நாடுகளுக்கே உரியதென்று கொள்வது பொதுமையைச் சிறைப் படுத்துவதாகும்.

திருவள்ளுவர் கொள்கை அவரது தாய்மொழி வாயிலாக வெளிவந்தது. அதனால் அவர் கொள்கை தமிழ்நாட்டவர்க்கே உரியது என்று சொல்வது நியாயமாகுமா? ஷெல்லியின் கருத்தை இங்கிலீஷ் நாட்டளவில் கட்டுதல் முறையாகுமா?

அணித்தே ஒரு நூலுக்கு யான் அணிந்துரை புனைந்தேன். அந்நூல் 'யான் பெற்ற இன்பம்' என்பது. அது தமிழறிஞர் மு. அருணாசலனாரால் யாக்கப் பட்டது அவ்வணிந்துரையை,

'தமிழர் எது? மொழியா? அன்று; நாடா அன்று; பின்னை எது? வாழ்க்கை. தமிழ் வாழ்க்கை இயற்கை யோடியைந்து ஒழுகுவது.

இயற்கையோடியைந்த ஒழுகுவோர் எவராயினு மாக அவர் தமிழ் வாழ்க்கையினரே ஆவர். திருவள்ளுவர், ஷெல்லி, தாகூர் முதலியோர் தமிழ் வாழ்க்கையினர் என்று கூறல் மிகையாகாது.'

என்று தோற்றுவாய் செய்துள்ளேன். ஆகவே, எனது தமிழ் நெறி, 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்ற கொள்கை யுடையது. அதுவே, பொதுமை—அறம்—அந்தண்மை—இயற்கை நெறி. இப் பொருளுக்கு எம்மொழிப் போர்வை யிட்டால் என்ன?

இயற்கை நெறியில் நின்றொழுகல் வேண்டு மென்று யான் வலிந்து முயன்றதே இல்லை. அதுதானே படிப்படியே கூடிவருகிறது. இயற்கைநெறி, ஒழுக்க வாழ்க்கையாகும். அவ் வாழ்க்கை அமைதிப் பெண்ணை மணஞ் செய்விக்கும். அம் மணம் குழந்தை

மனத்தை ஈனும். குழந்தை மனத்தில் இயற்கையின் உள்ளுறை புலனாகும்.

இயற்கையின் உள்ளுறையை விளக்கவல்லது இயற்கைக் கல்வி என்பது அநுபவத்தில் உணரத்தக்கது. அதற்குச் சொற்பெருக்கு வேண்டுவதில்லை. இயற்கைக் கல்வி உலகெங்கும் பெருகுதல் வேண்டுமென்பது எனது வேட்கை. ஏட்டுக் கல்வியை எத்துணை நாள் கட்டி அழுகுவது? ஏட்டுக் கல்வி என் செய்யும்? ஏட்டளவில் நின்றுகொண்டிருக்கும். ஏட்டுக் கல்வி இயற்கைக் கல்வியாதல் வேண்டும். இதற்குரிய எண்ணம் தேவை. எண்ணம் என்ன செய்யாது? எல்லாஞ் செய்யும். இயற்கைக் கல்வி எவ்வுயிரும் பொது, பொது என்னும் உணர்வைப் பிறப்பிக்கும்; உணர்வு செயலாகும்; செயல் தொண்டாகும்.

இயற்கைக் கல்வி என்னைத் தொண்டனாக் கியது; தமிழ்த் தொண்டனாக்கியது."*

## இயற்கைக் கல்யின் பயன்

இத்துணைச் சிறந்த முறையில் இயற்கை அன்னையின் அருளால் கல்வி பெற்றமையால்தான் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பாடலின் பொருளை அவர் உணர முடிந்தது. உயர்நிலை வகுப்புப் படிக்கும் மாணாக்கன் கூட இந்த வரிக்குப் பொருள் கூறிவிடுவானே! அப்படி இருக்கத் திரு.வி.க. இத்துணைப் பாடுபட வேண்டுமா இதன் பொருள் உணர? என்று சிலர் நினையலாம். அந்த வரிகளின் பொருளை, அதாவது, சொற் பொருளை, அகராதிப் பொருளை, இலக்கணவழி அமைந்த சொற்பொருளை நாமும் அறிவோம். ஆனால், இந்த நான்கு சொற்களின் பொருளை, உட்கருத்தை, அவை காட்டும் அனுபவ உலகை அவை

* 'வாழ்க்கைக் குறிப்புகள்', ப. 123–126 வரை.

அறிவிக்கும் சகோதரத்துவப் பாடத்தை அறிந்தவர் சிலரே! உணர்ந்தவர் மிகச் சிலரே! வாழ்வை அது அமைந்த நிலையில் ஏற்றுக்கொண்டு மனித நிலையினின்றும் மீறித் தெய்வநிலைக்கு ஆளாயினார் விரல்விட்டு எண்ணக் கூடியவர்களேயாவர், 'யாதும் ஊரே' என்ற இவ்வரிகளைக் கற்கும் நாம் அவை ஒரு கவிதையின் ஓரடி என்றும், அக் கவிதை தமிழ் மொழியில் ஆயது என்றும், அத் தமிழ் வழங்கும் நாடு எது என்றும் அறிவோம். ஆனால், இயற்கைக் கல்வி பயின்ற திரு.வி.க. போன்றவர்கட்கு இவ்வடி 'தமிழ் எது? மொழியா? அன்று; நாடா? அன்று; பின்னை எது? வாழ்க்கை' என்றும், 'திருவள்ளுவர், ஷெல்லி, தாகூர் முதலியோர் தமிழ் வாழ்க்கையினர் என்று கூறல் மிகையாகாது' (பக்கம் 125) என்றும் பொருள் கூறுமாறு உணர்வை நல்கியது; அதாவது, பரந்து விரிந்துள்ள மனநிலையை நல்கியது.

இத்தகைய மனநிலையுடையார் காணுகின்ற காட்சியெல்லாம் வேறாகவே இருக்கும்; இவர்கள் பேசுகின்ற பேச்செல்லாம் வேறாகவே இருக்கும்.

## மொழி சிறந்த கருவியா? உரைநடை

இனி இப் பெரியாரின் உரைநடைபற்றி முதலிற் காண்போம். திரு.வி.க.வின் உரைநடை தமிழ் இலக்கிய உலகில் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கியதை யாரும் மறுத்தல் இயலாது. அவருக்கு முன்னர் இருந்த தமிழ் நடையுடன் அவருடைய நடையை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுதுதான் எவ்வளவு பெரிய புரட்சியை அவர் செய்துள்ளார் என்பது விளங்கும். ஒருவருடைய கருத்தைத் தெரிவிப்பதற்குத்தான் மொழியைக் கையாள்கின்றோம். மனிதன் பேச்சை அறிவதற்கு முன்னர் சைகை, குறிப்பு என்பவற்றால்தான் தன் கருத்தை அடுத்தவருக்கு அறிவித்து வந்தான். மொழியை அறிந்த பிறகுதான் அவனுடைய அறிவு

பெருகத் தொடங்கிற்று. எவ்வளவு சிறப்புடையது என்று மொழியை வியந்து பாராட்டினாலும், 'சொல் என்பது கருத்தை வெளியிடுவதற்கு முற்றிலும் ஏற்ற கருவி' என்று கூறிவிட முடியாது.

## கவிதை இலக்கணம்

பல சமயங்களில் ஆராத் துயரத்தையும், எல்லையிலா மகிழ்ச்சியையும் வெளியிட முகக்குறிப்பு அல்லது 'பாவம்' உதவுவதுபோல் நூறு சொற்களும் பயன்படுவதில்லை என்பது நாம் அறிந்த ஒன்றுதான். எத்துணை ஏற்பில்லாத கருவியாயினும் மனிதன் சொல்லைப் பயன்படுத்தித்தான் பிறருக்குத் தன் கருத்தை அறிவித்து வருகின்றான். சிறந்த கவிதையைப்பற்றிக் கூறவந்த மாத்யூ ஆர்னால்ட் என்ற திறனாய்வாளர், 'சிறந்த சொற்களைச் சிறந்த வரிசையில் பயன்படுத்துவதே சிறந்த கவிதையின் இலக்கணம்' என்று கூறினார். இந்த இலக்கணம் கவிதைக்கு மட்டுமல்லாமல் உரைநடைக்கும் ஓரளவு பயன்படும் என்பதை மனத்துட் கொள்ள வேண்டும்.

## தமிழ் உரைநடை வளர்ச்சி

இந்த அடிப்படையில் தமிழில் உரைநடை வளர்ந்த வரலாற்றைப் பார்த்தால் அது முற்றிலும் செம்மையடைந்து விட்டது என்று கூற முடியாத நிலைமையில் தான் உள்ளது. தமிழில் கவிதை சிறப்படைந்தது போல உரைநடை வளம் பெறவில்லை என்பது தெளிவு. காரணம், சென்ற இரு நூற்றாண்டுகளாகத்தான் உரைநடை எழுதும் பழக்கம் தமிழ்நாட்டில் வளர்ந்து வருகிறது. அதிலும் முற்பகுதியில் பாதிரிமார்கள் தம்முடைய சமயப் பிரசாரத்திற்கென்றே உரைநடையை வளர்க்கத் தொடங்கினர்.

## உரைநடையின் போக்கு

அதற்கு முன்னர்த் தோன்றிய தமிழ் இலக்கிய உரையாசிரியர்கள் அனைவரும் கவிதை முறையிலேயே உரைநடையையும் எழுதிச் சென்றனர். சாதாரண மனிதனுடைய பேச்சு வழக்கில் உரைநடை அமைய வேண்டும் என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் தோன்றவே இல்லை. சென்ற நூற்றாண்டின் இறுதியில் நீளமாக உரைநடை எழுதிய வள்ளலார்தாம் ஓரளவு சாதாரண மனிதனை மனத்துட்கொண்டு எழுதினார். பின்னர்ப் புதினங்கள், சிறுகதைகள் எழுதுபவர்களால்தான் உரைநடை வலுப்பெற்றது என்பதில் ஐயமில்லை. ஆனால், இந்நிலையில் உரைநடையாளரிடம் இரண்டு பிரிவுகள் தோன்றின. வடமொழியைத் தாராளமாகக் கலந்து எழுதுவோர் ஒருபுறம்; தனித்தமிழிலேயே எழுதுவோர் ஒருபுறம். இந்த இரு கட்சியினரிடையேயும் அதீதவாதிகள் உண்டு. தமிழையும் வடமொழியையும் சரிக்குச் சரி கலப்பவர்களிலிருந்து வழக்கிலுள்ள சொற்களை மட்டும் பயன்படுத்துபவர்கள் வரை அந்தக் கட்சியில் உண்டு; எந்தச் சொல்லையும் தமிழ் என்று சாதிப்பவர்களிலிருந்து அனைவருக்கும் புரிய வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதுபவர்வரை இந்தக் கட்சியிலும் உண்டு. ஆனால், பெரும்பாலான உரைநடை யாளர் ஒன்றை மறந்தே விட்டிருந்தனர். அதுதான் தாம் ஏன் எழுதுகிறோம் என்ற வினாவிற்கு விடையாகும். தம்முடைய புலமையை உரைநடை மூலம் வெளிப்படுத்த முயன்றன ரேயன்றிப் படிப்பவர்கட்கு அது பயன்பட வேண்டும் என்ற நோக்கம் இருந்ததாகக் கூறமுடியவில்லை. படிப்பவர்களும், இது புரியவில்லை என்று கூறினால் எங்கே தம்மைக் கல்வியிற் குறைந்தவர் என்று கருதிவிடுவார்களோ என்ற அச்சத்தால் புரியாவிடினும் புரிந்ததாகவே நடித்தனர். சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த வள்ளலாருடைய உரைநடையில் ஓர் எளிமையைக் காண முடியும். மிக உயர்ந்த

தத்துவக் கருத்துகளைக் கூட அவர் மிக எளிய நடையில் எழுதினார். சாகா நிலைபற்றிய அவருடைய குறிப்புகளி லிருந்து ஒரு பத்தியைத் தருகிறேன்;

"இத் தேகத்தை நித்திய தேகமாக்கி எக் காலத்துமழியாத பேரின்ப சித்திப் பெருவாழ்வைப் பெற்று வாழ்தல் எதனாற் பெறுதல் கூடுமென்று அறியத் தொடங்கிய தருணத்து 'வேறு எந்த வழியாலும் பெறுதல் கூடாது. எல்லாமுடைய கடவுளது திருவருட் சுதந்திரமொன்றாலே பெறுதல் கூடும்' என்று தேவரீர் திருவருளால் அறிவிக்க உள்ளபடியறிந்தேன். பின்னர்த் திருவருட் சுதந்திரம் நமக்கு எந்த வழியாற் கிடைக்கு மென்று அறியத் தொடங்கிய தருணத்து 'எனது யானென்னும் தேகசுதந்திரம், போகசுதந்திரம், ஜீவ சுதந்திரம் என்னும் மூவகைச் சுதந்திரங்களும் நீங்கிய விடத்தே கிடைக்கும்' என்று தேவரீர் திருவருளால் அறிவிக்க உள்ளபடி அறிந்தேன். ஆகலின் எனது சுதந்திரமாகக் கொண்டிருந்த தேகசுதந்திரத்தையும், போகசுதந்திரத்தையும், ஜீவசுதந்திரத்தையும் தேவரீர் திருவருட்கே சர்வ சுதந்திரமாகக் கொடுத்துவிட்டேன். கொடுத்த தருணத்தே இத் தேகமும், ஜீவனும், போகப் பொருள்களும் சர்வசுதந்திரராகிய கடவுள் பெருங் கருணையாற் கொடுக்கப்பெற்றனவன்றி, நமது சுதந் திரத்தாற் பெற்றனவல்ல வென்னும் உண்மையை அருளாலறிவிக்கவும் அறிந்துகொண்டேன். இனி இத்தேகத்தினிடத்தும், ஜீவனிடத்தும், போகப் பொருள் களிடத்தும் தேவரீர் திருவருட் சாட்சியாக எனக்கு எவ்விதத்தும் யாதோர் சுதந்திரத் தோற்றமும் தோற்றமாட்டாது. தேவரீர் திருவருட் சுதந்திரத்தை என்னிடத்தே வைத்தருளி, மரணம், பிணி, மூப்பு, பயம், துன்பம் முதலிய அவத்தைகளெல்லாவற்றையும் தவிர்த்து இத்தேகத்தையே நித்திய தேகமாக்கி,

எக்காலத்தும் அழியாத பேரின்ப சித்திப் பெரு வாழ்வில் என்னை வாழ்வித்தல் வேண்டும் இத் தேகத்தைப் பெற்ற எல்லாச் சீவர்களுக்கும் எனக் கறிவித்த வண்ணமே அறிவித்து, அவரவர்களையும் உரிமையுடையவர்களாக்கி, வாழ்வித்தல் வேண்டும்".*

இதனையடுத்த வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் எழுதிய 'மதிவாணன்' என்ற நூலிலிருந்து ஒரு பகுதியையும் காண்டல் வேண்டும்:

"உடனே கன்னி நாடனும் பொன்னி நாடனை நோக்கி 'மதிவாண! முன்னரே நுந்தையார் தஞ்சை வாணரும் அமைச்சர் வாய்மையாளரும் நீ எம்மாலீண்டை வருமாறு அழைக்கப்பட்டதன் காரணம் இன்னதென்றுரைத்திருப்பர். அன்றியுமிப் போழ்தத்து ஈண்டன் நிகழ்வுறுமவற்றினும் அஃதின்ன தென்றுணர்ந்திருப்பையெனினும் அதனைக் குறித்து நேரே யாமும் சிறிது பேசுதல் கருதி நின்னை யழைத்தனம்."

திரு.வி.க. காலத்தே வாழ்ந்த மறைமலையடிகளாரின் உரைநடையையும் ஒரு சிறிது காண்டல் வேண்டும்:

"இங்ஙனமாக நங் கட்புலனெதிரே இயங்கா நின்று மாப்பேருலகங்களும், இவை தமக்கு இடனாய் எல்லையின்றி எங்கும் விரிந்து இலங்கா நின்ற நுண்ணிய வான் வெளியும் எல்லாம், எங்கும் மங்கா இலகு பேரொளியுடன் சுடர் விரிந்து துலங்கக் காண்டலால் இவ்வொளியின் எல்லையற்ற பரப்பே எல்லையின்றி எங்கும் விரவி விளங்காநின்ற இறை வன்றன் திருவுருவமாகப் பண்டைத் தமிழராற் கருதி வழுத்தப்படுவதாயிற்று."—தமிழர் மதம்.

* 'இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்', பக்கம் 98.

இதனையடுத்துத் தமிழ்க் கொலைக்கு ஓர் உதாரணம் தருகிறேன்.

1944ஆம் ஆண்டில் பத்திரிகை ஆசிரியர் ஒருவர் தம் பத்திரிகைக்குக் கட்டுரை எழுதி அனுப்புபவர்கட்கு எழுதியனுப்பிய குறிப்பாகும் இது என்று மு. அருணாசலம் அவர்கள் 'இன்றைய தமிழ் வசன நடை' (பக்கம் 53) என்ற நூலில் தந்துள்ளதைக் கீழே தருகிறேன்:

> "வ்யாஸம் எழுதுபவர்களுக்கு விஜ்ஞாபநம். அநேக வித்வான்கள் மகத்தான க்ருபையுடன் வ்யாஸங்களை அனுப்பி அவைகளை உடனே பத்ரிகையில் ப்ரசுரம் செய்யவேண்டுமென்று நியமிக் கிறார்கள். பத்ரிகையில் இடம் ஸங்குசிதமாக இருக்கிற படியால் அவர்களுடைய நியமநத்தை அவர்கள் இஷ்டப் பிரகாரம் நிறைவேற்ற சாத்யப்படாமல் இருக் கிறது. அவசர ஸம்ப்ராப்தமாகும்பொழுது அவைகள் யதார்ஹம் ப்ரசுரம் செய்யப்படும். அப்படிச் செய்வதால் ஸம்பவிக்கும் கால விளம்பத்தை அந்த வித்வான்கள் க்ஷமிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக் கிறோம்.—ஸம்பாதகர்."

இதை எடுத்துக்காட்டிய திரு அருணாசலம் அதே நடையில், "ஆம்! இதைப் படியாநிற்கும் மஹநீயர்கள் தம்மை க்ஷமிக்க வேண்டுமென்று நாமும் ப்ரார்த்திருக்கிறோம்' என்று கூறியுள்ளார். தமிழ் மொழிக் கொலையில் கடைசியாகக் காட்டிய பகுதி ஒருவகை. இந்த வகையார் ஏன் இவ்வாறு எழுதுகிறார்கள் என்பதை அவர்களைப் படைத்த இறை வனே அறிவான். ஒருவேளை தமக்கு இரு மொழிகளிலும் தேர்ச்சியுண்டு என்பதை அறிவிக்கவே செய்கின்றனர் போலும். ஆனால், இரு மொழித் தேர்ச்சியுடையவர்கள் கூட இதனை ஏற்றுக்கொள்கிறார்களா என்பது ஐயத்திற்குரியதே.

## பிறமொழிக் கலப்பு

தமிழில் என்றோ ஒரு காலத்தில் வந்து வழங்கிப் பழகிப்போன சில வடசொற்களும் உண்டு. பிற மொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்குவதைத் தடுத்தல் இயலாது என்பதை அறிந்திருந்தனர் நம் முன்னோர். எனவேதான், வடமொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்குதற்கு விரிவான முறையில் இலக்கணம் வகுத்திருந்தார்கள். ஆசிரியர் தொல்காப்பியனார் அச் சொற்கள் தமிழில் வரவேண்டு மாயின் அவற்றின் வரிவடிவத்தை விட்டுவிட்டுத் தமிழ் வரிவடிவந் தாங்க வேண்டுமென்ற கருத்தில் 'வட சொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ' (தொல்—சொல்—401) என்று கூறிப் போனார்.

## கலப்பு முறை

மேல்நாடு செல்லும் தமிழன் ஒருவன் மேனாட்டுப் பெண் ஒருத்தியைக் காதலித்து மணந்துகொள்ள நேரிட்டால் அதில் தவறு இல்லை. ஆனால், ஏற்கெனவே அவன் மணமானவனாகவும் தன்னுடைய மனைவியை இந்நாட்டில் விட்டுச் சென்றவனாகவும் இருந்தால் இவள் இங்கிருக்க மற்றொரு பெண்ணை மணத்தல் தவறு. ஆனால் முன்னரே மணமாகாதவனாக இருப்பின் இப் புது மணத்தால் தவறில்லை. என்றாலும், மேனாட்டுப் பெண்ணை மணந்த வன் அவளைத் தமிழ் நாட்டிற்கு அழைத்துவந்து தமிழ ரிடையே குடும்பம் நடத்த விரும்பினால் மறவாமல் முதலில் செய்யவேண்டியதொன்று உண்டு. அவள் அணிந்திருக்கும் மேனாட்டு உடையாகிய 'கௌனை' நீக்கிப் புடைவை கட்டுமாறு செய்தல் வேண்டும். அப்பொழுதுதான் அவளும் இந்த மக்களிடையே கூச்சமின்றி வாழமுடியும்.

இந்த உதாரணத்தைக்கொண்டே பிறமொழிக் கலப்புப் பற்றிய ஆராய்ச்சியை நடத்தலாம். நம்மிடம் ஏற்கெனவே ஒரு சொல் இருக்கும்பொழுது அதே பொருளுடைய பிறமொழிச்

சொல்லைக் கடன் வாங்குவது மனைவி இருக்கையில் வேறு ஒரு பெண்ணைக் கைப்பிடிப்பது போலாகும். அறிந்தோ அறியாமலோ முறை. முறைகேடு பாராமல் ஒருவர் இரு மணங்கள் செய்துகொண்டிருப்பின், அந்த இருவரும் ஓரிடத்தில் இருந்து பழகிவிட்டபின் திடீரென்று ஒருத்தியைத் தள்ளிவிடுவதும் சரியன்று. அதேபோன்று இந்நாட்டிடைப் பல காலமாக வழங்கிவிட்ட சொல்லை இன்று நீக்க வேண்டும் என்று நினைப்பதும் சரியாகத் தோன்றவில்லை. இறக்குமதி செய்வதற்கு முன்னரே ஆராய்வதைவிட்டு இறக்குமதியானபின் ஆய்தலும் தள்ளிவைக்க முற்படுதலும் சரியன்று. எவ்வாறாயினும், 'வாஸனை', 'தாஸி, 'ப்ரஸாதம்', 'வாத்யங்கள்' என்று வடமொழி உச்சரிப்புடனும் அந்த எழுத்துகளுடனும் எழுதத் தேவை இல்லை; எழுதினால் அது மேனாட்டுப் பெண் கௌனுடன் தமிழ்நாட்டில் வாழ்வது போலாகும்; தவறுமாகும். கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன் போன்றவர்களும் இதனால் விளையும் தீமையை உணர்ந்து, 'இலக்குவ! நீ கலக்குவன் என்று கருதினால்' என்றே பாடிச்செல்கிறான். 'லக்ஷ்மணன்' என்று கம்பன் யாண்டும் பயன் படுத்தவே இல்லை.

## வடமொழிக்குப் பதிலாக

இற்றை நாள் தமிழ் உரைநடையில் வடமொழி அதிகம் இடம் பெறவில்லை என்பது உண்மைதான். ஆனால், அதே இடத்தை ஆங்கிலம் பெற்றுவிடுகிறது. 'சங்கத்தின் தற்காலத்து மெம்பர்கள் அல்லது மாஜி மெம்பர்கள்' என்று எழுதுப வர்களும் சில காலம்வரை இருந்தனர். இக்காலத்தில் இந்த இரண்டு முறைகளும் ஓரளவு குறைந்துள்ளன என்றாலும், கொச்சைச் சொற்களைப் புகுத்தி எழுதுதல் பெரு வழக்காயிருக்கிறது. திருநெல்வேலி மாவட்டத்தார், தஞ்சையார், செங்கற்பட்டார் ஆகியவர்கள் தத்தம் மாவட் டங்களில் வழங்கும் வழக்காறுகளை அப்படியே எழுதத்

தொடங்குகின்றனர். பிற மாவட்டங்களில் உள்ளவர்கள் இதனைப் படிக்கையில் பொருள் விளங்காமல் இடர்ப்படுவர் என்பது உறுதி. 'ராபர்ட் பர்ன்ஸ்' என்ற ஆங்கிலக் கவிஞர் ஸ்காட்லாந்தியப் பேச்சு வழக்கை அப்படியே பயன்படுத்திச் சிறந்த கவிதை எழுதியுள்ளார். ஆனால், ஆங்கிலம் நன்கு அறிந்தவர்களும் இன்று அக்கவிதையைப் படித்து இன்புறல் இயலாது.

**மாறுபாட்டின் காரணம்**

கூறவேண்டிய இடம், கூறவேண்டிய பொருள். கூறுவோரின் உணர்ச்சி வேகம் ஆகியவற்றைப் பொறுத்து ஓர் எழுத்தாளரின் நடையில் ஓரளவு மாறுபாடு ஏற்படலாம். ஆனால், இம் மாறுபாடு ஆழமானதன்று. இதையும் மீறி ஒருவருடைய நடையில் மாறுபாடு காணப்பெற்றால் அஃது அவரிலேயே ஏற்பட்டுள்ள மாறுபாடு என்பதை அறிதல் வேண்டும். கீழேயுள்ள பகுதிகளைச் சிறிது காண்போம்:

> "இந்தியா தேசம் தெய்வபக்தியில் தலைசிறந்து விளங்குவதுபோல இராஜபக்தியிலுந் தலைசிறந்து விளங்குவது. அரசனைக் காணுந் தெய்வமாகக் கருதுவது இந்தியர் வழக்கம். மன்னன் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் அம்சம் என்று இந் நாட்டு நூல்கள் கூறா நிற்கின்றன.
>
> 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்' என வைணவ வேதமும், 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் வீழ்க தண் புனல் வேந்தனும் ஓங்குக' எனச் சைவ வேதமும் முழங்கு வதைக் காண்க.
>
> பண்டைக் காலத்தில் ஒரு கூட்டத்தார் அரசன் நீண்ட காலம் உலகத்தில் வாழும்பொருட்டு தங்கள் தலைகளைத் தாங்களே வெட்டிக் கொள்ளும் வழக்கத்தையுடையவராயிருந்தனர். அவர்கள் ஆண்

டிற்கொரு முறை காளி கோயிலையடைந்து அரசன் நலத்தைக் கோரிப் பலவகைப் பூசை புரிவார்கள். அது காலை, அவருள் ஒரு சிலர் தங் கரத்தில் அரிவாள் தாங்கிக் காளியின் திருமுன்னின்று 'எமது வேந்தன் நீண்ட காலம் உலகத்தில் வாழ்ந்து குடிகளுக்கு நன்மை செய்ய எமது வாழ்நாளைக் குறைத்துக் கொள்கிறோம்' என்று கூறித் தங்கள் கழுத்தைத் தாங்களே அறுத்துக் காளிக்குப் பலியாவர். இவர், தம் வாழ்நாளைக் குறைத்துக்கொள்வதனால், அவ் வாழ்நாள் அரசன் வாழ்நாளோடு கலந்து அவனை நீண்ட நாள் வாழச் செய்யும் என்னுங் கருத்துக் கொண்டிருந்தனர் போலும். இவர் செயல் சிலருக்கு அநாகரிகம் போலத் தோன்றும், ஈண்டு நாம் அவர்தம் உட்கருத்தையே கவனித்தல் வேண்டும். அரசனுக்காகத் தம் உயிரையும் போக்கிக் கொள்ளும் இராஜ பக்தர்கள் வாழ்ந்த திருநாடு நம் இந்திய நாடு. அப் பெரியோர் பரம் பரையில் வந்தவர்கள் இந்தியர்கள் என்பது கவனிக்கத் தக்கது.

இராஜபக்தி சிறக்கச் சிறக்க நாட்டிற்கு நன்மையும் நாகரிகமும் பெருகும். முன்னர்ச் சமய சம்பந்தமான பிரசங்கஞ் செய்வோர் கடவுள் வாழ்த்துக் கூறிப் பிரசங்கத்தைத் தொடங்குவது வழக்கம். இப்பொழுது சில உபந்நியாசகர்கள் கடவுள் வாழ்த்துக்குப் பின் அரச வாழ்த்துக் கூறித் தம் உபந்நியாசத்தைத் தொடங்குகின்றனர். எல்லா வழியிலும் நாளுக்கு நாள் இந்தியாவில் இராஜபக்தி பெருகாநிற்கின்றது. இராஜ பக்தியில்லாதவர்கள் தேசபக்தியில்லாதவர்களென்பது எமது கொள்கை."*

'தேசபக்தாமிர்தம்', பக்கம் 4, 5, 6 (7-12-1917).

"உலகத்துக்கும் கஷ்டம் நேரிடும்போது அக் கஷ்டம் தொழிலாளரையே பெரிதும் பாதிக்கிறது. ஆனதுபற்றித் தொழிலாளரே தெய்வ வழிபாட்டில் தலைசிறந்து விளங்கவேண்டியவராயிருக்கின்றனர்.

தொழிலாளர்களே! உங்கள் நிலையை நினைக்க நினைக்க மனம் உருகுகிறது. கஷ்டத்தையேற்றுக் கொள்ளச் சித்தமாயிருங்கள்; அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்தே நடவுங்கள்; ஒற்றுமையைக் கைவிடாதே யுங்கள்; கடவுளை மறவாதேயுங்கள்; பிரகலாதன் கஷ்டத்தை நினைத்துக் கொள்ளுங்கள்; சீதையின் வருத்தத்தைக் கருதுங்ககள்; பாண்டவர் வனவாசத்தை மறவாதேயுங்கள்; தெய்வ வழிபாட்டைச் செய்து கொண்டேயிருங்கள்; உங்கள் எண்ணம் நிறைவேறும்."*

இப்பகுதி யாருடைய எழுத்து என்று நினைக்கின்றீர்கள்? திரு.வி.க.வினுடையதேதான். 1917, 1918ஆம் ஆண்டுகளில் 'தேசபக்தன்' பத்திரிகையில் அவர்கள் எழுதிய நடையாகும் இது. இதில் காணப்பெறும் நடைக்கும் 'உள்ளொளி' போன்ற பிற்காலத்தில் எழுதிய நூல்களிற் காணப்பெறும் நடைக்கும் கடலனைய வேற்றுமை உண்டு. நடையில் மட்டுமல்லாமல் கருத்திலுங்கூடக் கடலனைய வேறுபாட்டைக் காணலாம். 'இராஜபக்தி சிறக்கச் சிறக்க நாட்டிற்கு நன்மையும் நாகரிகமும் பெருகும். இப்பொழுது சில உபந்நியாசகர்கள் கடவுள் வாழ்த்துக்குப்பின் அரச வாழ்த்துக் கூறித் தம் உபந்நியாசத்தைத் தொடங்குகின்றனர். எல்லா வழியிலும் நாளுக்கு நாள் இந்தியாவில் இராஜபக்தி பெருகா நிற்கின்றது;' 'இராஜபக்தி இல்லாதவர்கள் தேசபக்தி இல்லாதவர்கள் என்பது பொதுக்கொள்கை' என்ற தொடர்கள் 7-12-1919இல் தமிழ்ப் பெரியாரால் 'தேசபக்தன்' தலையங்கத்தில் எழுதப் பெற்றன.

* 'தேசபக்தாமிர்தம்', பக்கம் 39 (29-10-1918).

இவ்வாறு ஒரு கருத்தை இத்தகைய ஒரு நடையில் எழுதிய அதே திரு.வி.க.தான் பின்னர் 'சுயராஜ்யம் எனது பிறப்புரிமை' என்ற திலகர் பெருமானின் மந்திரத்தால் கட்டுண்டு அதனைத் தமிழகமெங்கும் பரப்பி வந்தார். 1917—18ஆம் ஆண்டுகளில் திரு.வி.க.வின் நடை இன்று நம்மில் பலருங் கைக்கொள்ளும் நடையாகவே இருந்து வந்தது.

'மோட்சானந்தத்தைக் குறித்து ஞானராய்ச்சி செய்யும் வேதாந்திகளும் சுய ஆட்சி முறையில் தலைப்பட்டு உரைத்தல் வேண்டும்' (7-3-1918)

'ஒவ்வொரு சமயத்தவரும் அவதாரமூர்த்தி தோன்றுவதில் நம்பிக்கை உடையவராய் இருக்கின்றனர்' (16-8-1918).

'நமது பாரதத்தில் பயங்கரமான சண்டைகள் பல நடந்திருக்கின்றன.'

'பிரஸிடெண்ட் வில்சனுக்கு உயர்ந்த வேதாந்த ஞானம் பிறந்திருக்கிறது' (13-12-1918).

'அவர்கள் ஜபதபங்களைச் செய்து கொண்டிருப் பார்கள்.'

'மேல்நாட்டு நாகரிகம் பரவாத — இங்கிலீஷ் பாஷை மணம் வீசாத—கிராமங்கள் இன்னுஞ் சில இருக்கின்றன' (8-11-1918).

'ஒரு சிற்ப சாஸ்திரி ஹிந்து தேவாலயத்துள்ளே நுழைந்து பிராகாரத்தைச் சுற்றிவருவானாயின் அவன் உள்ளமும் சிற்பத்தின் இயல்பும் ஒன்றுபட்டுவிடும்.'

'ஹிந்து தேவாலயங்களிலுள்ள அபிஷேகத் திரவியங்கள் மூக்கிற்கு இன்பமூட்டும்.'

'அடியார்களை ஆலிங்கனம் செய்வதனாலும் கைத் தொண்டு செய்வதனாலும், மணி ஒலியும் தீபாராதனை ஒளியும் முறையே செவிப்புலனிலும்

கட்புலனிலும் ஊடுருவிப் பாயுங் காலத்து உண்டாகும். விதிர் வியர்ப்பு, மயிர் சிலிர்த்தல் முதலிய நிகழ்ச்சி களாலும் மெய்க்கும் இன்பமுண்டாகிறது எனவே, ஐம்புலனுக்கும் இன்பம் ஊட்டக் கூடிய பொருள் வடிவாகத் தேவாலயங்கள் அமைக்கப்பட்டிருக் கின்றன என்பதை உணரல் வேண்டும். (28-6-1918)

'இப்பொழுது பெரும்பாலும் ஆலயங்களைப் பற்றிய வழக்குகள் நியாய ஸ்தலத்துக்குச் செல்கின்றன. வழக்குக் காரணம் அசத்தியமும் அயோக்கியத் தன்மையுமேயாகும்.'

'ஆலய காரியங்களுக்குச் செலவழிந்த பொருள் போக, மிகுதியாக உள்ள பொருளைத் தேச முன்னேற்றத்துக்குரிய வழிகளிற் செலவழிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் (1-7-1918)

## இருவகை நடைகள்

1918ஆம் ஆண்டு முடிய இந்த முறையில் இருந்த திரு.வி.க. அவர்களின் நடை 1919இல் திடீரென்று மாறுத லடையக் காண்கிறோம். அவர் வாணாள் முழுதும் மணம் பரப்பப்போகும் திரு.வி.க.வின் புரட்சி நடை 1919இல் அரும்பத் தொடங்கிவிட்டது. 'ரௌலட் சட்ட'த்தை எதிர்த்து இதோ எழுதுகிறார்:

"பாரத மாதாவின் பொன்மேனியைக் கருமேனி யாக்கவல்ல இருட்டு மசோதா சட்டமாகிவிட்டது. அதிகாரவர்க்கத்தார், உலக நிலையும், இந்தியாவின் நிலையையும் ஆய்ந்தோய்ந்து பார்க்க அவகாசமின்றி மிக விரைவாகக் கொடிய சட்டத்தை நிறைவேற்றி விட்டனர். இந்தியாவிலுள்ள எல்லாக் கட்சியினரும் அச் சட்டத்தை வெறுக்கின்றனர்; மறுக்கின்றனர்; ஆனால் அச் சட்டத்தை ஒழிக்க வேண்டிய முறைப்பாடுகளில் சிறிது மாறுபடுகின்றனர். எல்லாக்

கட்சியினரும் ஒரு முகமாக மசோதாவை மறுத்தும், அம் மறுப்புரைகளை ஒரு பொருட்படுத்தாது, அதிகார வர்க்கத்தவர் தங் கருத்துவழி நின்று காரியத்தை முடித்துக்கொண்டனர். ரௌலட் சட்டம் இந்தியா வின் சுதந்திரத்தை வேரோடு களைவது என்பதை யாவரும் அறிந்திருக்கின்றனர்: அறிந்தும் அதைக் களைய முந்துகின்றாரில்லை. காரணம் அச்சமும் பிறவுமேயாம்.

அச்சம் பிறவும் அறிஞர்க்கு உண்டாதல் அருமை. ஈண்டு அறிஞர் எனப்படுவோர் மேல்நாட்டுக் கல்வி பயின்று மனித தருமத்தை மறந்திருப்பவரல்லர்; தேகம் பொருள் அன்று என்ற உறுதிநிலை கைவரப் பெற்றவரேயாவர். அறிஞரை வேதாந்தி என்றுங் கூறலாம். வேதாந்தியாவார் அறிவின் முடிவு நிலை கண்டவர்.

வேதாந்தம் பிறந்த இடம் இந்தியா என்பதை உலகம் அறியும். வேதாந்தம் என்பது எல்லாச் சமய முடிபாக இருப்பது. அது, சைவர், வைணவர், புத்தர், மகமதியர், கிறிஸ்தவர் முதலியோருக்கும் உரியது. இச் சமயத் தலைவர்கள் யாவரும் வேதாந்த நிலையைக் கண்டவரேயாவர். அவ் வேதாந்த நிலையக் கண்டவருள் பெரும்பாலோர் இந்தியர் என்பது கவனிக்கற்பாலது. பண்டைக் காலத்தில் அறச்சாலை களிலும், தவச்சாலைகளிலும், மடங்களிலும், வனங் களிலும் முனிவர்களும், ரிஷிகளும், குருமார்களும், சந்நியாசிகளும் வேதாந்தங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடியிருப்பார்கள். அவர்களைப் புலியும், பாம்பும் ஒன்றுஞ் செய்யா. அவர்கள் ஆத்ம சக்தி, நாட்டில் வாழும் அரசர்களையும், குடிமக்களையுங் காத்து வந்தது. பழைய காலத்தில்

இந்தியாவை ஆண்டது, ஆத்ம சக்தி என்று கூறுவது மிகையாகாது. நம் பெரியோர்கள் ஆத்ம சக்தி கைவரப் பெற்ற வேதாந்திகளாக இருந்தபடியால், அரசர் களுக்கும், அரக்கர்களுக்கும், அமரர்களுக்கும் அஞ்சாது, உலகத்தில் தருமத்தை வளர்த்து வந்தார்கள்."*

"வேதாந்த சித்தாந்த சந்நியாசிகளே! உங்கள் முன்னோர்கள் வழியை நாடுங்கள். அவர்கள் அரசாட்சி முறையில் கவலை செலுத்தி உலகத்தைக் காத்து வந்ததைச் சிந்தியுங்கள். உங்கள் நிலை இடைக்காலத்தில் குறைந்து விட்டது. நீங்கள் எழுச்சி கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது. உங்கள் ஆத்ம சக்தியைக் காட்டவேண்டிய காலம் நெருங்கி விட்டது. நீங்கள் செல்லுமிடங்கள்தோறும், பேசும் சபைகள் தோறும் சத்தியாக்கிரகத்தைப் பற்றிப் பேசுங்கள். வேதாந்த நூல் ஆராய்ச்சியுடை யோரன்றோ விரைவில் சத்தியாக்கிரக உண்மையை உணர்ந்து காந்தியடிகளுக்குத் துணை செய்ய முந்துதல் வேண்டும்? வாய் வேதாந்தம் வேண்டா; 'அகம் பிரம்மாஸ்மி' என்னும் மகாவாக்கியத்தின் பொரு ளுணர்ந்த நீங்கள் யாருக்கு அஞ்சவேண்டும்? எதற்குப் பயப்பட வேண்டும்? உங்களைக் கட்டுப்படுத்துஞ் சட்டம் உலகத்தில் இல்லை என்பதை நீங்கள் உணருங்கள். வேதாந்த சித்தாந்த சபைகள் எல்லா வற்றையும் இனிச் சத்தியாக்கிரக ஆசிரமமாக மாற்றுங்கள். இந்தியாவின் பொறுப்பு உங்களிடத்தி லிருக்கிறது. முப்பத்து முக்கோடி ஜனங்கள் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அப் பயிர்கள் வாடுகின்றன. அவற்றை ஆத்ம சக்தி என்னும் மழை பொழிந்து வளருங்கள்.

* 'தேசபக்தாமிர்தம', பக்கம் 76, 77 (20-3-1919).

காட்டிலுள்ள சந்நியாசிகளே! வீட்டிலுள்ள சந்நியாசிகளே! நிஷ்டை கூடியுள்ள சந்நியாசிகளே! தவத்திலுள்ள சந்நியாசிகளே! சமாதியிலுள்ள சந்நியாசிகளே! எழுந்து வாருங்கள். காந்தியடிகளுக்கு துணைபுரியுங்கள்.

சூட்சும தேகந் தாங்கி உலவிவருஞ் சித்தர்களே! உங்கள் உதவி இப்பொழுது இந்தியாவிற்கு வேண்டும்.

சத்திய சொரூபனே! சத்தியாக்கிரகமென்பது உன் வடிவம். வேண்டுவ செய்வாயாக."*

## உணர்ச்சியால் நடை வேறுபாடு

இந்த எடுத்துக்காட்டுகளும் 'தேசபக்தனில்' வந்தவையே. 1918-19-ல்கூட உணர்ச்சி வசப்பட்டு எழுத வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால் திரு.வி.க.வின் நடையில் ஒரு புரட்சி அல்லது மாறுதல் ஏற்படும் என்பதைக் காண முடிகிறது. சாதாரண கருத்துகளை எழுதும் பொழுது ஏனையவர்களைப்போன்றே சாதாரண நடையில் எழுதிய திரு.வி.க., அதே காலத்தில் தம் உள்ளத்துணர்ச்சியை வெளியிடவேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டால் புது வகையான நடையைக் கையாண்டுள்ளார். இவை அனைத்தும் 'தேசபக்தன்' பத்திரிகையில் 1917 முதல் 1919-க்குள் வெளி வந்தவைதாம். 1918இல் 'தமிழ் தனித்தியங்கும் ஆற்றல் படைத்த தனிமொழியன்று' என்று பேசும் சிலர் 'பெரிய மனிதர்களாக' விளங்கிப் பல்கலைக் கழகத்திலும் உயர்ந்த இடங்களில் அமர்ந்திருந்தனர். வேறு செல்வாக்குகள் காரணமாக இவண் அமர்ந்த அந்த 'அறிவாளிகள்' தம் அரிய கருத்துகளைத் திருவாய் மலர்ந்து உலகுக்கு அறிவித்தனர். இது கண்ட நம் அறிஞர் வீறு கொண்டெழுந்த 'தேசபக்தனில்' 12-3-1918இல் பின் வருமாறு எழுதியுள்ளார்:

* 'தேசபக்தாமிர்தம்', பக்கம் 83, 84.

"தமிழ் தனிமொழி என்பதை முற்கால ஆசிரியன்மார்களும், பிற்கால ஆசிரியன்மார்களும், நன்கு விளக்கிக் காட்டியுள்ளார்கள். தமிழ்ப் புலமை நிரம்பப் பெற்று நூல் பல எழுதிவரும் மகாமகோபாத்தியாய சாமிநாத ஐயரவர்களும், இராகவ ஐயங்கார் முதலியோரும் தமிழ் தனிமொழி யென்னுங் கூற்றை மறப்பரோ? ஒரு நாளும் மறுக்கத் துணியார். தமிழின் மூலை கண்டறியா ஒரு சிலரே அதைக் குறை கூறத் துணிவர். காலஞ் சென்ற சூரிய நாராயண சாஸ்திரியார் எழுதிய 'தமிழ் மொழி வரலாறு' என்னுஞ் சீரிய நூலைத் தமிழின் எழுத்திலக்கணமுந் தெரியாது 'தமிழ் தனிமொழியன்று' என்று கூறும் அறிஞர்கள் வாசித்து உண்மை உணர்வார்களாக.

தனித்தியங்கும் ஆற்றலுடைய தமிழ் மொழியை நமது சென்னைச் சர்வகலாசாலையார் எங்ஙனம் வளர்த்துவருகின்றனர் என்பதைச் சிறிது ஆராய்ச்சி செய்வோம். சுமார் பன்னிரெண்டு வருடங்களுக்கு முன்னர்த் தமிழ் பி.ஏ. வகுப்புவரை கட்டாய பாடமாக இருந்தது. தமிழொன்றே யெடுத்து எம்.ஏ. பரீட்சையில் தேறினவரும் பலர் இருக்கின்றனர். அங்ஙனம் தமிழை வளர்த்து வந்த சர்வகலாசாலையார் சில போலிக் காரணங்களை முன்னிட்டுத் தமிழை இஷ்ட பாடமாக மாற்றிவிட்டனர். சர்வகலாசாலை அங்கத்தவர்களிற் பலர் தமிழ் இன்னதென்றே தெரியாதவர். ஒரு சிலரே தமிழாராய்ச்சி யுடையவர். தமிழ் மொழியைப்பற்றி அடிக்கடி சர்வகலாசாலையில் விவாதம் நிகழ்கிறது.

அவ்வக் காலங்களில் தமிழ்ச் சொல் காதிலுங் கேட்டறியாத சிலர் தமிழைப்பற்றி அபிப்பிராயங்கூறத் தொடங்குகின்றனர். தமிழாராயாச்சி யுடையார் வாக்குச் சர்வகலாசாலை அரங்கமேறுவதில்லை. சில காலத்தில் தமிழங்கத்தினர் மௌன விரதம் பூண்கின்

*றனர். சர்வகலாசாலை இன்னுந் தமிழ் மொழியைத் தனி மொழி என உணர்ந்ததோ இல்லையோ என்பது சந்தேகம்.*

*சென்னைச் சர்வகலாசாலையில் வித்துவான் பரீட்சை யென்று ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது? அப் பரீட்சைக்குச் செல்வோர் வடமொழி பயிலல் வேண்டுமாம். தமிழ் மக்களுள் பலர் வடமொழிப் பயிற்சி செய்வதில்லை; சிலர் வடமொழியை யுச்சரிக்கவே வருந்துவர். எத்தனையோ தமிழ் மக்கள் வித்துவான் பரீட்சைக்குச் செல்ல விரும்புகின்றார்கள். ஆனால், அவர்கள் தமிழல்லாப் பிற மொழிகளைப் பயிலல் வேண்டும் என்னும் நியதிக்கு அஞ்சித் தங்கள் விருப்பத்தை நிறைவேற்ற முயற்சி செய்யாமலிருக்கின்றார்கள். இதைக் குறித்துச் சென்ற வாரம் சர்வகலா சாலையில் பெரும் விவாதம் நடந்தது: .................. அது காலை நீதிபதி சேஷகிரி ஐயரவர்களும், ஸ்ரீமான் சி.பி. இராமசாமி ஐயரவர்களும் தமிழ் உண்மை கண்டு பேசியதற்குப் பெரிதும் நன்றியறிதலுடையோம்.*

*தெலுங்கு முதலிய திராவிட பாஷைகளைப் பயில்வோர்க்கு வடமொழி ஞானம் அவசியம் வேண்டுமென்பதை மறுப்பாரில்லை. தமிழ்ப் பரீட்சைக்குச் செல்வோர்க்கு வடமொழிப் பாடம் பெருந் தடையாக நிற்கிறது என்பதையே யீண்டு நாம் சர்வ கலாசாலையாருக்கு அறிவுறுத்துகிறோம்."**

## நெஞ்சுரம் வேண்டும்

*இற்றை நாளில் தமிழின் தனித்தியங்கும் ஆற்றல் பற்றிப் பேசுவதும் எழுதுவதும் சிறப்பன்று; அது நாகரிகமாகவும் கருதப்படுகிறது. ஆனால் இன்றைக்கு 50 ஆண்டுகளின்*

* 'தேசபக்தாமிர்தம்', ப. 114 – 116.

முன்னர் சாதாரணப் பத்திரிகையாசிரியர் ஒருவர். அதுவும் பத்திரிகை தொடங்கிய சின்னாட்களுள் இவ்வளவு துணிந்து அன்றைய பெரிய மனிதர்களை எதிர்த்து எழுதவேண்டு மாயின் அவர்க்கு எத்துணை நெஞ்சு உரம் இருந்திருக்க வேண்டும் என்பது சிந்தித்தற்குரியது.

## நம் குறைகாணல்

தமிழைக் குறை கூறுவோரை இத்துணை வீறு கொண்டு சாடிய அறிஞர் தமிழ்ப் புலவர்களிடை உள்ள குறைகளையும் சுட்டிக்காட்டத் தயங்கவில்லை. அவர்தம் நிலை உயர என்ன என்ன செய்யவேண்டும் என்பதையும் நிரல்படக் கூறுகின்றார்:

"தமிழ் வளர்ச்சிக்காக இதுகாறும் எத்துணை மகாநாடுகள் கூடியிருக்கின்றன? எத்துணைத் தீர்மானங்கள் அரசாங்கத்தாருக்கு அனுப்பப்பட்டன? தமிழ்ப் பண்டிதர்கள் சம்பளத்தைக் குறித்து எத்தனை சட்ட சபை அங்கத்தவர்கள் முயற்சி செய்தார்கள்? சில சங்கங்கள் மூச்சுவிட்டிருக்கின்றன என்பதைச் சிலர் அறிவர். சட்டசபையிலும் ஒருமுறை தமிழ்க் காற்று வீசியதாகக் கேள்விப்படுகின்றோம். இச் சிறு முயற்சிகள் அரசாங்கத்தாரைக் கவனிக்கச் செய்யா. பல மகாநாடுகள் கூடிப் பேரியக்கமும் முழக்கமுஞ் செய்யல் வேண்டும். இம் முயற்சிகளுக்கு இடையூறு நம்மவர்களே செய்வார்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களை யொரு பொருட்படுத்தாது குறைகளை அரசாங்கத்தாருக்கு முறையிட ஊக்கமும் உறுதியும் நமக்கு வேண்டும். இக் காரியத்தில் அரசாங்க உத்தியோகஸ்தர்களுங் கலந்து உழைக்கலாம்.

தமிழ்ப் புலவர்களே! ஆங்கிலப் புலவர்கள் பெருமையை உற்றுநோக்குங்கள்: 'பொறாமை' என்பதைக் களைந்து கடலிலே எறியுங்கள்; ஆகுபெயர்

அன்மொழித்தொகை சண்டையை யொழியுங்கள்; ஓய்ந்த காலத்தில் ஆங்கிலம் பயின்றோரை அடைந்து பூதபௌதிக தத்துவ சாஸ்திரங்களைக் கேட்டுத் தற்காலத்துக்கேற்ற உணர்ச்சி பெற முயலுங்கள். ஜனத்தலைவர்கள் தங்களுக்குள் வேறு வழிகளிலுள்ள வேற்றுமைகளைப் பாராட்டாது உங்கள் முன்னேற்றத் துக்காக உழைப்பார்கள். **மடாதிபதிகளே! தமிழ் வளர்ச்சிக்காயினும் நீங்கள் முயற்சி செய்யலாகாதா"***

வாழ்க்கைத் தொடக்கத்தில் இரண்டாண்டுக் காலம் திரு.வி.க.வின் தமிழ் நடை எவ்வாறு இருந்தது, எவ்வாறு வளரத் தொடங்கியது என்பதை ஒருவாறு கண்டோம். ஆனால், அவருடைய நடையில் இத்துணை மாறுபாடு இருக்கிறதே தவிரக் கருத்து வளர்ச்சியில் 1918ஆம் ஆண்டிலேயே சமரச சன்மார்க்கம் முகிழ்க்கத் தொடங்கி விட்டது.

### பத்திரிகாசிரியர்

1917ஆம் ஆண்டு டிசம்பரில் 'தேச பக்தன்' ஆசிரியப் பதவியை ஏற்ற திரு.வி.க. 1920 ஜூலையில் அப் பதவியினின்றும் விலகினார். பின்னர் 1920 அக்டோபரில் 'நவசக்தி'யைத் தொடங்கி 13 ஆண்டுகள் தொண்டாற்றினார். எனவே, பதினாறு ஆண்டுகள் பத்திரிகை ஆசிரியராகப் பணியாற்றினார் பெரியார். அப்பத்திரிகைகளில் ஆசிரியக் கட்டுரைகளும் சிற்சில சமயங்களில் வேறு கட்டுரைகளும் வரையப்பெற்றன. 'நவசக்தி'யில் 'சிலம்பொலி' என்னும் தலைப்பின்கீழ் பல்வகைக் கட்டுரைகள் எழுதப்பெற்றன. அவற்றைத் திரட்டித் 'தமிழ்ச் சோலை' என்ற தொகுப்பு நூல் வெளியிடப் பெற்றது.

---

* 'தேசபக்தாமிர்தம்', பக்கம் 121, 122.

திரு.வி.க.வைப் பத்திரிகாசிரியர் என்ற நோக்குடன் பார்க்கும்போது அவர் நடத்திய இதழ்கள் எவ்வகையைச் சேர்ந்தவை என்பதையும் கருத்தில் இருத்தல் வேண்டும். அவரே கூறுவதுபோல இவை இரண்டும் அரசியற் கிளர்ச்சிக்கென்றே தொடங்கப்பெற்றனவாகலின் அவ்வப் போதைய அரசியல் நிலையை ஒட்டியே தலையங்கங்கள் தீட்டப்பெற்றன. அவற்றுள் சிலவும் 'தமிழ்ச் சோலை'யில் இடம் பெற்றன. இந் நூலுள் 'எல்லாம் ஆண்டவன் செயல்', 'உலகின் மெலிவு', 'இயந்திரங்களும் மனிதர்களும்', 'சத்தும் உணவும்', 'நெய்தற்தொழில்', 'முதலாளி தொழிலாளி', 'க்ஷயரோகம்' என்பன போன்ற கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. 1920 முதல் 1933 வரை நடந்த ஒரு தமிழ் வார இதழில் இத்தகைய பல்வேறு வகைப்பட்ட பொருள்கள் பற்றிய அறிவை வளர்க்கும் கட்டுரைகள் வந்தன என்றால், அப் பத்திரிகைக்குத் தமிழ் நாட்டில் நல்ல செல்வாக்கும் இருந்துவந்தது என்றால், அதனை நடத்திய ஆசிரியரைப் பாராட்டாமல் இருத்தல் இயலாது. இந்தக் கால எல்லையில் தமிழ்நாட்டில் பத்திரிகைகள் இல்லை என்று கூற முடியாது. ஆனால், இன்றிருப்பது போல அத்துணை அதிகமாகவும் இல்லை. 1920—33 கால அளவில் 'சுதேசமித்திரன்' அதிக அளவில் தெரிந்திருந்தது. வார, மாத இதழ்கள் கதைகளைத் தாங்கி அவற்றிற்கு முதலிடந் தந்து வெளிவந்து கொண்டி ருந்தன. அவற்றுள் அரசியலைப் பற்றி எழுதும் தாள்கள் 'சுதேசமித்திரன்', 'இந்தியா' என்பவையே. 'குடியரசு' போன்ற தாள்கள் சமுதாயப் பிரச்சினைகளையே பெரிதும் எழுதின. அந் நாளில் அரசியலைத் தமிழில் எழுதமுடியாது என்று கருதினராகலின், நூற்றுக்கு நாற்பது சொற்கள் ஆங்கிலத் திலும் இருபத்தைந்து சொற்கள் வடமொழியிலும் எடுத்துக் கொண்டு, எஞ்சியவற்றைத் தமிழ்ச் சொற்களாக இட்டு எழுதிவந்தனர்.

## தாள்களின் நோக்கம்

இத் தினத்தாள்கள் மக்கட்கு ஓரளவு அரசியல் அறிவை உண்டாக்க வேண்டும் என்று கருதியது உண்மைதான். ஆனால், அக் கருத்து நிறைவேற அவர்கள் மேற்கொண்ட வழிகள் சரியானவையல்ல. தாம் நேரே ஒரு நிகழ்ச்சியைப் பார்க்க நேர்ந்தால் அதனைப் பார்த்தவர்கள் உணர்ச்சி பெறமுடியும். ஆனால், தாம் பெற்ற உணர்ச்சிகளைப் பிறருக்கு அறிவிக்க வேண்டுமாயின் அதற்கு மொழியின் உதவி தேவை. எழுத்து மொழி, பேச்சு மொழி என்ற இரண்டினாலும் மட்டுமே உணர்ச்சியைத் தூண்டிவிட முடியும். அன்றைய தினத்தாள்கள் அரசியலறிவை மக்கட்கு ஊட்ட இத்தகைய மணிப்பிரவாள நடையைக் கையாண்டதன் மூலம் தாம் விரும்பியதைச் செய்ய முடியவில்லை. ஆனால், நாளுக்கு நாள் அரசியல் விவகாரங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசையால் உந்தப் பெற்ற மக்கள் இத் தாள்களை வாங்கிப் படிக்கத் தொடங்கினர். திரு.வி.க.வைப் போலக் கனலைக் கக்கும் நடையில் எழுதவும் பேசவும் பெற்றாலொழிய உணர்ச்சியைத் தூண்ட முடியாது.

## புதிய நடை

எனவே, திரு.வி.க. அவர்கள் பத்திரிகையின் மூலம் மக்கள் மனத்தைக் கவரப் புதியதோர் தமிழ் நடையை மேற்கொண்டார். பத்திரிகைக்கு எழுதுவதற்காகவே தாம் அந்த நடையை மேற்கொண்டதாகவும் நாளா வட்டத்தில் அந்த நடையே தமக்கு உற்ற நடையாக அமைந்து விட்டதாகவும் வாழ்க்கைக் குறிப்பில் அவரே எழுதியுள்ளார்.

## சிறு தொடர்கள்

அந்த நடையின் தனிச் சிறப்பு யாது? எந்த ஒரு சொல் தொடரும் இரண்டு வரிகளுக்குமேற் போகாமல் இருப்பது அதனுடைய தனியழகு. நூறு தொடர்களை எடுத்துக் கொண்டால் எழுபத்தைந்து ஒரு வரிக்குமேல் நீள்வதில்லை.

இம்மாதிரி எழுதுவதில் தனிச் சிறப்பு யாது என்று வினவலாம். இதனைக் கூர்ந்து கவனித்தால் ஓர் உண்மை விளங்கும். இந்திய நாட்டைப் பொறுத்தவரை இரு வேறு மொழிகளில் இரண்டு பெருமக்கள் இத்தகைய சிறிய சொற்றொடர் முறையைக் கையாண்டனர். ஒருவர் மகாத்மா காந்தி; மற்றொருவர் திரு.வி.க. முன்னையவர் ஆங்கிலத்திலும் பின்னையவர் தமிழிலும் இந் நடையை மேற்கொண்டனர்.

## பேச்சின் தனிமுறை

இந்த நடைக்குரிய தனிச்சிறப்பு யாதெனில், இந்த ஒருவகை நடையில்தான் எழுத்து வழக்கும் பேச்சு வழக்கும் ஒன்றாய் அமைய முடியும். நீண்ட வாக்கியங்களால் பேசுவோர் அதிகம் உள்ளனர். இந்த நீண்ட சொற்றொடர்கள் பிழையில்லாமல் பேசப்பெறலாம். ஆனால், அவற்றை எழுத்தில் வாங்கிப் பார்த்தால் அப்பொழுதுதான் உண்மை விளங்கும். எழுத்து வடிவம் பெறும்பொழுது அந்தத் தொடரில் உயிரில்லாமற் போய்விடும். பேச்சு வழக்கில் பேசுபவருடைய உணர்ச்சி, ஓசை வேறுபாட்டில், முகபாவ வழியில், அங்க அசைவு முறையில், வெளிப்பட்டு அச் சொற்றொடருக்கு உயிர் ஊட்டுகிறது. ஆனால், அதே தொடர் எழுத்தில் வடிக்கப் பெறும்பொழுது உயிரற்று விடுகிறது.

## நடை வளர்ச்சி

எனவே, சாதாரண மக்களைப் பொறுத்தமட்டில் பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு என்ற இரு பகுப்புகள் உண்டு. பழைய காலத்திலும் இதனை ஏற்றுக்கொண்டு நூல் வழக்கு, உலக (பேச்சு) வழக்கு எனப் பெயரிட்டனர். இவை இரண்டையும் ஒன்றாக்கும் ஆற்றல் நான் கண்டவரையில் திரு.வி.க. ஒருவருக்கே இருந்தது. அவருடைய பத்திரிகைத் தொழிலும், மேடைப் பேச்சும் ஒன்றை ஒன்று பின்னிக் கிடந்தமையின் இம் முறையைப் பின்பற்ற வேண்டியதாயிற்று.

பலர் இம்முறையில் முயன்றிருக்கலாம். ஆனால், வெற்றி பெற்றவர் அவர் ஒருவரே.

1921இல் அவருடைய எழுத்து நடைக்கும் அதன் வளர்ச்சிக்கும் சில எடுத்துக்காட்டுகள்:

"தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கூட்டத்தார் நிகழ்ச்சி முறைகளைத் தமிழிலேயே நடாத்தல் வேண்டும்; மாறாக நடப்பாராயின், நாட்டார் அவரைத் தமிழ் வழியில் நடாத்த முயலல் வேண்டும். தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கூட்டத்தார், காங்கிரஸ் தீர்மானப்படி ஆங்காங்கே நாட்டுக் கல்லூரி அமைக்கக் கடமைப் பட்டிருக்கின்றனர். முதலாவது, சென்னையில் இரண்டு தமிழ்ச் சாலைகள் அமைக்குமாறு அவரை வேண்டுகிறோம். ஒன்றில் தமிழ்மொழி போதிக்கப் படல் வேண்டும்; மற்றொன்றில் மேல்நாட்டுப் பொருள் நூல், பூத, பௌதிக நூல் முதலியன தமிழ் நாட்டவர்க்குப் பயன்படும் பொருட்டு, அவற்றைத் தமிழில் மொழி பெயர்க்கப் போதிக்கப்படல் வேண்டும்."*

"ஐந்து நதி பாயும் அழகிய நாட்டண்ணலே! முப்பது கோடி மக்களின் ஆருயிரே! லஜபதி! லஜபதி! நும் பிரிவை எங்ஙனம் ஆற்றுவோம்! காலமெல்லாம் நாட்டின் உரிமைக்கென ஊனையும் உயிரையும் பிழிந்து பிழிந்து உயிர்துறந்த பெருமானே! நும்மை எங்ஙனம் மறப்போம்! இறுதிக் காலத்தும் நாட்டின்பொருட்டு அதிகாரவர்க்கத்தின் பொல்லாத அடி தாங்கியன்றோ உயிர் நீத்தீர்! முப்பது கோடி மக்கள் தலைவரே! எங்கள் பொருட்டு உயிர் நீத்தீர். நுந் தியாகத்தை எங்ஙனம் மறப்போம்!

* 'தமிழ்ச் சோலை', பக்கம் 10.

பாரத மக்களே! நாம் தொகையில் முப்பது கோடி பேர்; நம் பெருந் தலைவரைப் போலீஸார் தடி அடிக்கு இரையாக்கிவிட்டோம். இனி என் செய்வது? நமது கடமையென்ன? லஜபதியின் நோக்கத்தை நிறைவேற்ற முயலல் வேண்டும். லஜபதியின் பருவுடல் மறைந்தாலும், அவரது சிங்கநோக்கும், தியாகமும், வீரமும் அருவமாக நாடு முழுவதும் பரந்து வீறிடுகின்றன; உங்களைத் தட்டி எழுப்புகின்றன. எழுங்கள்; எழுங்கள். அவற்றின் அறிகுறியாக ஆங்காங்கே லஜபதிக்கு உருவச்சிலை நாட்டுங்கள்; நிலையங்கள் எழுப்புங்கள்; மற்றும் பல அமைப்புகள் காணுங்கள். லஜபதி விடுத்துச் சென்ற உரிமைப்போர் தொடுக்க எழுங்கள்; எழுங்கள். உரிமை நாட்டில் லஜபதி போன்ற தலைவர் போலீஸாரால் அடிபட்டு இறப்பரோ? நாட்டின் நிலைமை உன்னுங்கள்; உன்னி உன்னி உரிமை வேட்கை கொள்ளுங்கள்; கொண்டு எழுங்கள்; எழுங்கள். எழுந்து அஹிம்சா தர்மப்போர் முன்னணியில் நில்லுங்கள். லஜபதிக்கு அமைக்கத்தக்க நினைவுக்குறி இதுவே.

ஆண்டவனே! லஜபதியை அழைத்துக் கொண்டனை; லஜபதி போன்ற ஒரு தலைவரை நல்குக; லஜபதியின் வீரத்தை எங்களிடை நிலை பெறுத்துக.

பயன் கருதாப் பணியாற்றிப் போர்க்களத்தில் வீர முழக்கத்துடன் பரு உடலை நீத்த லஜபதியின் இன்னுயிர் ஆண்டவன் திருவடி நீழலில் ஆறுதலடைவதாக."*

* 'தமிழ்ச் சோலை', பக்கம் 381, 382.

*1933இல் அந்த நடை ஏறத்தாழ அதே நிலையில் தான் இருந்துள்ளது:*

*"தமிழ் மகனே! விடுதலை விடுதலை என்று வெறுங் கூச்சலிடுவதால் பயன் என்ன! விடுதலை முயற்சி, விடுதலை தருவதாயிருத்தல் வேண்டும். விடுதலை விடுதலை என்று சிறைக்கூடத்தில் நோய் வாய்ப்பட்டுள்ள தமிழ்த் தாயைச் சுற்றிலும் தீயிட்டு எரிப்பது அவள் நோய் போக்கும் மருந்தாகுமா என்பதைக் கவனிக்க. தமிழ் அன்னை இடைக் காலத்தில் சிறைப்பட்டாள்! பின்னே நோய்ப்பட்டாள்; இப்பொழுது விடுதலை என்னும் பெயரால் எரிக்கப்படுகிறாள். 'அந்தோ! நாங்கள் தாய்க்கு எரியா மூட்டுகிறோம்; விடுதலைக்கன்றோ முயல்கிறோம்' என்று சில சகோதரர்கள் கருதலாம். சகோதரர்களே! உங்கள் பேச்சில் எழுத்தில் 'விடுதலை' 'விடுதலை' என்னும் ஒலியும் வரியும் இல்லாமல் இல்லை. ஆனால், உங்கள் பேச்சால் எழுத்தால் விளைவதென்னை?"**

*1941இல் அந்த நடை இன்னும் மெருகு ஏறிச் சுருக்கம் பெற்று வீறு கொள்கிறது:*

*"நல்ல எண்ணம் தீய எண்ணம் என்னும் இரண்டில் எது ஆற்றல் வாய்ந்தது? சிலர் நல்ல தென்பர்; சிலர் தீயதென்பர். சில சமயம் தீயதே பேராற்றல் வாய்ந்ததுபோலத் தோன்றும். ஆழ்ந்த ஆராய்ச்சியால் நல்லதே பேராற்றல் வாய்ந்ததென்பது விளங்கும். எண்ணத்தின் ஆற்றல் பொதுவாக அது தோன்றும் இடத்தைப் பொறுத்து நிற்பது. ஒருவனது நெஞ்சம் தீமையையே எண்ணி, ஆழ எண்ணி அதில் ஒன்றி அதுவாகிறது இன்னொருவன் நெஞ்சம்*

* 'தமிழ்ச் சோலை', பக்கம் 31.

நல்லதை எண்ணுகிறது; ஆனால், அதுவாகவில்லை. இவ்விருவித எண்ணங்களில் எது ஆற்றல் வாய்ந்தது? தீய எண்ணமே ஆற்றல் வாய்ந்ததாகும். வேறொருவன் உள்ளம் நல்லதிலேயே ஒன்றி ஒன்றி அதுவாகிறது. மற்றொருவன் உள்ளம் தீயதில் ஒவ்வொருபோது படிகிறது. ஆனால், அதுவாகவில்லை. இவ்விரு வகை எண்ணங்களில் வல்லமையுடையது எது? நல்லெண் ணமே வல்லமையுடையதாகும். தீமையையே எண்ணி எண்ணி அதுவாகிய நெஞ்சம் ஒன்று; நல்லதையே எண்ணி எண்ணி அதுவாகிய நெஞ்சம் ஒன்று. இரண்டும் அவ்வத்தன்மையில் பூரண சக்தி பெற்றிருக் கின்றன. இவற்றில் எதைப் பெரிதென்று சொல்வது? இதற்கு, அனுபவம் தேவை. நல்லதே பெரிது என்று அனுபவம் உணர்த்தும். முழு நல்லது முழுத் தீமையை வெல்லும். அரைகுறையிலேயே (நல்லதிலேயே) தீமை மேம்படுவதாகும். ஆகவே, நல்லெண்ணங்கள் பெருகப் பெருக உலகம் நலம் பெறுவதாகுமென்க."*

1949இல் அதே நடை விறுவிறுப்பைக் கைவிட்டு மென்மை அடைகிறது. அதே சின்னஞ் சிறிய வாக்கியங்கள் தாம். என்றாலும் ஒவ்வொரு சொல்லிலும் ஆழம் அதிகமா கிறது.

"வாழ்க்கை எத்தகையதாயினும் ஆக. அதன் குறிக்கோள் நிறைவேறுதல் வேண்டும். குறிக்கோள் நிறைவேற வாழ்க்கையை அநுபவிக்கக் கடமைப்படல் வேண்டும். அநுபவத்திற்கென்று வாழ்க்கை ஏற்பட்டது. அநுபவிக்கும் முறைமை நேரியதாயிருந்தால் நலன் விளையும்; வேறு வழியினதாயிருந்தால் தீமை விளையும்.

* 'உள்ளொளி', பக்கம் 50, 51.

நேரிய வழி எது? வேறு வழி எது? 'வாழ்க்கையை நடத்துவது பரம்பொருள்' என்னும் உணர்வுடன் நடப்பது நேரிய வழி. 'வாழ்க்கை வழி பரம்பொருள்' என்பது நல்லுணர்வு அல்லது மெய்யுணர்வு என்றும், 'வாழ்க்கை வழி என்னுடையது' என்று நினைப்பது தீய உணர்வு அல்லது பொய்யுணர்வு என்றும் குறிக்கும் அளவில் இங்கே நின்றுவிடுகிறேன். விளக்கம் பின்னை.

நன்மையும் தீமையும் கலந்து கலந்து போராடிப் போராடி வாழ்க்கையைத் தூய்மை செய்யும். இத் தூய்மை 'வாழ்க்கை வழி பரம்பொருள்' என்பதை உணர்த்தும். இதை அநுபவத்தால் பெறலாம். இவ்வநுப வத்தைப் பெறுதற்கென்று வாழ்க்கையில் நன்மை தீமை முதலிய வேற்றுமைகளும் போராட்டங்களும் நிகழ் கின்றன என்று கொள்க."†

## காயும் பழமும்

பத்திரிகையில் உணர்ச்சி தோன்ற எழுதுவதற்காகத் தோற்றுவிக்கப்பெற்ற நடை நாளாவட்டத்தில் பளபளப் புடன் இருந்த மாங்கனி மெல்லத் தோல் சுருங்குவது போலச் சுருங்கிக் கவிதை வடிவம் கொள்ளலாயிற்று. காய்ப் பருவத்தில் அதே மாங்காயின் சுவை வேறு. அதனை நினைப் பவர் நாவில் நீர் ஊறச்செய்யும் இயல்பு உண்டு. ஆனால், பல்லையும் கூசவைக்கும். பல் கூசுவது பற்றிக் கவலைப் படாமல் அதனைத் தின்னும் பருவத்தில் உள்ளவர்கட்கு மாங்காய் கிடைத்தற்கரிய பொருளே! அதே மாங்காய் பழுத்து, நன்கு கனிந்து, தோல் சுருங்கி, முற்றிலும் கொழுஞ்சாறாக ஆயின நிலையில் சுவையும் மிகுதி; அனைவரும் அதனை உண்ணலாம் உண்ண விரும்புபவர்க்கு

† 'பரம்பொருள் அல்லது வாழ்க்கை வழி', ப. 102–103.

மாம்பழம் மாங்காயைப்போல உணர்ச்சி வெறியூட்டுவதில்லை. ஆனால், பெரும் பயன் விளைக்கிறது.

அதேபோலத் திரு.வி.க.வின் பத்திரிகை நடைவாயில் நீர் ஊறச்செய்யும் மாவடுபோன்றது. இவ்வாறு கூறுவதால் அதன் இயல்பும் பயனும் எவை என்பதையே குறிக்கிறேன். அந்த நடையின் வளர்ச்சியில் பிற்காலத் தெழுந்த நூல் நடையில் அறிஞரின் மன வளர்ச்சியை, ஆழ்ந்த அனுபவத்தைக் காண முடிகிறது.

## கவிதைத் தோற்றம்

உரைநடை எழுதுங் காலத்தில் தாமே சிந்தித்துச் சிந்தனையை உடனே எழுத்தில் வடித்துவிட்டார் அறிஞர். பிற்காலத்தில் பார்வை பழுதாகிவிட்ட நிலையில் தாமே எழுத்து வேலையை மேற்கொள்ள முடியாத நிலையில் மில்டனைப்போல நீண்ட நேர சிந்தனையைச் சுருங்கிய கால அளவில் பிறரைக் கொண்டு எழுதுவிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அவ்வகைப் பணிக்குக் கவிதையே சிறந்த சாதனமாக அமைந்தது.

இவ்வாறு கூறியவுடன் கண் பார்வை மங்கிவிட்ட காரணத்தால்தான் திரு.வி.க. கவிதைமூலம் கருத்துகளை வெளியிடத் தொடங்கினார் போலும் என்று நினைத்துவிட வேண்டா. தேவையை முன்னிட்டுக் கவிதை எழுதியவரல்லர் அவர். 1931 முதல் 1953 வரை கவிதைகள் புனைந்துள்ளார். அந்நூல்களிலும் அவருடைய வளர்ச்சியைக் காணமுடிகிறது. கவிதை நூல்களின் பட்டியல் இதோ தந்துள்ளேன்:

| | |
|---|---|
| 1931இல் | உரிமை வேட்கை அல்லது நாட்டுப்பாடல் |
| 1932இல் | முருகன் அருள் வேட்டல் |
| 1938இல் | திருமால் அருள் வேட்டல் |
| 1942இல் | பொதுமை வேட்டல் |

| | |
|---|---|
| 1945இல் | புதுமை வேட்டல் கிறிஸ்துவின் அருள் வேட்டல் |
| 1947இல் | சிவனருள் வேட்டல் |
| 1948இல் | கிறிஸ்துமொழிக் குறள் |
| 1950இல் | இருளில் ஒளி அருகன் அருகே அல்லது விடுதலை வழி இருமையும் ஒருமையும் |
| 1951இல் | சித்தந் திருந்தல் அல்லது செத்துப் பிறத்தல் முதுமை உளறல் |
| | பொருளும் அருளும் அல்லது மார்க்கிஸமும் காந்தியமும் |
| 1953இல் | வளர்ச்சியும் வாழ்வும். |

*1931இல் எழுந்த 'உரிமை வேட்கை' என்ற நூலிலிருந்து ஒரு பாடல் இதோ; இதில் அவருடைய தாய்மொழிப் பற்று விளங்குகிறது.*

*"வடிவினிலே பெரியள்யான்; வயதினிலே பெரியள்;*
*வளத்தினிலும் வண்மையிலும் மக்களிலும் பெரியள்;*
*கடியரணில் மலையரணில் கடலரணில் பெரியள்;*
*காலினிலே தளைவந்த காரணந்தா னென்னே?*
*படியினிலே இல்லாத பாழான சாதி*
*பகுப்புடனே, தீண்டாமை, பாவையர்தம் அடிமை*
*கொடியஇவை குடிகொண்டு கொடிகொடியாய்ப் படர்ந்தே*
*கொல்லவுடன் பிறப்பன்பைக் குலைத்ததென்றன்*
*வாழ்வே."**

*1938இல் எழுந்த 'திருமால் அருள் வேட்டலி'லிருந்து ஒரு பாடல், இதில் சிறந்த ஓசை நயம் அமைந்துள்ளது:*

*"தொன்மையில் மிகுந்த துவரையை யாண்ட*
*சோதியே சுடர்விளக் கொளியே*

* 'நாட்டுப்பாடல்', பக்கம் 16; பாடல் 9.

*பன்மையில் மயங்கும் பாரினில் ஒருமைப்*
*பார்வையே பெறுநிலை விழைந்தேன்*
*நன்மையே புரிய நாதமாந் தேரை*
*நடத்திய வள்ளலே அருளாய்*
*மென்மையு ளல்லிக் கேணியில் மேவும்*
*மேலவா சீலநா யகனே."†*

*1942இல் எழுந்த 'பொதுமை வேட்டலி'லிருந்து ஒரு பாடல். மனக்கசிவை வெளியிடும் பாடல் இது:*

*கல்வியில் வீழ்ந்தேன் கலைகளில் வீழ்ந்தேன்*
*கருணையில் வீழ்ந்திலேன் பாவி*
*செல்வமோ இல்லை செற்றினில் வீழத்*
*திருவருட் டுணையென மகிழ்ந்தேன்*
*பல்வகைக் களியில் படருறா நெஞ்சம்*
*பரமனே அளித்தனை வாழி*
*தொல்வினை அழிந்தால் நல்லுடல் பெறுவேன்*
*தொடர்ந்தனன் பிழைபொறுத் தருளே."‡*

*1950இல் பிறந்த 'இருளில் ஒளி' என்னும் நூலிலிருந்து எண்ணத்தின் உயர்வை அறிவிக்கும் குறள் நான்கு:*

*"தேவைக்கு மேலெண்ணாச் சிந்தை, உயர்வெண்ணம்*
*மேவிட உந்தவிடும் மேல்"* (1)

*'தேவைக்கு மேல்நினையாச் சித்தம் செகமானால்*
*யாவும் ஒழுங்குபடும் அன்று'* (2)

*தேவைக்கு மேலே திரட்டும் இடங்களில்*
*தாவும் கொலை, களவு சார்ந்து'* (3)

† 'திருமால் அருள் வேட்டல்', பக்கம் 28; பாடல் 3.
‡ 'பொதுமை வேட்டல்', பக்கம் 75; பாடல் 3.

'தேவைக்கு மேலுன்னாச் செம்மை ஒழுக்கத்தின்
ஆவி; அருளாட்சி ஆம்.'*
(4)

1953ஆம் ஆண்டில் திரு.வி.க. அவர்கள் உலக வாழ்வை நீப்பதன் முன்னர் எழுதிய 'வளர்ச்சியும் வாழ்வும்' என்ற நூலில் ஒரு பகுதியை இங்கே காணலாம். மனிதனுடைய வீழ்ச்சியை மனம் நொந்து எடுத்துக் கூறியுள்ளார் இங்கு:

"பகுத்தறி வற்ற வகுப்புயி ரெல்லாம்
தளர்ச்சி யின்றி வளர்ச்சி யடைதலென்?
இயற்கை வாழ்வின் பயிற்சி போலும்;
மக்கள் வளர்ச்சியில் சிக்கல் உறுதலென்?
பகுத்தறி வுடைய வகுப்போ காரணம்?
செயற்கை வாழ்க்கையில் பயிற்சி பெற்றான்
வளர்ச்சி வாழ்வில் தளர்ச்சி யடைந்தது;
மனித்தன் என்றோ சனித்து விட்டான்;
காலங் கணித்துக் கோலல் அரிதே.
எத்தனை யுகமோ? எத்தனை ஊழியோ?
இன்னும் அவன்வாழ் தொன்மை உலகம்
தெய்வ மயமாய் உய்ய வில்லை.
சாந்தம் முற்றும் ஏந்த வில்லை.
என்ன காரணம்? உன்னிப் பார்க்க;
மனிதன் முதல்முதல் இனிது வாழ்ந்தான்
உழைக்கும் உழுதும் பிழைத்து வந்தான்ற
ஒருவன் பொருளை ஒருவன் கவரும்
கல்வி பயிலாச் செல்வம் பெற்றான்.
கொலையுங் களவுங் கள்ளுங் காமமும்
பொய்யும் அற்ற மெய்யில் நின்றான்
சுரண்டல் வாழ்வில் புரண்டா னில்லை

* 'இருளில் ஒளி', பக்கம் 32, 33; குறள் 27, 28, 29, 30

*'பின்னே கெட்டான்; என்னே செய்வது?
ஒருவன் பொருளை ஒருவன் கவரும்
இழிவு வளரும் வழியைக் கண்டான்;
கொலையுங் களவுங் கள்ளுங் காமமும்
பொய்யும் வாழ்வில் மொய்த்துக் கொண்டன
சுரண்டல் வாழ்வு திரண்டு மதர்த்தது
செயற்கை வாழ்க்கையில் பயிற்சி பெற்றான்
வளர்ச்சி வாழ்வில் உணர்ச்சி யற்றது;
ஞாயிறும் திங்களும் மாபே ருடுக்களும்
சொள்ளி நிபுலையும் வெள்ளி வீதியும்
பிறவும் விண்ணில் முறையே துணைசெய்—
மலையும் காடும் வயலும் கடலும்
மண்ணில் சூழ்ந்து நண்ணித் துணைசெய—
வளர வந்தவன் தளர்ந்து வீழ்ந்தான்;
சுரண்டல் வாழ்வில் புரளு கின்றனன்
அத்தைப் பயிலும் வித்தை எங்கும்
அரசுகள் எங்கும் முரசுகள் எங்கும்
குண்டுகள் எங்கும் தண்டுகள் எங்கும்
எத்தனை போர்கள்? எத்தனை மரணம்!
அச்சோ! மனிதன் செத்தே போனான்!'***

இதுவரை எடுத்துக்காட்டப் பெற்ற பாடல்கள் எந்த ஒரு முறைபற்றியும் தொகுக்கப்படவில்லை. பாடல் பாடும் திறத்தில் அறிஞர் எங்ஙனம் வளர்ந்துள்ளார் என்பதைக் காட்டவே இவ்வெடுத்துக்காட்டுகள்.

## கவிஞர் திரு.வி.க.

காவிய உள்ளம் படைத்தவர் திரு.வி.க. கவிஞனின் கற்பனைக் கண்கொண்டு மானிட வாழ்க்கையையும்,

* 'வளர்ச்சியும் வாழ்வும்', பக்கம், 22, 23.

மனிதனுடைய வரலாற்றையும், அவனுடைய சிறுமையையும், அவன் இருக்கவேண்டிய பெருமையையும், அவன் வீழ்ச்சியின் காரணத்தையும் நன்கு ஆய்ந்துள்ளார். இயற்கை வழிபாட்டையும் சமரச மனப்பண்பையும் கொண்டு அறவழி நின்றால்ஒழிய, தன் பிழையை நினைந்து கதறி அழுதா லொழிய மனிதனுக்கு உய்கதி இல்லை எனப் பெரியார் கண்டு பாடுகிறார். பல பாடல்களில் ஓசை நயம் இயல்பாக அமைந்துகிடக்கக் காண்கிறோம். கவிஞனுக்குரிய அனைத் துலக நோக்கமும் பெரியாரிடம் இருக்கின்றது. என்றாலும், திரு.வி.க.வை ஒரு மாபெரும் கவிஞர் என்று கூறமுடியாது. தமிழ்நாட்டிலும் ஏன் இந்தியாவிலேயே தோன்றிய தீர்க்க சிந்தனையாளர்களுள் ஒருவர் என்றும், ஒப்புயர்வற்ற எழுத்தாளர் என்றும், இக் காலத்துக்கேற்ற முறையில் சமரச சன்மார்க்கங் கண்ட சீலர் என்றும் கூறினால் அது மிகையாகாது. என்றாலும், சாதாரணக் கவிஞர் என்றுதான் அவரைக் கூறல் வேண்டுமே தவிரச் சிறந்த கவிஞர் என்று கூறவியலாது.

## உரையாசிரியர்

முன்னர்க் கூறிய அந்தணைத் துறைகளிலும் புகுந்து புறப்பட்ட பெரியார் உரையாசிரியப் பணியையும் மேற் கொண்டுள்ளார். இவற்றுள் பெரிய புராணத்துக்குக் குறிப்புரை எழுதியதும் திருக்குறளுக்கு விளக்கவுரை எழுதியும் அவருடைய நுண்மாண் நுழைபுலத்தை அறிவுறுத்தி நிற்கின்றன. 1907 முதலே பெரிய புராணத்துக்குக் குறிப்புரை எழுதி வந்தார்.

‘உலகெலாம்’ என்று தொடங்கும் முதற் பாட்டிற்கு முப்பத்து நான்கு பக்கங்களில் விரிவுரையும் ஏனைய பாடல்கட்குக் குறிப்புரையும் எழுதியுள்ளார். பாயிரத்தின் தொடக்கத்தில் அவர் எழுதும் சில தொடர்கள் நெஞ்சை உருக்கும் நீர்மையன:

"அடியேன் அறியாமையுடையவன், அறியாமை யினின்றும் முழு விடுதலையடையும் பேறு எனக்குக் கிட்டுமோ அறிகிலேன். ஒரோவழி அவ்வப்போது நேருஞ் சிறுசிறு விடுதலையால் பெரியோர்தம் உள்ளத்தை உள்ளவாறு உணர்தல் அரிது. பெரியராகிய சேக்கிழாரை உள்ளவாறு உணர்தற்கு, அறியாமை ஒடுங்கி, நிலைத்த மெய்யுணர்வுச் சுடர் எழுதல் வேண்டும். இஃது இதுகாறும் பெற்ற ஆராய்ச்சி அநுபவங்களால் நன்கு தெரிகிறது. சேக்கிழார் பெருமான் தெய்வப் புலவர்; திருவருட் செல்வர்; அன்புக்கடல். அவர்தம் பெருமை அளப்பரிது. அவரைக் காண்டற்குத் தெய்வப் புலமை வேண்டும்; திருவருட் செல்வம் வேண்டும்; அன்பு வேண்டும். இவையில்லா ஒருவன் தெய்வச் சேக்கிழார் உள்ளத்தை எங்ஙனம் காண்டல் கூடும்?"*

'உலகெலாம்' என்ற சொற்கள் இறைவனால் கூறப்பெற்றது என்று சேக்கிழாரே கூறியுள்ளார். இயற்கையின் சிறந்த இந்நிகழ்ச்சியைப் பற்றிப் பெரியார் ஒரு சிற்றாராய்ச்சி நடத்துகின்றார். அதன் முடிவில் பூத தத்துவச் சேட்டைகளினின்றும் விடுதலை பெற்ற பெரியார்கள் வானிழல் துணையைப் பெற்றுள் ளார்கள் என்றும், அயரா அன்பில் அரன்கழல் போற்றித் தத்துவக் குறும்புகளினின்றும் விடுதலை பெற்றுச் சிதாகாசத் தொடர்புகொண்ட சேக்கிழார் பெருமான் மனத் தெளிவுபெற்ற சித்தராய் விட்டார். எனவே, ஆகாயத்தே தோன்றும் நுண் ஒலிகளைக் கேட்பது அவரைப் பொறுத்தமட்டில் புதுமையான தன்று என்ற புதிய கருத்தை வெளியிடுகிறார் பெரியார்.

"சேக்கிழார் பெருமான், சிவபத்தி சிவனடியார் பத்தியான் சீவகரணங்கள் எல்லாம் சிவகரணங்களாய்

* 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 3

பெற்ற திருவருட்செல்வரானமையான், ஆண்டவனருள், வானிற் பதிந்திருந்த மெய்ம்மையை 'உலகெலாம்' என்னும் மெய்ம்மொழியால் அவருக்கு வழங்கிற்றென்க."*

இனி, பாடலின் முதல் அடிக்குமட்டும் பெரியார் பல பக்கங்கள் பொருள் எழுதிச் செல்கிறார். ஒரு பகுதியை மட்டும் கீழே தருகின்றேன்.

"உலகெலாம்' தோன்றும் இடமெது? ஓம் அன்றோ? ஓங்காரத்துள்ளே உதித்த ஐம்பூதங்கள்— ஓங்காரத்துள்ளே உதித்த சராசரம்' என்றார் திருமூலர். 'உலகெலாம்' என்பது சிறப்பாக நூலின் முதலிடை கடையிலும் பொதுவாக வேறு பலவிடங்களிலும் ஒளிர ஆசிரியர் அருளியிருத்தலை ஆராய்க.

பாட்டின் முதற்கண் உகரம் ஒலித்து ஒளிர்கிறது. உகரம் பிரணவ எழுந்து மூன்றனுள் ஒன்று. அ, உ, ம் —இம்மூன்றுஞ் சேர்ந்த ஒன்றே ஓம் என்னும் பிரணவம். இம்மூன்றெழுத்துக்களும் தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலைக் குறிப்பன. நடுவணதாகிய உகரம் நிலைப்பின் அறிகுறி. நிலைப்பின் விழுப்பம் தெரிக்க உகரம் முதற்கண் அமைந்தது போலும்! இருளினின்றும் படைக்கப்படும் உயிர்கள், மீண்டும் இருளில் ஒடுங்காது வீடுபேறெய்தல் வேண்டுமென்பதே படைப்பின் நோக்கமாகும். அந் நோக்க நிறைவேற்றத்துக்கென்றே நிலைப்பு நடுவில் நிற்கிறது. நிலைப்பில், வீடுபேற்றுக்கென வாய்ப்புகளும் வழங்கப்படுகின்றன. அவைகளை நல்வழியில் பயன்படுத்தாத உயிர்கள் இடையில் இடர்ப்படுகின்றன. வீடுபேற்றிற்குரிய வாய்ப்புகள் நிலைப்புக்

* 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 11

கண்ணிருத்தலால், அது விழுப்பமுடையதாகிறது. அவ்விழுப்பத்தைத் திருமூலர், 'அகார முதலாக ஐம்பத் தொன்றாகி—உகார முதலாக ஓங்கி உதித்து' என்றும், 'அகார முதலா அனைத்துமாய் நிற்கும்—உகார முதலா உயிர்ப்பெய்து நிற்கும்' என்றும், 'அகாரம் உயிரே உகாரம் பரமே' என்றும் அருளியிருத்தல் காண்க. உலகெலாம் உய்தல் வேண்டும் என்னும் மங்கல ஒலியாக உகரம் முதற்கண் பொலிகிறது."*

அடுத்து 'ஓதற்கு அரியவன்' என்ற பகுதிக்குப் பொருள் விரிக்கின்றார்:

"மெய்யுணர்வு பெறாத உயிர்கள், ஆண்டவனை யுணர்ந்து ஓதல் அரிது. கரணங் கடந்த மெய்யுணர்வு பெற்றோர் ஆண்டவனுண்மையை உணர்தல் இயலும்; ஆனால், அவர்களாலும் அதனை ஓதல் இயலாது. ஓதலில் அடங்குவது எல்லையுடையது. ஆண்டவனோ எல்லையில்லாதவன். அவன் இன்பமும் எல்லை யில்லாதது. எல்லையிலா ஒன்றை எங்ஙனம் எல்லைப் படுத்தி ஓதுவது? அதனால் அவ்வொன்று ஓதற்கரிய தாகிறது. இதனை அநுபூதிமான்களின் மெய்ம் மொழி களால் உணரலாம். 'ஓத உலவா ஒரு தோழன்', 'ஏதவனைப் பாடும் பரிசு', 'ஆழ்ந்து அகன்ற நுண்ணி யனே', 'மாற்ற மனங் கழிய நின்ற மறையோனே', 'நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே', 'சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க, 'சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க', 'அரியதில் அரிய அரியோன் காண்க', 'போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே', 'சொல்லற் கரியானை', 'சொற்கழிவு பாதமலர்', 'ஒன்றுநீ யல்லை அன்றி யொன்றில்லை யாருன்னை அறிய கிற்பாரே', 'உணர்ந்தாற் குணர்

* 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 15.

வரியோன்' —மாணிக்கவாசகர்; 'நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி நலஞ்சுடரே நால்வேதத் தப்பால் நின்ற—சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை' —திருநாவுக்கரசர்; 'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்—கேட்பான் புகில் அளவில்லை' —திருஞான சம்பந்தர்; 'யார் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை—யார் அறிவார் அந்த அகலமும் நீளமும்—பேரறியாத பெருஞ்சுடரே ஒன்றதின்—வேரறியாமல் விளம்புகின்றேனே'—திருமூலர்."*

அடுத்து 'நிலவுலாகிய நீர்மலிவேணியன்' என்ற பகுதிக்கு விளக்கம் தரத் தொடங்கி, 'நிலவு, நீருடன் அவைகளின் இனமாய பிறவற்றையுங் கொள்க. அவை மண், தீ, காற்று, வான், ஞாயிறு, உயிர் என்பன. இவை எட்டும் அட்டமூர்த்தம் எனப்படும். அட்டமூர்த்தமாவது ஆண்டவன் இயற்கை வடிவினன் என்பதை அறிவுறுத்துவது. உலகு — மண்ணையும், சோதி — தீயையும் ஞாயிற்றையும், அம்பலம்—வானையும், ஆடுதல்—காற்றையும், வாழ்த்தி வணங்கல்—உயிரையும் நினைவூட்டும் சொற்குறிகள் என்றும் கொள்ளலாம். இம் முறையில் அட்டமூர்த்தத்தின் அடிப்படைக் கருத்தை விளக்கி அருளிய பெரியார், மனம் உள்ளவரை தோற்றமும், மனம் இறந்தால் தோற்ற மறைவும் ஏற்படுதலை விளக்கப் புகுந்து, முதல் இரண்டடிகளுக்கு மிகச் சீரிய முறையில் பொருள் விரிக்கின்றார். 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்று நினைக்கும்போது உள்ளத்தில் ஒன்றும் தோன்றாது. 'நிலவுலாவிய நீர்மலி வேணியன்' என்று நினைக்கும்போது உள்ளத்தில் ஒன்று தோன்றும். அத்தோற்றம் வழிபாட்டிற்கு இன்றியமையாதது. தோற்றத்தைக் கொண்டே தோற்றாமையை உணர்தல்

* 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 17, 18.

வேண்டும். ஆதலால் நிலவுலாவிய நீர்மலி வேணியனைக் கொண்டே உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவனை உணர்தல் வேண்டும். இதனால் உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் என்பதற்கும் நிலவுலாவிய நீர்மலி வணியன் என்பதற்கும் தொடர்பு இருத்தல் காண்க அத்தொடர்பு இயற்கை வழி இறைவனை உணர்த்துவது என்று விரிவுரை செய்துள்ளார்.

பெரியார் அவர்கள் ஏறத்தாழ ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பதினெட்டாம் ஆண்டில் இருந்தே இயற்கை வழிபாட்டையும் அதன்மூலம் இறைவனை அடையும் வழி பற்றியும் பேசியும் எழுதியும் வந்துள்ளார். தேவாரம், பிரபந்தம் முதலிய நூல்களில் இறைவனை 'அட்டமூர்த்த மாகி' என்றும், 'வேறாய் உடன் ஆனான் இடம்' என்றும் ஆயிரக்கணக்கான இடங்களில் பாடியிருந்தும் அதனைப் பாராயணம் செய்கின்ற பலரும் இத்துணைச் சிறந்த வழியை நம் முன்னோர் காட்டியிருப்பதை உணரவில்லை.

இனி, 'அம்பலத்தாடுவான்' என்ற தொடருக்குப் பிறரெல்லாம் திருவம்பலத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்கின்றவன் என்றே பொருள் கொண்டனர். ஆனால், பெரியார் அவர்கள் இதன் எதிராகத் தமக்கே உரிய முறையில் பொருள் விரிக்கின்றார்:

> " 'அலகில் சோதியன்' உலகு உயிர்கள் எல்லாவற்றினும் ஆங்காங்கே நின்று நின்று, அதற்கு அதற்கு ஒளி வழங்கி, அதனை அதனை இயக்கலான் 'அம்லபத்தாடுவான்' என்றார். அம்பலமாவது உலகெலாம் என்க. எங்கும் அம்பலம்; எல்லாம் அம்பலமென்க. இதனை, 'அம்பலமாவது அகில சராசரம்—அம்பலமாவது ஆதிப் பிரானடி—அம்பலமாவது அப்புத்தீ மண்டலம்—அம்பலமாவது அஞ்செழுத்தாமே', 'அண்டம் எழுகோடி பிண்டம்

எழுகோடி—தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி —எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி—அண்டன் நடஞ்செயும் ஆயைந்தானே', 'காளியோ டாடிக் கனகாசலத் தாடிக்—கூளியோ டாடிக் குவலயத் தேயாடி—நீடிய நீர்தீகால் நீள்வா னிடையாடி—நாளுற அம்பலத் தேயாடும் நாதனே', எங்குஞ் சிவமாயிருத்த லால் எங்கெங்குந்—தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே', 'ஆனந்த மாடரங் கானந்தம்—பாடல்கள் ஆனந்தம் பல்லியம் ஆனந்த ஆனந்தக் கூத்துகந் தானுக்கே' 'அண்டங்களோரேழும் அம்பொற் பதியாகப்—பண்டையாகாசங்களைந்தும் பதியாகத் —தெண்டினிற் சக்தி திருவம் பலமாகக்—கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானே', 'இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்—நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்—படங்கொடு நின்றவிப் பல்லுயிர்க் கெல்லாம்—அடங்கலுந் தாமாய் நின்றாடுகின் றாரே', 'இருதயந் தன்னில் எழுந்த பிராணன்—கரகர ணாதி கலக்கும் படியே—அரதனமன்றினின் மாணிக்கக் கூத்தன்—குரவனாய் எங்கணுங் கூத்துகந் தானே' என வரூஉந் திருமூலர் திருவாக்குகளால் தெளிக."*

அடுத்து மலர் சிலம்படி என்ற தொடருக்கு மலர் போன்ற சிலம்படி என்று பலரும் பொருள் கூறாநிற்ப, பெரியார் அவர்கள் அதனை வினைத்தொகையாக்கி அண்ட சராசரம் முழுவதும் அவனுடைய திருவடி, அதாவது திருவருள் விரிந்து பரந்து இருத்தலை விளக்குகின்றார். மலர் சிலம்பை வினைத்தொகையாகக் கொண்டமையின், மலர் என்ற காலம் கரந்த பெயரெச்சம் சிலம்புக்கு அடையாகி, புலனடக்கி ஏகாக்கிரகச்சித்தர்களாக அமைதியில் திளைத்

* 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 22, 23.

திருப்போர் அனைவர் உள்ளத்திலும் மலர்மவதற்குக் காரண மான ஓங்கார ஒலி என்ற பொருளைத் தருதல் காண்க. பெரியார் அவர்கள் மலர் சிலம்பை வினைத்தொகையாக்கி யமையின் மலர் சிலம்பு அடி என்றும், சிலம்படி, என்றும், மலரடி என்றும் பொருள் கொள்ள வாய்ப்பிருக்கிறது. இந்த நிலையில் இதே கருத்தைக் கம்பநாடன் கூறியிருப்பதையும் நினைவில் கொணர்தல் சாலப் பொருத்தமேயாகும்.

"வேதங்கள் அறைகின்ற உலகெங்கும் விரிந்தன நின்
பாதங்கள் இவையென்னில் படிவங்கள் எப்படியோ?"*

"உலகெலாம் உணர்த்து ஓதற்கரியவன்
நிலவுலாகிய நீர்மலி வேணியன்"

என்ற இவ்விரண்டினையும் வைத்துக்கொண்டு இறை வனின் இலக்கணத்தையும், உயிர்களின் இலக்கணத்தையும், உயிர்களைப் பற்றி நிற்கும் பாசமாகிய அறியாமையின் இலக்கணத்தையும் நன்கு விளக்குகின்றார் பெரியார்:

'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்னும் முதலடியிலேயே முப்பொருளின் இயல்கள் குறிப்பாக விளங்குகின்றன. உலகெலாம் என்றது உயிர்களை, உயிர்கள் இறைவனை உணர்ந்து ஓதற்கு இயலாமை அவற்றின் அறியாமையைக் காட்டுகிறது. 'அரியவன்' என்பது ஆண்டவனை உணர்த்துகிறது.

ஆண்டவன், அரியவனாயினும், எல்லா வற்றையுங் கடந்து நிற்கும் அகண்ட சொருபனாயினும், அவன் உலகு உயிர்களுடன் கலவாது பிரிந்து நிற்கின்றானில்லை. 'உலகெலாமாகி வேறாய் உடனு மாய்' என்பது சிவஞான சித்தியார், உடனுள்ள

* 'கம்ப இராமாயணம்', விராதன் வதைப் படலம்.

ஒன்றை உணர இயலாதிருக்கும் உயிரின் சிறுமை என்னே! என்னே!"†

இப் பாயிரத்தின் உரை முழுவதையும் ஆர அமர இருந்து கற்போர், பெரியார் அவர்களின் இலக்கண இலக்கிய அறிவோடு சாத்திர அறிவும் எத்துணைப் பரந்தும் விரிந்தும் உள்ளது என்பதை அறிய முடிகிறது சரியை. கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை நிலையிலும் உள்ளவர் அனை வருக்கும் இவ்வொரு பாடல் மூலம் வழி வகுக்கின்றார் தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் என்பதைப் பெரியார் அழகாக இதோ விளக்குகின்றார்:

"சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்து அல்ல. அவை ஒன்றுடன் ஒன்று தொடர்புடைய. அத்தொடர்பு வழியே மக்களின் சமய வாழ்வும் அரும்பி மலர்ந்து காய்த்துக் கனியும். 'விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ் ஞான நான்கும் அரும்பு மலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே' என்பது தாயுமானார் திருவாக்கு.

இவை 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்' என்பதிலும் விளங்குகின்றன. 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்' என்பதை நான்கிலும் பொருத்திக் கொள்க. 'நிலவுலாவிய நீர்மலி வேணியன்றன்" மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கலாவது, மனமொழி மெய்களால் திருவடி தொழுதல். 'அம்பலத்தாடு வான்றன்' மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கலாவது, திருவடியைத் திருவருளாக வேண்டி நிற்பது. 'அலகில் சோதியனது' மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கலாவது, புறமறைந்து ஓசை ஒலியால் ஒளி தோன்ற, அகமலர, அம்மலரில் வண்டெனப் படிந்திருத்தல். 'உலகெலாம்

† 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 28.

உணர்ந்தோதற்கரியவனது' மலர் சிலம்படி வாழ்த்தி வணங்கலாவது. அகப்புற வேற்றுமையின்றிக் காண்டல் கேட்டல் முதலிய வுணர்வின்றித் தான் வேறு சிவம் வேறு என்னும் எண்ணமின்றி, இரண்டற்ற நிலையில் நிரதிசயானந்தத்தில் தேங்கிக் கிடப்பது.

'மலரடி' என்பதை ஞானத்துக்கும், 'சிலம்படி, என்பதை யோகத்துக்கும், 'அடி வாழ்த்தலை'க் கிரியைக்கும் 'அடி வணங்குவோம்' என்பதைச் சரியைக்கும் கொள்ளுமுறையிலும் 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்' என்பது அமைந்திருக்கிறது."*

இம்முறையில் பாடல் முழுவதற்கும் பல பக்கங்கள் பொருள் விரித்த திரு.வி.க. அவர்கள் இதுவரையில் பெரிய புராணத்துக்கு உரைவகுத்த யாரும் செல்லாத நிலைக்குச் சென்று 'இத்தகைய நூல் எவர்க்குரியது? உலகில் உள்ள அன்பர்க்கெல்லாம் உரியதென்பது அதன் உள்ளுறையால் புலனாகும். உலகெலாம் என்று ஒலித்தெழும் குறிப்பே, உலகில் உள்ள அன்பர்கட்கெல்லாம் இந்நூல் உரியதென்பது அறிவிப்பதாகிறது. அப்பாலும் அடிசார்ந்தார் புராணமும் பிறவும் இக்கூற்றை வலியுறுத்தல் காண்க. உலகெலாம் என்னும் மெய்யறிவு விதையினின்றும் எழுந்த பெரிய புராணம் என்னும் அன்பு மரம், தனது அருள் நிழலை எல்லார்க்கும் வழங்கும் பெற்றியது என்க.

பெரிய புராணத்தின் பொதுத் தன்மைபற்றி இவ்வாறு இருப்பவும், இதனை ஒரு குறிப்பிட்ட சமயத்தாருக்குரிய நூலாக்கி, இதனைக் கற்பவர் சிவதீட்சை முதலிய கட்டுப்பாடுகளைப் பெற்றவராக இருத்தல் வேண்டும் என்றெல்லாம் எழுதிய குறுகிய நோக்காளர் எங்கே? அனைத் துலகத்திற்கும்—ஏன்?—அனைத்துச் சமயங்கட்கும் கூட

* 'திருத்தொண்டர் புராணம்', பக்கம் 29, 30.

இதனைப் பொது நூலாக்கிப் பொருள் கூறிய திரு.வி.க. எங்கே? சமரச சன்மார்க்கம் என்பது வேற்றுமையில் ஒற்றுமை காணும் விந்தைக்குரிய செயலே ஆகும். பெரிய புராணம் என்பது சைவர்கட்குரிய பன்னிரண்டு திருமுறை களில் ஒன்று என்றும், பிறவிச் சைவர்களே அதனைக் கற்பதற்குரிய அதிகாரிகள் என்றும், அவ்வதிகாரிகளாகப் பிறந்தவர்களுள்ளும் சிவதீக்கை முதலிய நியமங்களை மேற்கொண்டவர்களே இதனை ஓதும் தகுதி பெற்றவர்கள் என்றும் சொல்லிவந்தனர். மேலே கூறிய தகுதி பெற்ற வர்களும் பெரிய புராணத்தை ஓதினார்கள். ஆனால், வட மொழி மந்திரங்களை உச்சரிப்பது போலவே இதனையும் அன்றாடக் கடமையாகப் படித்தார்கள். ஒருவேளை பெரிய புராணம் அவர்கட்கு வீடுபேற்றை வழங்கியிருக்கலாம். ஆனால், மக்கட் சமுதாயம் அனைவரையும் ஒன்றாக்கி 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற குறிக்கோளுக்கு இலக்காக்கும் வழிகளுள் பெரிய புராணமும் ஒன்று என்ற பேருண்மையை முதற் பாட்டின் விளக்கவுரையின்மூலம் தமிழ் நாட்டிற்கும்—ஏன்?—அனைத்துலகத்திற்கும் வழங்கிய திரு.வி.க.வின் உரையாசிரியத் தன்மையும் வள்ளன்மையும் வாழ்வதாக!

'கடவுட் காட்சியும் தாயுமானாரும்' என்ற நூலில் 'ஐவகை எனும் பூதம் ஆதியை வகுத்து' என்ற பாடலுக்கும், 'இமயமலை அல்லது தியானம்' என்ற நூலில் தோடுடைய செவியன்' என்ற நூலில் நம்மாழ்வாரின் பாடலுக்கும் வியக்கத்தக்க முறையில், ஈடு எழுதிய பெரியவர்களை ஒப்ப உரை செய்துள்ள இப்பெரியார் திருக்குறளில் பாயிரத்துக்கும் அறத்துப் பாலில் இல்வாழ்க்கை முடிய உள்ள பகுதிக்கும் விரிந்த முறையில் உரை வகுத்துள்ளார்.

## திருக்குறள் விரிவுரை

உலகம் போற்றும் ஒப்புயர்வற்ற நூலாகிய திருக்குற ளுக்கு உரை கண்ட பெருமக்கள் அனைவரும், அந்நூலுக்கு

முப்பால் என்றே பெயர் இருப்பினும் வள்ளுவப் பெருந்தகை நான்காவதாக உள்ள வீட்டையும் கூறினார் என்று நிலை நாட்டுவதற்குக் 'கடவுள் வாழ்த்து', 'துறவு', 'நிலையாமை', 'மெய்யுணர்வு', 'அவாவறுத்தல்' முதலிய அதிகாரங்களை எடுத்துக்காட்டுவர். இப் பெருமக்களுடைய முயற்சியால் வள்ளுவப் பெருந்தகைமீது அவர்கள் கொண்டுள்ள அன்பு புலனாகிறது. திருவள்ளுவர் வீட்டுக்குத் தனிப்பால் வகுத்துக் கூறாமைக்குக் காரணம் என்ன என்னும் வினாவை எழுப்பிக்கொண்டு பெரியாரவர்கள் மிகச் சிறந்த முறையில் விடை காண்கிறார்:

"வீடு, வாக்கு மனங்கட்கு எட்டாதது, அத்தகைய ஒன்றை எவ் வாக்கல் விளம்புதல் கூடும்? இதுபற்றியே பரிமேலழகரும், '.....வீடென்பது சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத் தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது. இலக்கண வகையாற் கூறப்படாமையால், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்' என்று ஒருவாறு விளக்கிப் போந்தனர்.

அறவழி நின்று, பொருளாக்கி, இன்பம் நுகர் வோர் வீடு அடைதல் ஒருதலை. அறம் பொருள் இன்ப வாழ்வின் பயன் வீடு. அடைவாகவும் பயனாகவு முள்ள ஒன்றை எப்படிச் சொல்லால் அறுதியிட்டுச் சொல்வது? வீடு, அறம் பொருள் இன்பங்களினின்றும் வேறுபட்டு நிற்பதன்று. அது மூன்றிலும் விராவி நிற்பது. திருக்குறளிலுள்ள ஒவ்வொரு பாலிலும் வீடு விராவியே நிற்கிறது.

வீடு, வீடு என்னும் அடியினின்றும் பிறந்தது. விடுதலை வீடு, கட்டினின்றும் விடுதலையடைவது வீடு. வீடு எங்கிருப்பது? அதற்கென ஒரு தனியிடம் உண்டோ? கட்டுடையார்க்கு அது புலனாகாமையால், அவர் அதற்கென ஒரு தனியிடம் வகுத்தனர் போலும்!

வீட்டை மறைத்திருப்பது கட்டு, கட்டு அறுந்ததும் வீடு பொருளாகும்.

கட்டும், கட்டின் பாகுபாடுகளும் திருக்குறளில் சிலவிடங்களில் புகுந்திருக்கின்றன. 'இருள்சேர் இருவினை', 'அழுக்காறவா வெகுளி இன்னாச் சொல்', பிறப்பென்னும் பேதைமை', 'சார்புகெட்', 'காமம் வெகுளி மயக்கம்', 'பற்றுவிடற்கு' என வருஉந் திருக்குறள் மொழிகளை நோக்குக.

கட்டறுந்தால் மனம் மாசிலதாகும். மாசற்ற இடம் வீடாய்ப் பொலியும். இந் நிலையுற்றார்க்கு எல்லாம் வீடே. 'எந்நாளும் இன்பமே துன்பமில்லை, என்று அப்பரும், 'அருநரகவையும் நீ' என்று நம்மாழ்வாரும், 'பரலோகராச்சியம் உம்முடைய உள்ளத்திலிருக்கிறது' என்று கிறிஸ்து பெருமானும் அருளிய செம்மொழிகளை யுன்னுக. இம் மொழிகளை இப்பெரியார் யாண்டிருந்து அருளினர்? இவ்வுலகத் திலிருந்தே அருளினர். இவருக்கு இவ்வுலகம் எவ்வாறு தோன்றிற்று? வீடாகவே தோன்றிற்று. ஆதலால், வீடு என்பது ஓரிடத்தில் தனியே இருப்பதன்றென்க.

கட்டையறுத்தற்கு அறவழியில் நின்று, கல்வி பயின்று, தொழில் புகுந்து, பொருளீட்டி, இன்பம் நுகர்தல் வேண்டும். இச்செந்நெறியே வாழ்வுக்குரியது. இதுவே இயற்கை வாழ்வு. இந் நுட்ப முணர்ந்த அறிஞர், அறம் பொருள் இன்ப வாழ்வையே உலகுக்கு அறிவுறுத்தினர். இம்மூன்றிற் கலவாத வீடு ஒன்று தனித்திருப்பதாக அவ்வறிஞர்க்குத் தோன்றவில்லை. அறம் பொருள் இன்ப வாழ்வில் வீடு பொலிதல் அவர்க்கு நனி விளங்கிற்று. உண்மை கண்டவர் உண்மை உரைத்தல் இயல்பு.

அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றில் வீடும் விரவி வருமாறு கூறுவது பழைய முறை. பழைய நூல்கள் யாவும் இம்முறை வழியே பிறந்தன. இடைக்காலத்தில் தோன்றிய நூல்களும் உரைகளும் பழங் கொள்கையைக் கலக்கிவிட்டன. இதற்குக் காரணம் காலப்போக்கென்று கூறுவது பொருத்தம். திருவள்ளுவர் முப்பாலே வகுத்தருளினர்.

நாளடைவில் வீட்டைப்பற்றிய தனி நூல்கள் பெருகின. இவைகளுள் மிகச் சிலவே பழங் கொள்கைக்குத் துணை போவன. பல, அறம் பொருள் இன்ப வாழ்வில் பொருளற்ற நிலையாமையையும், இயற்கையை வெறுத்தல்—பெண்ணை வெறுத்தல் என்னும் போலித் துறவையும் நுழைத்து நல்வாழ்வுக்கு இடர் செய்தன. இந் நூற் பெருக்கால், அறம்—பொருள்— இன்ப வாழ்வு அருகுவதாயிற்று. மக்கள் எண்ணம், அறம் பொருள் இன்பக் கலப்பற்ற போலி வீட்டில்—வெறும் பாழில்—படிந்தது. இந் நாளில் உலகம் எக் காட்சி வழங்குகிறது? கொலையுங் களவுங் கள்ளுங் காமமும் பொய்யுந் தாண்டவம் புரியாத இடமும் உளதோ?

தனித்த வீடென்று அறம் பொருளின்ப வாழ்வை வெறுக்க ஏவும் நூல்களை இயற்றுவது பாவம். அறம் பொருள் இன்ப வாழ்வின் பயன் வீடாயிருத்தலான். வீட்டைத் தனியே பிரித்துக் கூறுவது எற்றுக்கு? இது வெறும் பாழைக் கூறுவதாக வாக்கு மனமுடைய மக்களால் கொள்ளப்படும். அறம் பொருள் இன்ப வாழ்வுக்குரிய நூல் செய்வோரே உலகுக்கு நலஞ் செய்வோராவர்.

அறம்—பொருள்—இன்பம் அற்ற தனித்த வீட்டு நூல்களால் உலகம் உற்ற அல்லல் போதும்; போதும்.

அறம் பொருள் இன்ப வாழ்வு, வீட்டை உணர்த்த வல்லது. ஆதலால் இந்நாளில் அறம் பொருள் இன்ப வாழ்வு, அதாவது இயற்கை வாழ்வு பெருகுதல் வேண்டும். இதற்கு உறுகருவியாகத் துணைபுரிய வல்லது திருவள்ளுவரது முப்பால் நூல்."*

இக் கருத்தைக் கூறி முடிந்த பின்னர், பெரியார், திருவள்ளுவர் நூல் மரபு கடந்தது; அது மண்பதைக்குரியது; அதை 'மரபு' என்னுஞ் சிறையில் புகுத்த முயல்வது அறமாவது என்றும் மனம் நொந்து நம்மை வேண்டிக் கொள்கிறார்.

'வான் சிறப்பு', 'நீத்தார் பெருமை', 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரங்கள் முறையே பொருள்—இன்பம்—அறம் ஆகிய மூன்றற்கும் அறிகுறியாக நிற்கின்றன என்று பெரியார் எழுதியது, மாபெரும் புரட்சிக் கருத்தெனவே கொள்ளலாம். இதைவிடப் புதுமையான கருத்து 'நீத்தார் பெருமை, காமத்துப்பாலின் தெளிவு என்பது எனது ஆராய்ச்சியிற் போந்த உண்மை' என்று அவர் எழுதியுள்ளதேயாகும்.

'கடவுள் வாழ்த்து' அதிகாரத்தின் உள்ளுறையும் அமைவும் கூறும் சிறப்பை அறிந்து சிந்தித்தல் வேண்டும்.:

'கடவுள் வாழ்த்'தில் கடவுள் எல்லாவற்றையுங் கடந்துள்ளமை, இயற்கையை உடலாக் கொண்டமை குருவினுள் கோயில் கொண்டமை. திருவடி போற்றல் ஆகிய நான்கு பொருள் பொலிதருகின்றன. முதல் நிலை வழிபாட்டுக்குரியதன்றாதலின் அதை முதற் பாட்டில் நுண்மையாகவும், இரண்டாவது வழி பாட்டுக்குரியதாயினும் அதன் பயன் சிலர்க்கே விளைவதாதலின் அதை இரண்டாம் பாட்டில் குறிப் பாகவும், மூன்றாவது பலர்க்குப் பயன்படுவதாதலின்

* 'திருக்குறள் (பாயிரம்) விரிவுரை', பக்கம் 12–15.

அதை மூன்றாம் பாட்டில் விளக்கமாகவும், நான்காவது செயலுக்குரியதாதலின் அதை ஏழு பாக்களில் விரிவாகவும் திருவள்ளுவர், 'கடவுள் வாழ்த்'தில் அருளியுள்ளதை ஆழ நினைந்து தெளிவுபெற வேண்டுவது மக்கள் கடமை."*

இனி, ஒவ்வொரு குறளுக்கும் அப்பெரியார் கண்ட விரிவுரையை உற்றுநோக்கினால், சிவஞான முனிவரும், பெரியவாச்சன் பிள்ளையும், பரிமேலழகரும் ஓர் உருக்கொண்டு வள்ளலாரின் சமரசமும் பெற்றுத் திரு.வி.க. என்ற. பெயருடன் போந்து உரை எழுதியதாகவே நினைய வேண்டியுளது. இவ்வாறு கூறுவது புனைந்துரை என்று தயைகூர்ந்து நினைந்துவிட வேண்டா.

## எழுத்தும் ஆதிபகவனும்

எழுதப்படுதலின் எழுத்து என்று பிறரெல்லாம் இலக்கணங் கூறுகையில், 'எழுவதால்' எழுத்து, அதாவது, நாதத்தினின்றும் ஒலியாகவும் வரியாகவும் எழுவது; முகிழ்ப்பது; ஆகுபெயர் என்றெழுதிய பெருமை திரு.வி.க.வையே சாரும். சாதாரண நெடுங்கணக்கில் காணப் பெறும் 'அகரம்' என்று பொருள் கோடாது நாதமூலமாகிய 'ஆதி அகரம்' என்று பொருள் விரிக்கும் பொழுதும் 'இவ்வண்டத்திலுள்ள பலகோடி உலகங்களையும் நேர்பட இயக்குதலின் ஆதிபகவன்' என்று பொருள் விரிக்கும் பொழுதும் பெயரிவாச்சன் பிள்ளையாகிறார் திரு.வி.க (ஆதி என்ற சொற்கு நேர் ஓட்டம் என்ற பொருள் உண்டு என்பதை யாரே மறுக்கவல்லார்? ஆனால், உலகை ஆதி செய்யும் பகவன்—அண்டங்கள் நிலைபிறழாமல் சுற்றிவருமாறு இயக்குபவன் பகவன் என்று பொருள்கூற ஒரு திரு.வி.க.தான் வர வேண்டும்)

---

* 'திருக்குறள் (பாயிரம்) விரிவுரை', பக்கம் 25.

## இறைவனின் மூன்று நிலை

வழிபாட்டுக்கு அப்பாற்பட்ட இறைவனுடைய வாசகங்கடந்த நிலை முதலாக மூன்று நிலைகளை 'ஆதிபகவன்' என்ற சொற்றொடரில் காண்கிறார் அறிஞர்:

*(அ) ஆதிபகவன் தனக்கோர் அதிகாரியின்றி எல்லாவற்றிற்கும் தானே ஆதியாய் நிற்கும் நிலை யொன்று. இது வாக்கு மனங் கடந்தது. வழிபாட்டுக் குரியதன்று.*

*(ஆ) ஆதியும் பகவனும் ஞாயிறாகப் பொரு ளுணர்த்துங்கால், அஃது ஆதிபகவன் இயற்கை வடிவினன் என்பதைக் குறிப்பதாகும். இந்நிலை வழி பாட்டிற்குரியது.*

*(இ) ஆதிபகவன் ஞானகுரு என்னும் பொருளில் நிற்கும்போது, அவனது குருநிலை விளங்குவதாகிறது.*

தக்க முறையில், காரண காரியத் தொடர்புடன் 'ஆதிபகவன்' என்ற தொடருக்கு இம்மூன்று பொருளும் கொள்ளலாம் என்று விரிவாக எழுதிவிட்டு, இறுதியில் இவ்வாறு சாரத்தை எடுத்துச் சுருக்கி வழங்குகின்ற நேரத்தில் திரு.வி.க. பரிமேலழகராகிறார்.

## எல்லாம் என்பது பற்றி

இனி 'எழுத்து எல்லாம்' என்ற சொல்லின் சிறப்பைக் கூறப் புகுந்து,

*" 'எல்லாம்' என்பது பெய்யப்பட்டிருத்தல் வெறுஞ் செய்யுளோசை நிரப்பலுக்கு மட்டுமன்று. எழுத்தெனக் கூறின், தாம் தமிழில் நூல் யாக்கப் போந்தமையான், மக்கள் 'எழுத்து' என்பதைத் தமிழெழுத்தென்று கொள்ளுதற்கு இடமுண்டாகு மென்று கருதி, அதைத் தகையவும், உலகிலுள்ள மொழிகளின் எழுத்துக்களையெல்லாங் குறிக்க*

வேண்டியும் ஆசிரியர் 'எழுத்தெல்லாம்' என்று விளக்க மாகக் கூறினர்."*

தருக்க முறையிலும் இத்துணைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும்பொழுது 'எழுத்து' என்னுஞ் சொல்லுக்கு வயிரக் குப்பாயம் இட்ட சிவஞான முனிவராகவே ஆகிவிடுகிறார் திரு.வி.க.

## பொறிவாயில்

அடுத்துப் 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்ற குறளுக்குச் செய்துள்ள விளக்கவுரை நம் அகக்கண்களைத் திறப்பதாகும். பரிமேலழகருங்கூட ஐந்தவித்தான் என்ற சொல்லுக்கு 'ஐந்து அவாவினையும் அறுத்தானுடைய' என்றே பொருள் கூறுகிறார். மேலும், 'இதனால் இறைவன் நெறி நிற்றல் செய்தார் வீடு பெறுவர்' என்றுங் கூறுகிறார். இக் கருத்தை ஏற்றுக் கொள்ளாமல் மறுத்து இப் பகுதிக்குப் புத்துரை காணப் புகுந்த திரு.வி.க. கீழ்வருமாறு எழுதுகிறார்:

"ஐம்புலனை அவித்தலாவது, ஐம்பபுலனையும் அடக்குவது; புலனை அறவே அழிப்பதன்று. புலன் களை அழித்தால் அவை அறிவற்ற பொருளாகும்.

நாவடக்கம், கையடக்கம் முதலிய வழக்குகளை நோக்குக. இவைகட்கு நாவழிவு கையழிவு என்னும் பொருளையா கொள்வது? 'நாவடக்கமா யிரு' 'கையடக்கமா யிரு' என்னும் வாசகங்கட்கு முறையே 'ஒன்றையுந் தின்னாதே', 'ஊமையா யிரு' என்றும், 'கையை வெட்டிக்கொள்', 'ஒன்றுஞ் செய்யாதே' என்றும் எவரே பொருள் கூறுவர்? 'பொருந்திய உணவை உண்', 'நல்லனவற்றைப் பேசு', 'திருடாதே', 'நல்லனவற்றைச் செய்' என்பனவல்லவோ அவ்வாசகங்களின் பொருள்? இவ்வாறே 'புலனடக்கம்'

* 'திருக்குறள் (பாயிரம்) விரிவுரை', பக்கம் 45.

என்பதற்கும் பொருள் கொள்க; புலன்களை நெறியில்லா நெறியில் செலுத்தாமையே புலனடக்க மென்பது; புலன்களை அழித்துக் கொள்வதன்று.

புலன்கள் அழிக்கத் தக்கனவாயின். அவை படைப்பில் அமையவேண்டுவதில்லை. அவை படைப்பில் அமைந்துள்ளன. படைப்பில் அமைந் துள்ளனவற்றை அழிக்கப் புகுவது இயற்கை நெறி பற்றி ஒழுகுவதாகுமோ? புலன்கள் அழிக்கப்படின் அவைகள் அசேதனமாகும்.

"அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சும் அடக்கில் அசேதனம் ஆகுமென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே"

என்றார் திருமூலர். ஆகவே, அவித்தல் என்பது அறவே அழிப்பதன்று; புலன்கள் தீய வழியிலுழன்று கொடுமை செய்வதை அடக்கி, அவைகளை நல்வழியில் செலுத்துவதென்க.

ஐந்தவித்துதான் எவன்? இறைவன் என்று சிலர் கூறுப. இறைவனுக்கு ஐந்து உண்டோ?

இறைவன் பிறப்பிறப்பு இல்லாதவன்; உருவம் அருவம் அருவுருவம் முதலிய எல்லாவற்றையுங் கடந்தவன்; மாற்ற மனங் கழிய நின்றவன். அவனுக்கு ஐம்புலனேயில்லை. புலனேயில்லா ஒருவனைப் புலனை அவித்தவன் என்று எப்படிச் சொல்வது?

'ஐந்தவித்தான்' என்றமையால், ஒருபோது ஐம்புலக் குறும்புடையனாயிருந்து, பின்னை அக் குறும்பை அவித்தவன் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறது. இறைவனோ புலனில்லாதவன். புலனே இல்லாதபோது, குறும்புக்கு

இடம் ஏது? ஆகவே 'ஐந்தவித் தா'னை எல்லாங் கடந்த இறைவன் என்று சொல்லுதல் பொருந்தாதென்க.

'ஐந்தவித்தான்' இறைவனல்லனாயின், 'அவன்' கடவுள் வாழ்த்தில் புகுந்திருத்தலென்னை என்னுங் கடா எழும். ஈண்டுக் கடவுளுக்குரிய மூன்று நிலையை உன்னின் உண்மை விளங்கும்."*

இனி 'ஒழுக்கத்து நீத்தார்' என்ற தொடரை ஆயத் தொடங்குகிறார் பெரியார். ஒழுக்கத்தில் நின்று அதன் ப்யனாக மனமாசுகளை நீத்தார் எனப்பொருள் விரிக்கின் றார். அக் கருத்தை நிலைநாட்டப் பின்வருமாறு கூறுதல் ஆய்தற்குரியது:

"நீத்தார் என்பதற்கு உலகை நீத்தாரென்றும், பெண்ணை நீத்தாரென்றும் பொருள் கூறுவோரு முளர். அக் கூற்று ஈண்டைக்கு ஏலாது. உலக வாழ் வையும், பெண்ணோடு வாழ்தலையும் நீப்பது துறவு என்னுங் கொள்கை எப்படியோ மக்களிடை நுழைந்து கொண்டது. அது மன்பதையில் நுழைந்த நாள்தொட்டு 'நீத்தல்' என்றதும், உலகையும், பெண்ணையும் துறத்தல் என்பது பொதுமக்கள் கொள்ளலானார்கள். உலகையும் பெண்ணையுந் துறப்பது இயற்கை வாழ்வுக்கு அரண் செய்வதன்று. திருவள்ளுவர் அறிவுறுத்துவது இயற்கை வாழ்வு. இயற்கை வாழ்வை அறிவுறுத்தப் போந்தவர் உலகையும் பெண்ணையும் துறக்குமாறு ஒருப்போதுங்கூறார். ஆகவே திருவள்ளுவர் நூலிற் போந்துள்ள நீந்தல்—துறத்தல் என்னுஞ் சொற்களுக்கு மனமாசுகளை நீத்தல்— துறத்தல் என்று பொருள் கொள்க.

* 'திருக்குறள் (பாயிரம்) விரிவுரை', பக்கம் 62, 63.

அறியாமைக் கட்டைப் போக்கவே ஆண்டவனால் உலகம் அளிக்கப்பட்டது. அதை நீத்தால் அறியாமை எங்ஙனம் அகலும்?

பெண் ஆண் சேர்க்கை, அன்பைப் பெருக்கித் தன்னலக் கட்டை அறுப்பது. அவ்வறவாழ்வை நீத்தால் தன்னலம் எங்ஙனம் அறும்?

மனமாசுகளை அகற்றுதற்கு உலக வாழ்வும், பெண் ஆண் சேர்க்கையும் இன்றியமையாதன. இது திருவள்ளுவர் உள்ளக் கிடக்கை. இவ்வுள்ளக் கிடக்கை திருக்குறளாகப் பரிணமித்துள்ளது.

மனமாசுகளை நீத்தற் பொருட்டு ஒழுக்கத்தில் நிற்கவேண்டுமேயன்றி உலகையும் பெண்ணையும் நீத்தலாகாது. உலகையும் பெண்ணையும் துறந்த தனி வாழ்வு, மக்களைத் தீயொழுக்கத்திற் செலுத்தும். உலக வாழ்வும், பெண்ணோடு வாழ்தலும் மக்களை நல்லொழுக்கத் துறையில் தண்ணச் செய்யும். இது குறித்துக் கூறுவது திருவள்ளுவர் நூல்."*

இதே முறையில் நம்மாழ்வாருடைய பாடல் ஒன்றனுக்கும், தேவாரப் பாடல் ஒன்றனுக்கும், தாயுமானார் பாடல் ஒன்றனுக்கும் விரிவுரை செய்துள்ளார் பெரியார். வேறு எந்தத் துறையிலும் செல்லாமல் உரையாசிரியராக மட்டுமே திரு.வி.க. இருந்திருப்பினும் அழியா இடம் ஒன்றைத் தமிழிலக்கிய உலகில் தமக்கெனத் தேடிக் கொண்டிருப்பார் என்பதில் ஐயமில்லை.

## மொழிபெயர்ப்பு

இறுதியாகப் பெரியார் செய்துள்ள மற்றொரு தொண்டையும் கூறி முடிக்க விரும்புகின்றேன். அதுவே

* 'திருக்குறள் (பாயிரம்) விரிவுரை', பக்கம் 240, 241.

மொழிபெயர்ப்புத் தொண்டாகும். மொழிபெயர்ப்பு என்பது இற்றை நாளில் பெரிதும் போற்றி ஏற்றுக் கொள்ளப் பெற்றாலும், அது செம்மையான நிலையை அடைந்துள்ளது என்று கூறமுடியாது. இருமொழி வல்லார் பலர் உண்டு. ஆனால், மொழிபெயர்ப்புத் துறை இன்னும் தளர்நடைப் பருவத்திலேயே உள்ளது. அத் துறையில் யார் வேண்டு மானாலும் ஈடுபடலாம் என்ற தவறான ஒரு கருத்தும் பரவியுள்ளது. மொழி பெயர்ப்பு நூல் ஒன்றைப் படிக்கும்பொழுதே இது மொழிபெயர்ப்பு என்று கூறும்படி அமைந்துவிடுகிறது. ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்வ தாயின் அதிலுள்ள கருத்தும், அதே உணர்ச்சியும் தமிழில் வெளியிடப்பட வேண்டுமே தவிர ஒவ்வோர் ஆங்கிலச் சொல்லுக்கும் ஒவ்வோர் தமிழ்ச் சொல் இருத்தல் வேண்டும் என்று நினைப்பது தவறு. அது சொற் பெயர்ப்பே தவிரத் தமிழாக்கம் அன்று.

நம் பெரியாரவர்கள் மொழிபெயர்ப்புத் துறை நன்கு வளர்ச்சியடையாத 1925-30ஆம் ஆண்டுகளில், ஆங்கிலக் கருத்துகளைத் தமிழில் கூறல் முடியாது என்று பரவலாகப் பலரும் நம்பியே அந் நாளில் மிகச் சிறப்பான முறையில் தமிழாக்கஞ் செய்திருக்கிறார். காந்தியடிகளின் எழுத்து களைப் பெரும்பாலும் தமிழாக்கஞ் செய்துள்ளார். அடிக ளார் நடையழகும் பொருளாழமும் குன்றாமல் தமிழாக்கஞ் செய்திருப்பது அறிந்து மகிழற்குரியது.

25-9-1929ஆம் ஆண்டில் அடிகளாரின் 'யங் இந்தியா' பத்திரிகையில் ஆங்கிலத்தில் அடிகள் வரைந்ததையும் அதன் தமிழாக்கத்தைத் திரு.வி.க. தம் பத்திரிகையில் தந்ததையும் கீழே காணலாம்:

"The news of Kohat set the smouldering mass aflame. Something had got to be done. I passed two nights

in restlessness and pain. On Wednesday I knew the remedy. I must do penance. In the Satygrah-ashram at the time of morning prayer we ask Shiva, God of Mercy to forgive our sins knowingly or unknowingly committed. My penance is the prayer of a bleeding heart for forgiveness for sins unknowingly committed."

"கோஹத் செய்தி எனது உள்ளத்தில் அனல் மூட்டிற்று. ஏதாயினுஞ் செய்ய வேண்டுமென்று தோன்றிற்று. இரண்டு நாளிரவு அமைதியின்றியும் நோயோடுங் கழித்தேன்; புதன்கிழமை மருந்து கண்டேன். நான் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டும். சத்தியாக்கிரக ஆசிரமத்தில், காலை ஜெபத்தில், தெரிந்தோ தெரியாமலோ செய்யப்படும் எங்கள் பாவங்களை மன்னிக்குமாறு கருணைக் கடவுளாகிய சிவபரம்பொருளை நாங்கள் வேண்டுகிறோம். அறியாமற் செய்த பாவமன்னிப்புக்குரிய பிராயச்சித்தம் செந்நீர் பொங்கும் எனது இதயத்தினின்றும் எழும் ஜெபமேயாகும்."*

அடிகளார் சபர்மதி ஆஸ்ரமத்தை முதன்முதலில் நிர்மாணித்தபொழுது அதற்கெனச் சிலபல விதிகளையும் தோற்றுவித்திருந்தார். அவை ஆங்கிலத்திலும் இந்தியிலும் எழுதப் பெற்றிருந்தன. நம் பெரியோரவர்கள் 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்' என்ற நூலில் இவ்விதிகளைத் தமிழாக்கம் செய்து தந்துள்ளார். அதில் ஒரு பகுதியை மட்டும் ஈண்டுத் தருகிறேன். அரசியல் கருத்து ஒன்றை அதிலும் அடிகளார் தோற்றுவித்த சிக்கலான அரசியல் கருத்து ஒன்றை 'சுதேசியம்' என்பது பற்றிய கருத்தைக் கூறும்

* 'சைவத்தின் சமரசம்', பக்கம் 86, 87.

பகுதி இது. இதனைத் தமிழாக்கஞ் செய்துள்ளார் பட்டம் பெறாத திரு.வி.க. அவர்கள்:

"பொருளாக்குவோர் வாயிலாகவோ, மற்றெவ் வாயிலாகவோ மோசம் பொருந்தத்தக்க பொருள் களைப் பயன்படுத்தல் மெய்ம்மைக்கு மாறுபடுவ தாகும். ஆதலால் உண்மை கடைப்பிடித்து நிற்போன் மான்செஸ்டரில்— ஜெர்மனியில்—அல்லது இந்தியா வில் இயந்திர சாலைகளில் செய்யப்பட்ட பொருள் களை உபயோகித்தல் கூடாது. ஏன்? அவைகளில் மோசமில்லை என்று அவனுக்குத் தெரியாமை யால் என்க. மேலும் இயந்திரசாலைகளில் தொழிலாளர் பெரிதும் வருந்துகின்றனர். இச்சாலைகளில், தொழில் புரியும் மக்கள் அகால மரணமடைகிறார்கள். இம்மரணத்துடன் சாலைகளில் தீ உபயோகித்தல் பல உயிர்களின் அழிவிற்குக் காரணமாயிருக்கிறது. அந்நிய சாமான்களும், இயந்திரத்தால் செய்யப்பட்ட சாமான்களும் அஹிம்சா தர்மவான்களை அத்தர்மத்தி னின்றும் விலக்கித் தள்ளுவனவாயிருக்கின்றன. இச் சாமான்களின் உபயோகம் கள்ளாமைக்கும் பொருள் திரட்டாமைக்கும் நேர்மாறாக நிற்பது. கைத்தறியால் நெய்யப்படும் நமது எளிய துணிகளுக்குப் பதிலாக அந்நியத் துணிகளை உடுத்துகிறோம். வழக்கமென்பது அழகை அளிப்பதாகக் கொள்ளப்படுவதே இதற்குக் காரணம். உடலைச் செயற்கையால் அணி செய்வது பிரமசரியத்துக்குத் தடையாகும். பிரமசாரி எளிய உடை தவிர மற்றெதையுந் தள்ளக் கடவன். பொத்தான் அந்நியவெட்டு முதலிய யாவற்றையும் தவிர்ப்பதற்கும், எளிய உடை அணிவதற்கும், எளிய வாழ்வுக்கும் சுதேச விரதம் வேண்டற்பாலது.

ஆதலால், வாழ்வின் ஒவ்வொரு கூறிலும் சுதேசியம் மருவல் வேண்டும்...”*

இதனைப் படிப்போர் இதனை மொழிபெயர்ப்பு என்று கூறத் துணியார். இதிலிருந்து பெரியாரின் தமிழாக்கத் திறனை ஒருவாறு அறிந்துகொள்ள முடிகிறது.

## கல்லாத கலையே இல்லை

சுருங்கக் கூறுமிடத்து, இப் பெரியாரின் எழுத்துகளைப் படிக்குமிடத்து வேதம் உபநிடதத்திலிருந்து, சிவஞான போதம். சித்தியார் என்பவற்றிலிருந்து, டார்வின் கொள்கை. அணுபற்றிய விஞ்ஞானம். டாக்டர் மார்ஷல் பொருளா தாரத் தத்துவம் முதலியவற்றிலிருந்து கார்ல் மார்க்ஸ் தத்துவம்வரை இப்பெரியார் கல்லாத கலையே இல்லை என்பது இவர் சொல்லாலே தோன்றி நிற்கின்றது. ஆனால், அன்று இத்துணைக் கற்றிருந்த அனுமனைக் கண்டு ‘யார் இச்சொல்லின் செல்வன்?’ என்று வினவுதற்கு ஓர் இராமன் இருந்தான். இன்றோ இத் துரதிட்டம் பிடித்த தமிழ்நாட்டில் தோன்றிய இப்பெரியாரைச் சொல்லின் செல்வர் என்று அழைக்காவிட்டாலும், அவருடைய பெருமையை அறிந்து போற்றுதற்குக்கூட நாதி இல்லாமற் போய்விட்டது. இன்னஞ் சில ஆண்டுகள் கழிந்தால் திரு.வி.க.வை யாரென்று கூட அறிந்துகொள்ளாமற் போகும் நிலை ஏற்படலாம். அவ்வாறு ஏற்பட்டாலும் அதில் வியப்படைய ஒன்றும் இல்லை. யான் எழுதிய ஒரு சிறு நூலுக்கு அணிந்துரை தந்த பெரியார், ‘ஐயோ! தமிழ்நாடே! உனக்கு ஓர் ஐயோ!’ என்று எழுதினார். அதனைத்தான் மீட்டும் ஒரு முறை சொல்ல வேண்டிய சூழ்நிலையில் உள்ளோம்.

* ‘மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்’, பக்கம் 394, 395.

## தமக்கே உரியர் என்றால்

பெரியோர்களே! இந்த மூன்று நாட்களிலும் தமிழ் கூறு நல்லுலகம் பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டுகளில் நமக்கு அளித்த ஒரு மாபெருஞ் செல்வரைப் பற்றி ஒருவாறு கண்டோம். கருவில் திருவுடைய பெரியார் இந்த மொழிக்கும் இலக்கியத்திற்கும் ஆற்றிய தொண்டு அளவிடற்கரிய தொன்றாகும். பல்வேறு முகமுடைய அப்பெரியாரின் மூன்று முகங்களைப்பற்றி மட்டும் இம் மூன்று நாட்களில் பேச முடிந்தது. யானை கண்ட குருடர்போலத் தமிழர்களில் பலரும் திரு.வி.க: என்ற யானையின் முழுத்தன்மையை அறியாமல் அவர் குறிப்பிட்ட ஒரு சமயவாதி என்றும், அரசியல்வாதிதான் என்றும், அதிலும் காந்தீயவாதி என்றும், மார்க்கிஸவாதி என்றும். தொழிலாளர் இயக்கவாதி என்றும், தமிழாசிரியர் என்றும் தத்தமக்கே உரிமை கொண்டாடினர். ஆனால், அப் பெரியாரை தயைகூர்ந்து புட்டியில் அடைத்து முத்திரை இடவேண்டா. அவர் கூறும் பரம்பொருள் கற்பனைக்கு அடங்காதிருப்பது போல அவரும் முத்திரைக்குள் அடங்காதவராகவே இருக்கின்றார். ஆம், இருக்கின்றார் என்று நிகழ்காலத்தால் மறுபடியும் குறிக்கின்றேன்.

## தமிழ் உள்ளவரை

தமிழ் என்று ஒரு மொழியும், தமிழின் என்று ஓர் இனமும் இருக்கின்றவரை, தமிழ்ப் பண்பாடு என்ற ஒன்று இருக்கின்றவரை அத் தமிழ்ப் பண்பாடு எத்துணைப் பரந்து விரிந்து உள்ளது என்பதைத் தமிழனுக்கும் உலகிற்கும் எடுத்துக்காட்டிய பெரியார் இருந்துதான் வருவார். ஐந்தேகால் அடி உயரமும் 110 பவுண்டு எடையுமுடைய திரு.வி.க. என்ற மானிட வடிவம் ஒன்றுதான் இன்றில்லை. ஆனால், அந்த வடிவத்தின் அகத்தே தோன்றிய ஒப்பற்ற

கருத்துக்கள், சிந்தனைகள், சமரச ஞானம் என்பவை இன்றும் இருக்கின்றன. இவற்றிற்குச் சாவேது? திரு.வி.க. என்ற மனிதரை இக் கருத்துகளிலிருந்து தனியே பிரித்தல் இயலாத காரியம். ஏனையவர்களைப் பொறுத்தமட்டில் கருத்து களையும் மனிதர்களையும் பிரித்து விடலாம். காரணம், அவர்கள் இக் கருத்துகளைக் கூறினார்கள். பிரசாரம் செய்தார்கள், எழுதினார்கள் என்பது தவிர வேறு இல்லை. அவர்களே கருத்துகளாக மாறினார்கள் என்று கூறிவிட முடியாது. எனவே, கருத்துகள் வேறாகவும் அதனைக் கூறுகின்ற அவர்கள் வேறாகவும் இருந்தார்கள். அத்தகைய மனிதர்கள் காலமாகும் பொழுது அவர்கள் இறந்து விட்டார்கள் என்று கூறுவது முற்றிலும் பொருத்தமே.

## கருத்தும் மனிதரும் ஒன்றே

ஆனால், திரு.வி.க. என்ற மனிதர் இந்தச் சமரசம் என்ற கொள்கையைப் பிறருக்கு எடுத்துக் கூறுவதோடு நிற்கவில்லை. குறிப்பிட்ட சமயத்தார்கள் தங்களுடை யவர்கள் என்று போற்றி வழிபடும் ஞானசம்பந்தர், நம்மாழ்வார் என்ற பெரியார்களிலிருந்து திருவள்ளுவர்வரை அனைவரிடமும் காணப்பெறும் சமரசரத்தைக் கண்டெ டுத்துக் கூறிய திரு.வி.க., தாம் வேறு தாம் கூறும் கருத்துக்கள் வேறு என்றில்லாமல் தாமே கருத்துகளாய் மாறிவிட்டார். அவருடைய வாழ்வு முழுவதும் சமரச ஞானியாய் வாழ்ந்தார். புறத்துறவை வெறுத்து அகத்துறவை வற்புறுத்திய அவர், 'நீத்தார் பெருமை' என்பது அகத்துறவுடையாரை என்று அஞ்சாமல் எழுதிய அவர், இல்லற ஞானியாய், இராயப்பேட்டையில் வாழ்ந்த தவமுனிவராய்த் திகழ்ந்தார். காட்டில் வாழும் முனிவர்கள் தாம் தாம் வீடுபேறு அடையத் தவ முயல்கின்றனர். ஆனால், மீட்டும் மீட்டும் தமிழ் நாட்டில் வந்து பிறந்து என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற தாரக மந்திரப்படி, தாம் என்ஹற நினைவற்று மக்கள்

தொண்டே புரிந்து வரவேண்டும் என்பதே தம் விருப்பம் என்று கூறினார் இராயப்பேட்டை முனிவர்.

இறுதியாக ஒரு சொல் கூறி முடிக்க விரும்புகிறேன். அவர் எழுதிய நூல்களுள் ஒன்றேனும் இன்று கிடைக்க வில்லை. இந்த அவலநிலை தமிழ் நாட்டில் இல்லாவண்ணம் செய்வது பெரியோர் கடனாகும்.

பேராசிரியர் கல்கியின் நினைவுச் சொற்பொழிவை நிகழ்த்துமாறு பணித்த சென்னைப் பல்கலைக் கழகத் தார்க்கும் டாக்டர் மு.வ. அவர்கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.



